௳

சிவமயம்.

# ஸ்ரீ தத்வராயசுவாமிகள்.

## சரித்திரச்சுருக்கம்.

பூமிதேவிக்குத் திருமுகம்போலச் சிறந்திருக்கிற தமிழ் நாடு பலவற்றினு மேம்பட்ட நடுநாட்டில் வீரமர்நகரத்தில், சற்றேறக்குறைய முந்நூறுவருஷத்திற்குள்ளாக மாத்துவப்பிராமணருக்குள்ளே யிவ்வுலகஞ்செய்த மாதவமென்று சொல்லஇரண்டு புண்ணியமூர்த்திகள் அவதரித்தார்கள். அவர்கள் அம்மான் * மருமகன் என்கிற முறைமையையுடையவர்கள். அவ்விருவரும் வடமொழி தென்மொழி யிரண்டிலும் வல்லவராய்ச் சிவாசாரமுதலியவைகளிற் சிறந்தவர்களாய்ப் பிரமசாரியர்களாகியேயிருந்து தங்கள்கருமத்தில் வழுவாது நடந்துவருநாளில், வேதாந்தசாஸ்த்ரம் யாவையும்படித்து ஐயந்திரிவு அறியாமையில்லாமல் அவற்றின்பொருள்களை ஆராய்ந்தறிந்தெப்போதுந் தத்வவிசாரணையும் ஸ்வரூப விசாரணையுஞ் செய்துவருதலாலும், அவைகளையேயவர்களுக்கும் போதித்தலாலும், பெரிய விருக்ஷந் தோன்றற்கிடனான சிறிய ஆலவிதைபோல் ஞானங் குரமாணவராதலாலும் இவர்களுக்கு அப்பருவத்திலேதானே பூர்வநாமம் போய்த்தத்வராயரென்றும், ஸ்வரூபானந்தரென்றும் காரணநாமமுண்டாயின.

(இவர்கள்) பூர்வ தவக்குறைவால்வந்தவர்களாதலால் ஆத்மவிசாரணை செய்யவேண்டுமென்கிற விவேகமே மேலிட்டாலோசித்தார்கள். அவையென்னெனில், இம்மையில், யாவரி

---

* ஸ்வரூபானந்த சுவாமிகளுடன் பிறந்தாள்பிள்ளை — தத்வராயசுவாமிகள்.

னுஞ் சிறந்த அரசர்கள்வாழ்வுஞ் சிலநாளிலழிந்து விடும்; அ
னால் வருமின்பமு முள்ளிப்பூவின்றேனை யொக்குமென்று
மறுமையில், இந்திராதிதேவர் பதங்களும் ஆயுண் மிகுந்
ருந்து காமாதிதுன்பமுற் றழியுமென்றும் இளமையாதியும் நி
யல்லவென்றும் நினைத்துப் பெண்ணாதி மூவாசையும் துறந்
சாந்திமுதலாகிய குணங்களைத் தமக்கங்கமாகக்கொண்டு தலையி
நெருப்புப்பற்றிக்கொண்டவன் நீர் தேடுதல் போலவும், மிகு
கோடைவெயிலி லகப்பட்டவன் நிழல் தேடுதல்போலவும் அ
தீவிர பக்குவமுடையவர்களாய்ச் சனனமரணமொழிக்கவ
னாசிரியரைத்தேடி அடுக்கவேண்டிப் பலநாள் பலவிடங்க
ளுந் தேடிப்பார்த்துங் கிடையாமல் மிகவும் வருத்தமடைந்து ஒ
நாள், போம்வழியில்ஒருசிறந்தசோலையில்பெரியகல்லாலவிருக்
தின்கீழிருந்தாலோசித்தார்கள். அவையேயென்னெனின், நாம் இ
டித்தேடினால் எத்தனைகாலஞ்செல்லும்; ஆதலால் ஒருவர்உத்த
சையிலும்ஒருவர்தக்ஷிணதிசையிலும் போய்த்தேடிப்பார்ப்போ
நமக்குள் எவருக்குமுன்னே ஆசிரியர்கிடைத்தனுக்கிரகம் பெ
றுக்கொள்ளுகின்றேமோ அவரேமற்றொருவருக்கும் ஆசி
ரென்று நிச்சயித்துக்கொண்டு போனார்கள். அவர்களில்தென்
சதிற்சென்ற ஸ்வரூபானந்தசுவாமிகள் பலதேசங்களிலும்
ஊர்களிலும் பலவனங்களிலும் பல்மலைகளிலும் பலநதிதீரங்
ளும் பலபுராதனாலயங்களிலுந் தேடிக்கொண்டு, திருவரங்க
திருவானைக்காவும் காவேரிநதியும் தெற்காக வடக்கேபோ
திருப்பைஞ்ஞீலியென்கிற சிவஸ்தலத்தையும், திருவெள்ள
யென்கிறவிஷ்ணுஸ்தலத்தைதயும்தன்பாங்கினுடைத்தாயிருக்
கோவத்தனென்னும் ஸ்தலத்துக்குச் சமீபத்திற் போம்பொழு
இவருக்குக் காரணமுமின்றிப் பேரானந்தமும் சரீரத்தி

# சரித்திரச்சுருக்கம்.

ஆகாங்கிதமும் உண்டாகிக்கைகள் அஞ்சலிமுகிழ்த்திடக் கண்ணில் நீர்பெருகக்கண்டு, நான் தேடிவந்த ஞானாசிரியரிருக்கிறதானம் இதுவேயென்று அந்த நகரைப் பிரதக்ஷணமாய் வந்து உள்ளேபோய் இவ்விடத்திலே பெரியவர்கள் உண்டோவென்று விசாரித்தார். அவ்விடத்திலுள்ளவர்கள் இந்த ஊருக்குப் புறத்திலே நாணற்புதலிருக்கின்றது. அதனுள்ளே யொருபெரியவரிருக்கின்றார். அவர் பெயர் * சிவப்பிரகாசசுவாமிகளென்னும், அவர் ஒவ்வொரு தினத்திலே சாயங்காலத்தில் அந்தப்புதலைவிட்டு வெளியில் வருகின்றாரென்றுஞ்சொல்ல, அவ்விடத்திலேபோய், இவர் காத்துக்கொண்டிருக்கிறபோது அந்தச் சிவப்பிரகாசசுவாமிகள் ஒருநாள் வெளியிலேவந்தார். ஸ்வரூபானந்தசுவாமிகள் நமஸ்காரம்பண்ணி நெடுங்காலமாயலைக்கின்ற சனனமரணப் பிரவாகத்தினின்றும் அடியேன் கரையேற ஞானோபதேசம் பண்ணவேண்டுமென்று பாததாமரையைப்பிடித்துக்கொண்டு முறையிடும்பொழுது, நாம் நினைத்திருந்த அதிதீவிரபக்குவனிவனேயென்று ஆலோசித்து, அப்பா! உனக்காகத்தான் இங்கே இதுவரையில் யானிருந்தேனென்று மேலான மஹாவாக்யத்தை அநுக்கிரம்பண்ணச் சிரவணாதிகளால் அவ்வநுக்கிரகத்தைப் பெற்றுக்கொண்டு ஸ்வாநுபூதியாகவேண்டிச் சமாதிபண்ணிக்கொண்டிருக்குநாளில், வடக்கே தேடிக்கொண்டுபோன தத்வராயசுவாமிகள் அத்தேசமுழுமையுந்தேடி ஆசிரியர்கிடையாமல் மறுபடியுந் தென்றேசத்திற்கேவந்துஸ்வரூபானந்தசுவாமிகளைக்கண்டார். ஸ்வரூபானந்தசுவாமிகளுந் தனக்காசிரியர்கிடைத்ததும் அநுக்கிரகம்பெற்றுக்கொண்டதும் பிறவுஞ்சொல்ல, மிகவும் அதிசயமடை

---

* சிவப்பிரகாசசுவாமிகள் பூர்வஸ்தலம் திருவாரூர்—இவர் அத்தவைதிக சைவர்.

து ஸ்வரூபானந்தசுவாமிகளை வணங்கி மேலான ஞானநுக்கிரப் பெற்றுக்கொண்டு நிருவிகற்ப சமாதியிலிருந்து நித்ய நிரதிசயா னந்தத்தை யனுபவித்துக்கொண்டிருக்கின்றகாலத்திலே பெரி யோர்களுக்குத் தாம் பெற்றபேறு உலகம் பெறவேண்டுமென் கிற சங்கற்பம் சுபாவமானபடியால் ஸ்வரூபானந்தசுவாமிகள் திருவுள்ளத்தில் இந்தத் தத்வராயர் தென்மொழியிற் பாடுதலில் மிகவும் வல்லவராயிருக்கையால் இவரைக்கொண்டு லோகோப காரமாச் சில சாஸ்திரங்களைச்செய்விக்கவேண்டுமென்று நினைத் துஉபாயமாய்க் குறிப்பித்துக்கொண்டுவர, அவர்சதாநிஷ்டையில் இருக்கின்றவரானபடியால் அவருக்கு இந்தக்குறிப்பு மிகவுந் தோன்றும விருந்ததுகண்டு, இக்கருத்து நன்றாய்த் தெரிவிக்க வெண்ணி ஒருநாள் அமாவாசையில் அப்யங்கஞ்செய்யவேண்டி வர்போல் ஏவலாளரைத் தயிலங்கொண்டுவாருமென்றுசொல்ல அருகேநின்ற தத்வராயசுவாமி அமாவாசையென்கிறதை மன திலே நினைத்து அம்மென்றார். அப்போது ஸ்வரூபானந்தசுவாமி கள் கோபித்துக்கொண்டவர்போல விதிவிலக்கென்கிற சங்கற் பமுங்கடந்து காலாதீதராய்நின்ற நமக்கும் விதிவிலக்குண்டோ நம்மெதிர்நிற்கவேண்டாம்போமென்றுசொல்லத், தத்வராயசுவா மிகள் அகண்டபரிபூரண சச்சிதானந்தமாய் விளங்குகின்ற சுவா மிகளுக்கும் நான் விதிவிலக்குக்கற்பித்த குற்றத்தால்இனிநானிந் தச்சரீரத்தோடிருத்தல்தகாது, கட்டில் விழுந்திறத்தலன்றி இதற் குப்பரிகாரம் வேறில்லையென்றுநினைத்து ஆசாரியர் சந்நிதானத் தைநோக்கிக்கொண்டே பின்னிட்டபடிநடந்து ஆராமை மேலி ட்டுக் கண்களிற் சலம் தாரைதாரையாய்ப் பெருகப் பரமாசாரி யராகிய சிவப்ரகாசசுவாமிகளையும் ஆசாரியராகிய ஸ்வரூபானந்த சுவாமிகளையுங் குறித்து ஸ்வரூப சாக்ஷாத்காரவிலக்ஷத்தை நவ நவ மாய்த் தமது ஸ்வாநுபூதியின் கணனுபவித்தபிரகாரம் பின்னுள்ள

வாத்மகோடிகளும் அவ்வனுபூதியைப் பெற்றுய்யும்படி ஜீவகா
ருண்ணியத்தினால் தமது ஸ்வரூபானுபூதி ஆவேசத்தால் ஸ்தோத்
திரமாய்ச்—சிவப்ரகாசவெண்பா—தத்வாமிர்தமென்னும் இரண்டு
டன்—திருத்தாலாட்டு, பிள்ளைத்திருநாமம், வெண்பாவந்தாதி, கலி
த்துறையந்தாதி, சின்னப்பூவெண்பா, தசாங்கம், இரட்டைமணி
மாலை, மும்மணிக்கோவை, நான்மணிமாலை, கலிப்பா, ஞான
னோதன்கலம்பகம், உலா, சிலேடையுலா, நெஞ்சுவிடுதூது,
மடல், அஞ்ஞவதைப்பரணி, மோகவதைப்பரணி, அமிர்தசார
ண்பாவென்னும் இந்தப்பதினெட்டையும் திருவாய்மலர்ந்தரு
கொண்டுபோம்பொழுது அருகில்நின்ற மாணாக்கர்கள் அப்
தைக்கப்போதே அப்பிரபந்தங்களைத் தனித்தனியெழுதிக்
ாண்டுபோய் ஸ்வரூபானந்தசுவாமிகள் சந்நிதானத்திற் படிக்
ச், சுவாமிகளும் அச்சாஸ்திரங்களில் விருப்பமில்லாதவர்போல்
மயிருள்ளவள் வாரிமுடிக்கிறதுபோல வாயுள்ளவன் பாடியனுப்பு
கிறானென்று திருவாய்மலர்ந்துகொண்டிருந்தார். அப்படியிருக்க
இங்கே தத்வராயசுவாமிகள், ஆசாரியர் தரிசனத்துக் கபாத்திர
னாய்விட்டேனே, இனி நானெந்தஜனனத்தில் தரிசிப்பேனென்
னும் ஏக்கத்தினாலே தாயைக்காணாத இளங்குழந்தையைப்போல
அழுது முகம்வீங்கிப் பாடுதுறையில் திருவடிமாலையைப் பாடிக்
கொண்டுவிழுந்திறக்கக் கடலுக்குச் சமீபத்தில் போம்பொழுது,
அந்தச்செய்தியையு மாணாக்கர்கள் வந்துசொல்ல ஸ்வரூபானந்த
சுவாமிகளறிந்து, குருவுக்குவீங்கியை வரச்சொல்லுமென்று கட்
டளையிட, அதைக் கேள்விப்பட்ட தத்வராயசுவாமிகள் தம் தேக
வருத்தமுழுதும் நீங்கிநடக்கச் சக்தியும் பெற்றுக்கொண்டு, சுவா
மிகளால் அனுப்பப்பட்ட மாணாக்கர்களைப்பார்த்துக் கருணாநிதி
யாகிய சுவாமிகள் மகாஅபராதியாகிய வென்னையும்வரக் கட்டளை
யிட்டார்களோவென்று பேரானந்தமடைந்து மேற்படி பிரபந்தத்

# தத்வராயசுவாமிகள்

...தில் திருவருட்கழன் மாலை, போற்றிமாலை, புகழ்ச்சிமாலை, முதலா னவைகளையும் பாடிக்கொண்டு சிரசின்மேல் அஞ்சலிபஸ்தராய்ச் சுவாமிகளுடைய சந்நிதானத்தைப் பார்த்துக்கொண்டே வந்து பிரதக்ஷணம்பண்ணி அஷ்டாங்க பஞ்சாங்கமாக அநேகநமஸ்காரஞ் செய்து முன்னிலும் அதிகமாய்க் கண்களில் நீர்பெருகமயிர்க்கூச்செறிந்து பரவசப்பட்டு நெஞ்சமுருகி ஸ்தோத்திரம் பண்ணிக் கொண்டு நிற்கும்போது சுவாமிகளும் இருவென்று கட்டளையில் இருந்து சுவாமிகளின் பணிவிடை செய்துகொண்டு மிகவும் ...ப ... சந்தோஷமடைந்திருக்கும்நாளில், சுவாமிகள், தத்வராயர் ...னைத் ...டயில் சாஸ்திரங்களையெல்லாம் பார்வையிட்டுச் சொல்லமை... பொருளமைதியுநோக்கிச் சந்தோஷத்தைத் தனக்குள்ளே மிகவுந் ...கொண்டு இந்தச் சாஸ்திரங்கள் மிகக் கற்றவர்க்கன்றி மற்றவிக்க ...க்குதவாவென்று நினைத்துத் தத்வராயசுவாமிகளைப்பார்த்து, அ... ...பா! இந்தச்சாஸ்த்ரங்களெல்லாம் உனக்கே பாடிக்கொண்டனை ...யன்றி யுலகத்தாருக் குபயோகமாகப் பாடவில்லையே என்றருளி ...ச்செய்ய அப்போது, மடைத்தொழிலாளர்கள் சுவாமீ! அமுது கொள்ள வெழுந்தருள வேண்டுமென்று விண்ணப்பஞ்செய்யச் சுவாமிகளும் நித்யகர்மங்களை முடித்து அமுதுக்கெழுந்தருளத், தனியேயிருந்த தத்வராயசுவாமிகள் ஆசாரியர் திருவாக்கை ஆலோசித்து அப்படியே தாமும் நினைத்துச் சுவாமிகள் அமுது கொண்டு வருமுன்னர் எல்லாருக்கும் பிரயோசனப்பட மோகவ தைப்பரணியில் ஒருபிரகரணமாகச்சசிவர்ணபோத மென்னும் ஒருசாஸ்த்ரத்தைச்செய்து சுவாமிகள் திருவடியிலே வைத்து நமஸ் காரம்பண்ணச், சுவாமிகளும் தத்வராயர் விரைந்துபாடினதையும் அச்சாஸ்த்ரத்தின் பாகத்தையும் பார்த்துச் சந்தோஷமடைந்தார். பின்னும் தத்வராயசுவாமிகள் சில வேதாந்த சாஸ்த்ரங்களுஞ் சில மத சித்தாந்த நூல்களுஞ் செய்துகொண்டு நிர்விகற்பசமாதியில்

# சரித்திரச்சுருக்கம்.

ருக்கும்நாளில், யாத்திரைசெய்கின்றவராகிய சிலஆசாரத்தியர்களு
ஞ்சிலவித்வான்களும் ஸ்வரூபானந்த சுவாமிகளின் சந்நிதானத்
தில் வீற்றிருக்கிற தத்வராயசுவாமிகளின் முன்னேவந்து போர்
முகத்தாயிரங்களிற்றி யானையைக்கொன்ற சுத்தவீரனைத் தலைவ
னாகக்கொண்டு பாடப்படும் பரணியென்னும் பிரபந்தத்தை வீர
மென்பது கனவிலுங்கேட்டறியாத உம்முடைய ஆசான்மேலெப்
படி நீர் பாடினீரென்றுகேட்க, அதற்குத் தத்வராயசுவாமிகள் நம்
முடையசுவாமிகளும் சிஷ்யருடைய அகங்காரமாகிய யானையைக்
கொல்லுதலாற் பாடினேமென்று சொல்ல, அதற்கு அவர்கள் நீர்
சொல்லும் அகங்காரயானை கண்ணுக்குப் புலப்படாமையால் ஒவ்
வாது; ஆயினும் ஒரு சிஷ்யனுடைய அகங்காரமாகிய யானையைக்
கெடுத்தற்கு அநேகநாட் செல்லுமே? இவர் ஏககாலத்தில் ஆயி
ரஞ்சிஷ்யர்கள் அகங்காரத்தைக்கெடுத்த தெப்படியென்றுவினவ,
அதற்குத் தத்வராயசுவாமிகள் அனுபவத்திற் காட்டவேண்டு
மென்று பிரதியுத்தரமொன்றுஞ் சொல்லாமல் சமாதி செய்தி
ருந்தார். ஸ்வரூபானந்தசுவாமிகளின் சந்நிதானம் பட்டமையால்
வந்த வித்வான்களனைவரும் இராப்பகல் ஒன்றுந்தெரியாமல்
மூன்றுதினமளவும் பரிபூரணதசையிலிருந்தார்கள். நாலாநாள்
தத்வராயசுவாமிகள் திருக்கண்விழித்தபின்பு அவ்வித்வான்களும்
எழுந்து சுவாமிகளையும் தத்வராயசுவாமிகளையும் நமஸ்காரம்
பண்ணி நாங்களறியாமையினால் ஆக்ஷேபித்தோம். தங்கள்
சந்நிதானத்தினது விசேஷம் ஏககாலத்தில் பதினாயிரஞ்
சிஷ்யர்கள் நேரிட்டாலும் பரிபாகப்படுத்தத்தக்க வல்லபமுள்ள
தென்று அவர்கள் பலரும் இப்பிரபந்தங்களைக்குறித்து ஒவ்வொ
ருகவிகளைச்சாத்தி மாணாக்கர்களாய் வழிபட்டுப் போனார்கள்.
பின்பு தத்வராயசுவாமிகள் லோகோபகாரமாக வேதாந்த சாஸ்த்ரத்
திற்குள்ளே சுவானுபூதிக்கிசைந்த சாரமாயுள்ள செய்யுட்களை

யெல்லாந்திரட்டிப், பெருந்திரட்டு, குறுந்திரட்டென்ன இரண்டு சாஸ்த்ரத்தை அருளிச்செய்தார். இப்படியாகச்சுவாமிகளுடனிணைபிரியாமல் இருக்கும்பொழுது ஸ்வரூபானந்தசுவாமிகள் யாதோ ஒரு திருவிளையாட்டை நினைத்துத் தத்வராயசுவாமிகளை வைத்துத் தாம் பிரிந்து புறப்பட்டுப்போகையில் இவரும் பின்றொடரச், சுவாமிகளுந்தமக்கு நேரிட்டபடி வழியொன்றின்றிக் காடு நாடு மலைகள் முதலான விடங்களிற் சுற்றித்திரிந்து சமுத்திரத்தின் சமீபத்திற்போயினார். தத்வராய சுவாமிகளும் உடனாகவேபோய் ஸ்வரூபானந்த சுவாமிகள் கடன்மேல் நடக்கக் கடற்சலம்விலகி வழிகொடுக்க அதைக்கண்டு தாமும் கடலில்நடக்க ஜலம் வழிவிடாமையால் கரையிலே நின்று பசுவைநீங்கிய விளங்கன்றுபோலக் கதறித்திக்குகள்தோறுந் தேடும்பொழுது ஸ்வரூபானந்தசுவாமிகளுந் தரிசனங்கொடுத்துப் பின்பு அகண்டபரிபூரண சச்சிதானந்தமாய் விளங்கினார். அதைக்கண்ட தத்வராயசுவாமிகள் அதிசயமும் ஆராமையும் அடைந்து சுவாமிகளுக்குச் செய்யவேண்டிய உத்தரகிரியைகளெல்லா முடித்துச் சுவாமிகளையே நினைத்துக்கொண்டிருந்து பிரிவாற்றாமையாலோ பேரான்பினாலோ சுவாமிகளையன்றித் தமக்கொருசெயலின்மையினாலோ தாமும் உடனே பரிபூரணதசையடைந்தார். இவர்களுக்குத் திருவலஞ்சுழியும் வாசஸ்தானம். சிவப்ரகாசசுவாமிகள் சமாதி திருவாரூர் சமீபஸ்தானம். ஸ்வரூபானந்தசுவாமிகள் சமாதி திருவண்ணாமலைக்கும் விருத்தாசலத்துக்கு மத்தியஸ்தானம். தத்வராயசுவாமிகள் சமாதி சிதம்பரத்துக்கும் விருத்தாசலத்துக்கு மத்தியஸ்தானம். இந்தச்சரித்திரம் மேற்படி சுவாமிகளுடைய பரம்பரை மீனாக்கர்கள் அனுப்பின பிரதிகளின்படி பதிப்பிக்கப் பெற்றது.

தத்வராயசுவாமிகள் சரித்திரச்சுருக்கம் முற்றிற்று.

குறிப்பு;—

இங்ஙனம் ஸ்ரீ தத்வராயசுவாமிகள் திருவாய் மலர்ந்தருளிய பாடுதுறைப்பிரபந்தத்தின் ஆதியில் எழுதப்பெற்றிருக்கிறது. பின்னர், இப்பெருந்தகையார் சமாதியின்மீது கருங்கல் ஆலயமமைக்கப்பட்டுவிருத்தாசலத்திற்கும் சிதம்பரத்திற்கும் மத்தியில் எறும்பூர் என்றுவழங்கிவரும் இறும்பூதூரில் "ஸ்ரீ தத்வேசுரர் கோயில்" எனவழங்கப்பெற்று உத்ஸவாதிகளும் நடந்துவந்தன. பின், ஆலயமும்பழுதுற்றுக் காலவேற்றுமையால், ஆலயத்தின் நாற்புறமும் இலைக்கள்ளிப்புதர்கள்மூடி, குளங்களெல்லாந் தூர்ந்து, வளங்குன்றியிருந்தகாலத்தில் ஸ்ரீ தத்வராயசுவாமிகளின் அடியவர் பரம்பரையில் இருந்துவந்த சதானந்தசுவாமிஎன்பவர் கிராமங்களில் அரிசிமுதலியன பெற்று ஒருவேளைப் பூஜையாற்றிவந்தனர். இங்ஙனமிருக்குங்கால், ஸ்ரீ சமிவனக்ஷேத்திரம் என்னும்கோயிலூரில் அருளிறையாயெழுந்தருளித்தனையண்மிய அடியவர்களின் ஆணவாதி மும்மலமகற்றி அறிவுருவாக அநுக்கிரகஞ் செய்தருளியிருந்த ஸ்ரீ முத்துராமலிங்க ஞானதேசிகவடிகளின் திருவருட்பேறுபெற்றவள்ளலும், கருணாநிதியென ஸ்ரீ சிருங்ககிரிஜகத்குருபீடம் ஸ்ரீ நரசிம்ம பாரதியவர்களால் க்காரணநாமமிட்டழைக்கப் பெற்றவரும் ஆய ஸ்ரீ சிதம்பரசுவாமிகளின் மாணாக்கராய் ஸ்ரீ சிதம்பரத்தில் அரியமடாலய மமைத்து அணுகிய அடியவரகவிருளகற்றுந் தினமணியாய் விளங்கியிருந்த ஸ்ரீ பொன்னம்பலஞானதேசிகரவர்கள் ஸ்ரீ தத்வராயப் பெருந்தகையால் பாடியவாயிற்றேனூறும்படி பாடியருளிய பாக்கணலமும் பொருட்செறிவுங்கண்டு, அப்பெருந்தகையின் சமாதிகாணும் அவாப்பெருக்கத் துடனிருந்தனர். இங்ஙனமிவரிருக்க, ஸ்ரீ தத்வராயசுவாமிகள் சமாதியிற் பூஜைசெய்து

கொண்டிருந்த சதானந்தசுவாமிகள் கனவில், பொன்னம்ப
ஆலயமியற்றுவன் எனத்திருவருடோற்றுவிக்க அவர் உ
சிதம்பரம்வந்து ஸ்ரீபொன்னம்பலவிறைவைக்கண்
திதெரிவிக்க, மிக மிக மகிழ்வுற்று உடனே அடியார்
களுடன் சென்றுபார்த்து அவ்வாலயத்தினைச்சூழ்ந்து செ
ள்ள இலைக்கள்ளிப்புதரின் நாப்பணுள்ள நடைபாதையில்
வருங்கால் ஒரு வெண் பொற்காசு காணப் பெற்றது. அத
டுத்து, "திருவருள்திருப்பணிக்குதவிய முதற்றொகை
அடியவர்பாற்கொடுத்துப் பின்சிதம்பரம்வந்து அன்றுமுத
ற்கண்ட ஆலயஜீர்ணோத்தாரணத்தின் பொருட்டுப் பல
களிடம் தெரிவித்துப்பொருளீட்டிச் சுமார் சய்து ரூபா
த்தக்க கருங்கல்லாலயம், மடம், நந்தவனம், திருக்குளம்,
ணரில்லம் முதலியன அமைத்து விளம்பிவரு ஆனிமீ
முறைப்படி கும்பாபிஷேகமியற்றி அதற்குவேண்டிய வி
ங்களும் மூலதனமும் சேகரித்துவைத்தனர். இப்புண்ணி
கரியத்திற்குப் பெருந்துணையாய்நின்றவர் அருங்குணியு
வணிகமணியுமாய உய்யக்கொண்டான் சீர்வயல் அள.
திருவானர், சுப்பிரமணியன் செட்டியார்என்னும் செ
வர். இப்போதுமேற்கண்ட ஸ்ரீதத்வராயசுவாமிகள் ஆல
குறஅமைக்கப்பெற்று அந்தணர்களைக்கொண்டு இரண்டுகா
ஷேக, ஆராதனாதிகளும் வருடந்தோறும்வரும் ஆடிமீ
நக்ஷத்திரத்தில் ஸ்ரீதத்வராயப்பெருந்தகை சமாதிசே
திருநாளாதலின், அன்று அடியவர்கட்கும் ஏழைக
அன்னமளித்தலும் ஸ்ரீதத்வராயசுவாமிகளின் திருவுருவ
குத் தக்கவிமானத்து இரவு திருவோலக்கக் காட்சியு
ந்துவருகின்றன. இவரது அசிரியராகிய ஸ்ரீசொரூபானந்

மிகள் சமாதியைக்காணவேண்டிப் பலதுறையிலும் முயன்றும், ஏணிவுதோன்றும் நிகழ்ச்சியுடன் காணப்பெறவில்லை. தாடர்ந்து விசாரிக்குமளவில், திருநெல்வேலிக்கு வட ழக்கு, தாம்ரபர்ணிக்கரையில் சேந்தமங்கலத்தில் சமாதியுற்றுத் பச்சிற்றம்பலமுடையார் எனவழங்கிவருவதாயும், அவர் சமா வீப்தியதிருநாள் வைகாசிமீ குருவாரம், கேட்டைநக்ஷத்திரம் கல் திதியெனவும் இவர்கள் காலவெல்லைசுமார் (௩) வருடங்கட்கு மேலாயிற்றெனவும் கூறலாம். "அஃதெப்படியறியக்கிடக்கின்ற வெ தனின், சேந்தமங்கலம் கோயிற்கல்வெட்டினாலும், சங்கரானந்தர் ளிக் மணிமாலையிலும் தொகைவகைசொல்லவறிந்தோம் பெருந்தி போடுச்சேகரித்தகாலம், சாலிவாகன சகாப்தம் (௲கூஎ) ல் யுவ ருடம் மாசிமீ திரட்டிமுடிந்தது. தத்வதேசிகர் சந்தானத்தில் நடுடு ம் சந்தானமாகிய சுவயம்பிரகாசயோகி தேவாரந்திருவாய் மொழி (௰௬) ம் எடுத்து அதிகாரம் ௧௨ பாட்டு தாம் திரட்டிச் சங்கரநாராயணத்திரட்டென்றுபெயரிட்டுஇருக்கின்றார். அதுசங் கரநாராயண புரத்திலிருக்கலாம்" எனவுங்குறிக்கப்பெற்ற ஒரு பழைய பனைவடுகாணப்பெற்றது. இவற்றை நம்புதற்குரிய கார ணமும் ஸ்ரீ தத்வராயர் திருவாக்கிற்காணப்பெறுகிறது. அஃதா மாறு, நெஞ்சுவிடுதூதில் "அன்பதனுற்—புண்ணியர்கள் கங்கு ரள் வரும்பொருளைத், தண்ணதியும் பண்டைச் சதுர்மறையும் — விண்ணவரும், வந்துசூழ் சேந்தை வடகுடபால் வந்திப்போர், சிந்தைநோ யெல்லாஞ்சிதையும்வகை —யெந்தைபிரான், மெய் யன்பர்தற்சூழ வீற்றிருக்குமெய்ம்மையிதிற், பொய்யொன்று மில்லை" யென அறுதியிட்டருளியிருக்கின்றனர். பொருளைத் தண்ணதி என்றும், சேந்தை வடகுடபால் இன்ன ஊர்எனக் கூறாது சேந்தைவடகுடபால்என்றும் கூறியிருத்தலினால், தாம்

ரபர்ணிபாயும் திருநெல்வேலியின் வடகிழக்கில் 3-வதுமைலில் தாம்பிரபர்ணிவடகரையிலுள்ள சேந்தமங்கலம் என்னும் ஊரின்கண் வடமேற்குமூலையில், என்னும் பொருளுந்தரலாம் எனஐயுறக்கிடக்கின்றது. அவ்விடத்திற் சமாதிகள்காணப்பெறினும், சொரூபாநந்தர் சமாதிதான் எனப்புலப்படக் காணத்தக்க அறிகுறிகள் காணப்பெறவில்லை. கல்வெட்டும், சங்கரநாராயணத்திரட்டுங்கிடைத்தற்குரிய முயற்சிசெய்து வருகின்றேன். கிடைக்கின் அவற்றையும்அச்சியற்றிப்பிரசுரிக்க ஆவலுடையேன். திருவருள் கூட்டுவிக்குமாக. மேற்கண்ட ஓலை எட்டிற்கண்டபடி பார்க்கின் இற்றைக்கு (1252)வருடத்திற்கு முன்னரிருந்தனரென்பது தெரிகிறது. அன்றியும்சங்கரநாராயணத்திரட்டுச் சேகரித்த ஸ்ரீ தத்வராயசந்தானத்தில் (௩௫) ம் சந்தானமாகிய சுவயம்பிரகாசயோகி திரட்டியதுஎனக்காணப்படுகின்றமையின், சுமார் ௬௱ வருடங்கட்கு முன்னர்ச்சமாதியெய்தி யிருக்கவேண்டுமெனஅறியலாம். இப்பெரியார்வாக்குத் தமிழறியும் விழைவுடையார்க்குப் போமுதனையஇன்சுவைததும்பும் பாக்கள் பலசந்தங்களால் அமைக்கப்பெற்றிருப்பதுடன், தெய்வவேறுபாடின்றி அடங்கன்முறையின் பிள்ளைத்தமிழில் "தம்பத்தனை நிந்தித்தொருவேள்வி தொடங்குந் தக்கன்றலையோடீதானங்குறி கொள்ளும்-கம்பக்களிறேவெங்காலன்னுயிரோவக்கஞ்சன்வரவேவும்வஞ்சச்சகடோதிண்-கும்பக்கரியோமா மருதோதிரு முன்கை குவியுமபடியார்தம் பவமோவிவை யன்றே-செம்பொற்கழ லிட்டுச் சிதைவிப்பதுநின் சிற்றடியேமென வெஞ்சிற்றில்லஞ்சிதையேலே" என்றும் நெஞ்சுவிடுதூதில் "நாயனார்,சுந்தரர்க்குங்குந்திசுதர்க்குந் துணிவுடனப், பைந்தொடிபால் வேந்தர்பாற் பைம்பொனடி-நொந்திடவேஅன்றுதூதானவர் பால்டியேற்கா, வின்று நீதூதாயெழுந்தருளாய்"

என்பனவாயமனைத்துந் தனுப்புதல்போன்றபலபாக்களமுத்தும் பவழமும்போலக்கலந்து செறிந்துநிற்குமழகும்,பக்தர் கணங்களைத்துதிக்குங்கால், பிள்ளைப்பிரபந்தம்"கதியதிதுவாகுமெனமுயலு காமகருமிகள் கணாதர் கபிலர் மாக்கணிகர்மதி யாள ருகர்முதல் வாதர் கலைகள்கத ருமவிறைவர் தாண்,முதியதமிழ் மாலை யணி யவருகாழி முருகர்மறை ஞான முனிவர் மான் முடிவறிவில்பாத மூளரிகொடு தூது முதல்வர்தனி போக மொழிகுவா, ரதிகை நகர்நாத ருருள்செய்திரு நாவினரையரிறை யாளுமியல் பொரு தழுதழுது பாடி யருளுதிரு வாதை யதிபர்சட கோபர் துதிகளே, மதிசெயவெங் நாளு மகிழ்வொடுரை யாடும் வகை யருளு நாதன் வருகவே மணிதர்வடி வாகி வருகருணை வாரி வருகவென யாளி வருகவே" என்பனபோன்ற கவிகளின்வனப்பும், நெஞ்சுவிடுதூதில்" வெய்ய திரிபுரமுஞ் சுட்டானைமெய்ப்படவே துய்ய மறையாலுஞ் சுட்டானை-மெய்யாக, வானுமடிமைபுகுந்தாளானை வல்வினையேன்றானு மடிமைபுகுந் தாளானை-வேனில் வே,ளைப் யப்படுங்கோலஞ் செய்தானை யென்னையிங்ஙன் செய்யதிருக்கோலஞ் செய்தானை-யையமற,நோாகச் செய்தொன்றுஞ்செய்யானை" "மெய்யானை மெய்யர்க்குப்பொய்யானை யஞ்சலெனுங்,கையானை யென்னையிங்ஙன் கையானைப்-பொய்யருளத், தாயானை யொன்றுந்தா னாகானையென்பிழைக்குக், காயானை அங்கைக்கனியானை"என இருபொருட்படவும்நிரையழகுறவும் வைத்துப்பாடிய பாக்களின் மாண்பும், பரணிப்பிரபந்தங்களில் அஞ்ஞவதைப்பரணி, மோகவதைப்பரணி இரண்டினும் தத்துவக்குழாங்களை எதிராக்கி,படைவகுத்து, போர்ச்செறிவுகாட்டி வெற்றிகொளுந்திறனை விவேகிகட்கு அறிவூட்டிச்செல்லும் ஆற்றலும், வெண்பாக்களில் அசைப்பூதம் முதலியனவின்றிமுழுச்சொற்கள் புனைந்து பெரும் பொ

ருள்களைத் திணித்துக்குறுக்கிக் கூறிச்செல்லுங்காட்சியும் அறிஞர்கள் மதிக்குப்பெருவிருந்தாக விருக்குமென்பதிலையமென்னை?

ஸ்ரீ பொன்னம்பலஞானதேசிகர் என்னும் எனது பரமாசிரியர் இத்தகை அருமைநூலை முட்டறப்பலபிரதிகள் கொண்டு ஆய்ந்தச்சிடப்பிரயத்தனஞ்செய்தும் ஆகூழின்மையான் முடிவெய்தாது போயிற்று. பின்னர் எனதாசிரியர் ஸ்ரீ காசிவாசிசிதம்பரஸ்வாமிகள் காலத்தச்சியற்ற வெண்ணி அச்சியந்திரசாலையிற் கொடுத்த நாடொடங்கி இந்நூற்கு அச்சியற்றுங்கால் வந்தஇடுக்கண்கள் எண்ணிலடங்கா. அதனானே இந்நூல் எப்படியாயினும்வெளிவந்துஉலவின்பின்னர்த் திருவருள்கூட்டுவிக்கின் மறுபதிப்பில் அரும்பதவுரை முதலியவும்சேர்த்துப்பல திற ஆராச்சியுடன் முழுச்சரித்திரமும் தெரிந்துவெளியிடலாம். இப் போது ஸ்ரீ பொன்னம்பலஞானதேசிகரவர்களாலும், ஸ்ரீ ராமானுஜஐயா அவர்களாலும் திருத்தியபிரதிகளையும், கபிஸ்தலத்திலிருந்த "தத்துவராயசுவாமிகள்." (இவர்கள் இந்நூலிலே மிகவிறுகியபற்றுடையராயிருந்ததனுல் இப்பெயர்வந்தது,) என்னும் பெரியார்பாலிருந்து ஸ்ரீபொன்னம்பலஞானதேசிகரவர்கள்காலத்தில்வாங்கிமடத்தில் வைத்திருந்ததுமாய ஓலைச்சுவடியினையுமொத்திட்டு எனது சிற்றறிவிற் கெட்டியவளவுஅச்சியற்றியிருக்கிறேன். எனதிதயவனசத்துறை இமகிரிஜனநியருள் செய்யின், பல பெரியோரைக்கொண்டு ஆராய்ச்சிசெய்து மறுபதிப்பு அச்சியற்ற வெண்ணியுள்ளேன்.

---

திருவருள்கூட்டுவிக்குமாக.
பிழையுள தேல் உலகம்பொறுக்க.

பரஞ்சோதி

ஸ்ரீ பொன்னம்பலஸ்வாமிகள் மடம்.
சிதம்பரம்.

# பிழை திருத்தம்.

| பக்கம் | வரி | பிழை. | திருத்தம். | பக்கம் | வரி | பிழை | திருத்தம். |
|---|---|---|---|---|---|---|---|
| ௩௧௯ | ௨ | முழுவற | மொழிவற | ௱௩௧ | ௧௬ | சுருக்கி | சுருகி |
| ௪௭ | ௧ | முன்கைக் | முன்கை | ௱௩௩ | ௧௮ | வேறேனில் | வேறெனில் |
| ௭௧ | ௮ | தீவினையென் | தீவினேயேன் | ௱௩௮ | ௧௭ | னுற்பவ | னூற்பவ |
| ,, | ௯ | தாயறியே | தானறியே | ௱௪௧ | ௨௩ | ஊனே | உளனே |
| ௭௯ | ௰௧ | மற்றிலைப் | மற்றிலை | ௱௪௫ | ௫ | மறுளா | மருளா |
| ௮௨ | ௯ | சொல்விற்பா | சொல்லிப்பா | ௱௪௮ | ௭ | செய்க | செய்ய |
| ,, | ௮ | பரமன் | பிரமன் | ,, | ௨௰ | வறுத்த | லறுத்த |
| ,, | ௰௨ | கண்ணல் | கண்ணு | ௱௪௯ | ௰௭ | யரிவியங் | யாவியுங் |
| ௮௩ | ௨ | பைப்பின் | பைபின் | ௱௫௩ | ௧௦ | யுள்ளது | முள்ளது |
| ,, | ௫ | திலைத்தொல் | திலைதொல் | ௱௫௬ | ௨ | லாவியினு | லாவியு |
| ௮௪ | ௫ | வினைச்சித்த | வினைசித்த | ௱௫௭ | ௧௧ | வுரியவர் | தாவுரியவர் |
| ௯௭ | ௰௯ | விண்ணுணலி | விண்ணுணலி | ௱௯௨ | ௮ | ஞுனுள | ஞுனுள் |
| ௱௯ | ௫ | மாவூமனே | வூமனே | ௱௯௩ | ௨௦ | மதச்சென்ற | மதிசென்ற |
| ௱௯ | ௰௮ | திழுக்குந் | திருக்குந் | ௱௯௪ | ௧ | னுகர்ந்து | நுகர்ந்து |
| ௱௧௫ | ௰௯ | ஞெளிவான் | ஞெழிவான் | ௱௯௫ | ௰௮ | யேத்தி | யேத்த |
| ,, | ௨௦ | ஞ்ஞெளி | ஞ்ஞெழி | ௱௭௧ | ௧ | காணே | காணேன் |
| ௱௨௦ | ௧௦ | தாரனெ | தானெ | ௱௭௩ | ௰௧ | ழுங்கி | முழங்கி |
| ,, | ,, | தோனென | தேனென | ,, | ௨௦ | களிபிளிற | கரிபிளிற |
| ௱௨௯ | ௨௨ | மொய் | மெய் | ௱௭௮ | ௯ | ஏயப்பெழுது | யெப்பொழுது |
| ௱௨௮ | ௧௩ | தோய் | தோய | ௱௮௦ | ௰௯ | ஞவினிடை | நோவினிடை |

| பக்கம் | வரி | பிழை. | திருத்தம். | பக்கம் | வரி | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|---|---|---|---|
| [illegible]௮௯ | ௨௨ | மெ்ம | மெம | ௨௬௮ | ௰௬ | ளயனித்து | ளயனீத்துத் |
| ௱௯[illegible] | ௰௬ | தெடுவது | தேடுவது | ,, | ௨௦ | டாதேரிச | டாதரிச |
|  | ௰௯ | னெனேயா | லெனேயா | ௨௬௯ | ௧ | ளாய்கை | ளாய்க்கை |
| ௱௯௬ | ௰௪ | வேயூநெறி | வோர்நெறி | ௨௭௧ | ௩ | சிறிதொழி | சிறுதொழி |
| ௨௦௨ | ௰௫ | வென்றதனே | வென்றதெனே | ௨௭௨ | ௫ | பத்திஞன் | பத்துநான் |
| ௨௦௮ | ௰௫ | வரைத்தனு | வரைதனு | ,, | ௰௫ | மாமரை | மாமறை |
| ௨௧௮ | ௪ | காணர் | காணன் | ௨௭௩ | ௭ | வருபானு | வருபரனு |
| ௨௨௦ | ௧௦ | புகுதுபூ | புகுதுங் | ௨௭௫ | ௭ | கொன் | போன் |
| ௨௨௭ | ௬ | விருத்தி | விரித்தி | ௨௭௬ | ௰௭ | நெல்லேக் | னெல்லே |
| ௨௨௯ | ௧ | வொழியாதி | வொழியாத்தி | ௨௮௧ | ௫ | மவர்பயந்த | மவர்ப்பயந்த |
| ௨௪௬ | ௧௩ | கோரணிகொ | கோரணிகொள் | ,, | ௰௩ | மளவிருங்க | மளவிற்றுங்க |
| ,, | ௰௫ | மூப்புட் | மூப்புப்பிணி | ,, | ௰௫ | மான்புற் | மானின்புற் |
| ,, | ௰௬ | கோப்புபல | கோப்புப்பல | ௨௮௭ | ௰௩ | மொய்மலர். | மொய்ம்மலர் |
| ,, | ,, | கூத்தாட்டு | கூத்தாட்டுத் | ௨௯௨ | ௨௨ | யிருந்தமே | யிருந்தவே |
| ௨௪௭ | ௧ | மோழியா | மொழியா | ௩௦௨ | ௧௯ | வரியேன் | வறியேன் |
| ௨௪௮ | ௭ | நிவந்த | நீவந்த | ௩௦௪ | ௧ | தருளிற்று | தருளினு |
| ,, | ௧௦ | தார்நேரா | தானேரா | ,, | ௬ | ரனேயோ | ரனேயே |
| ,, | ௧௨ | மமைந்தேன் | மமைத்தேன் | ,, | ௯ | யுலரானி | யுலராகி |
| ௨௫௪ | ௧ | யுவகைத் | யுவகை | ௩௦௮ | ௭ | ரின்னிதழ் | ரின்னிதழ்ப் |
| ௨௫௫ | ௫ | யன்றி | யின்றி | ௩௧௨ | ௪ | கெங்கனே | கெங்ஙனே |
| ,, | ௧௦ | கழிப்பான் | களிப்பான் | ௩௨௬ | ௰௯ | பிலத்தா | பெலத்தா |
| ௨௬௧ | ௧௩ | திரைக்கோ | திரைகோ | ௩௨௭ | ௧௫ | மித்தாற் | மித்தார்க் |

| பக்கம் | வரி | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௩௩௩ | ௨0 | கோவத்தை | கோவத்தைக் |
| ௩௪௩ | ௰௮ | யிடர்சோ | யிடர்சேர் |
| ௩௪௪ | ௧0 | பவையில | பவையில் |
| ௩௫௨ | ௨ | நிகழ்வறு | நிகழ்வுறு |
| ௩௫௬ | ௨ | மறிவொணு | மறியொணு |
| ௩௬௫ | ௯ | மொருக்கா | மொருகா |
| ,, | ௰௭ | குறியல்ல | குறியன்று |
| ௩௭0 | ௰௧ | நன்றிக்கா காப்பழி | நன்றியறியப் படு |
| ௩௭௨ | ௧௫ | காணுதறி | காணுவறி |
| ௩௭௩ | ௰௧ | காப்பவே | காப்பதே |
| ௩௮௨ | ௧௫ | தானலா | தமலா |
| ௩௮௮ | ௰௧ | விடுதன்னே | யிடுதன்னே |
| ௩௮௯ | ௰௬ | ஒழிந்தன | ஒழிந்தது |
| ௩௯௬ | ௰௫ | னழிந்ததே | னழிந்தவே |
| ௪0௨ | ௧௪ | தாளிணைப் | தாளிணை |
| ௪0௬ | ௨0 | றெருணீ | றெருநீ |
| ௪0௭ | ௧0 | றென்றுனு | றொன்றுனு |
| ௪0௮ | ௭ | நிலனிலோ | னிலனிலோ |
| ,, | ௯ | யுவமையா | யுரிமையா |
| ௪௨0 | ௨ | தற்க | தர்க்க |
| ௪௪௪ | ௭ | வாணலகை | வாளலகை |

| பக்கம் | வரி | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௪௭௧ | ௧௪ | யாவெந்தி | யார்வெந்தி |
| ௪௭௪ | ௧0 | டிறடா | டிரடா |
| ௪௮௮ | ௨ | ஞெருத்தீ | ஞெருதீ |
| ௪௯௪ | ௧௬ | மருவி | மருவு |
| ௫௰௬ | ௧௪ | சொலலே | சொல்லே |
| ௫௨௭ | ௧௯ | மார்க்கனொ | மார்கனொ |
| ௫௪௨ | ௯ | வொண்டு | கொண்டு |
| ௫௫௧ | ௫ | மையமு | மையுமு |
| ,, | ௨௨ | புரிக்கலம் | பரிகலம் |
| ௫௬௬ | ௯ | பெரியாரிற் | பெரியாரில் |
| ௫௭௬ | ௩ | மிறைவினை | மறைவினை |
| ,, | ௬ | வினைச்சட | வினைசட |
| ௬0௨ | ௧0 | மாதிரா | மாத்திரா |

ஸ்ரீ சச்சிதானந்த
பரப்பிரஹ்மணே நம:

# ஸ்ரீ தத்துவராயசுவாமிகள்

அருளிச்செய்த

## அடங்கன்முறை பதினெட்டனுள்

முதலாவது

# திருத்தாலாட்டு.

### தத்துவப்பிரகாசம்.

னைத்- தரமாகி யாவர்க்கு மெய்தரிய
னைத் தரமேனி சாத்தும் பெருமானே. (௧)

ம் பிறவித் துயரை நினைந்தடியே
ம் படிகண் டழுவித்த வாண்டகையோ. (௨)

பித் தனைத்தேட வெவ்வினையே னென்று
னைக் கனிசெய்த வெந்தை பெருமானே. (௩)

வேத மெல்லா மொழிவரிய மொய்கழல்கொண்
வே தனைகண் டெழுந்தருளி வந்தானே (௪)

அன்றும் வானவர்க ளின்றுணங்க நானிலத்தே
கண் களிக்க வெழுந்தருளி வந்தானே. (௫)

னை திரச் சுருதி தொழும்பதத்தை
னை செய்ய மதிதந்த வள்ளலோ (௬)

நஞ்சேய் பிறவிக்கு நாயே னடுங்காம
லஞ்சே லஞ்சேலென் றருளும் பெருமானே. (எ)

தேசார் முனிவர்குழா நின்றுணங்கத் தீயேனைக்
கூசாம லாளக் கொடியிட்ட கொண்டலோ. (அ)

மீட்டுகைக்கு முள்ள முருக்கிநில மேல்வீடு
காட்டுதைக்கும் வீரக் கழலிட்ட கண்டனே. (கூ)

கண்குளிர நான்கண்டு கொள்ளக் கடிகமழுந்
தண்களப மெய்நிறையச் சாத்தும் பெருமானே. (௰)

அனைத்துத் திசைகளுக்கு மப்பாலாய் நின்ற
தனக்குப் பரிவட்டஞ் சாத்தச் சமைந்தானே. (௰க)

இங்கழுநீர் மாலை யெனக்கருளி யின்னளிசேர்
செங்கழுநீர் மாலை புனைந்தருளுந் தேசிகனே. (௰உ)

புண்டரீ கத்தவனுங் காணாத பொன்முடிக்கே
தொண்டர் திருமாலை சூட்டிக் கொடுத்தானே. (௰௩)

செற்ற பிறவிநீறாகத் திருமுண்ட
மற்ற பிறைபோ லணிந்தருளு மண்ணலோ. (௰௪)

ஆங்கோயி லீதென் றடியே னகம்புகுதப்
பூங்கோயி லுள்ளே புகுதும் பெருமானே. (௰௫)

ஆத்த மறைகூற வஞ்சு மடியிணைகண்
டேத்த வடியர்குழா மின்புற் றிருந்தானே. (௰௬)

வேதனை யென்னுருவ மாக்குதற்கு வீரசிங்
காதன மேறி யமுந்தவி ருந்தானே. (௰௭)

தோயமுன் பாகத் தொழுதெழுமென் னைப்பொருளுங்
காயமு மாவியுங் கைக்கொள்ளுங் கற்பகமோ. (௧௮)
புண்டரிகக் கைம்மலரென் புன்றலைமேல் வைத்தருளிப்
பண்டை வினைதீரப் பார்க்கும் பெருமானே (௧௯)
ஆவா விருவ ரறிபாத சேவடியை
வாவாவென் றென்றலைமேல் வைக்கும் பெருமானே. (௨௰)
எட்டைவா சித்து விடாமே யெனக்கென்னைக்
காட்டவா வென்ற கருணைத் தடங்கடலோ. (௨௧)
என்னதி யானென் றினியொருகா லத்தினுள்ளு
முன்ன லறவூ னுயிர்வேறு செய்தானே. (௨௨)
பூண்ட புலன்கள் பொறிவழியே போகாமே.
மீண்டிரு வென்று விளம்பும் பெருமானே. (௨௩)
புற்கடந் தோன்றாத வண்ணம் புரளாமே
மற்கட மாமனத்தை மாட்டும் பெருமானே. (௨௪)
பொய்யாகு மெய்யில்வே றாகும் புருடனைக்
கையா மலகமெனக் காட்டும் பெருமானே. (௨௫)
உணைமறைய மூடி முணர்விலா மாயைக்
கணவிருளைக் காணென்று காட்டும் பெருமானே. (௨௬)
கண்ட விருளைநீ காணாதே யவ்விருளைக்
கண்ட வறிவைநீ காணென்று சொன்னானே. (௨௭)
கண்ட வறிவுதனைக் கொண்டென்னைக் கண்மறைத்த
பண்டை யிருளைப் பார்த்துக்கா ணென்றானே. (௨௮)

# திருத்தாலாட்டு.

கங்குலா மாயவிருள் காண்கிலேன் காண்கின்ற
தெங்கு மறிவென் றிசைக்க விசைந்தானே. (௨௯

சாதமா மிவ்வுடல நானல்லேன் சான்றாகும்
போதமே நானென்னைப் போதிக்கும் போதகனே. (௩௦

ஏரணவு மிஞ்ஞாலத் தோற்ற நிலையிறுதி
காரணநா னானபடி காட்டும் பெருமானே. (௩௧)

யானறிகை யாலே யறிவ னறிவதல்லே
னானறிவ னாகுமென நாட்டந் தருவானே. (௩௨)

சான்று மறிவுருவுஞ் சாக்கியமா மிச்சகமுந்
தோன்றாத வண்ணஞ் சொருகுவித்த தோன்றலே (௩௩

இருந்த விருப்பினையும் யானறிவ தின்றித்
திருந்த விருக்க வருள்செய்த தேசிகனே. (௩௪

அந்த வுபாதி யுனக்கான வப்பரிசே
யிந்த வுபாதியிறைக் கென்னும் பெருமானே. (௩௫

தான்சகத்தைக் கண்டுந் தனைக்கண்டுந் தான்மறந்து
மூன்செயவத்தைமூன் றுண்டிதற்கு மென்றானே. (௩௬

அழுந்த விருந்தவிருப் பாரா லதுவிட்
டெழுந்திருந்த தாரா வியம்பிக்கா ணென்றானே. (௩௭

வல்லிருண் மூடி யறியேனை மற்கடத்தைப்
பல்லிளி கண்டு பதைப்பித்த பண்பனே. (௩௮

பதைபாத வண்ணம் பரஞ்சுடரைக் காட்டிச்
சிதையா விருளைச் சிதைவித்த சேவகனே. (௩௯

மீட்சி செலவின்றி வேறின்றி விண்முதலாங்

காட்சியுங் கண்ணாகக் காணுங்கண் டந்தானே. (௪௰)
கண்டகண் ணாலே கடலுலகும் பாதலமு
மண்டமுநே ராகவமிர் துசெய்த வண்ணலே. (௪௧)
உதிப்பதுதல் லாமு முணர்வன் றுணர்வை
மதிப்பதுவும் விட்டுநீ வாளாவி ரென்றானே. (௪௨)
நாற்றஞ் சுவையொளியூ றோசையெலா நாட்டமெனுந்
தோற்றமுங் காணாதே சும்மாதி ரென்றானே. (௪௩)
சித்தசித் தீசத் திரிவிதமுந் தீர்ந்தபா
ழித்தனைக்கு முற்பத் தியுமிதுவே யென்றானே. (௪௪)
மும்மைப்பாழ் தீர மொழிபா மொழியாலே
நம்மைப்பா ரென்று நவிலும் பெருமானே. (௪௫)
அபாவபா வங்களுக் கப்பாலாய் நின்ற
சுபாவமாந் தன்சோதி சொல்லாமற் சொன்னானே. (௪௬)
இவ்வா றறிந்தபரி சென்னவொண்ணா வின்பத்தைச்
செவ்வாய் மலராமற் செப்பும் பெருமானே. (௪௭)
ஆனந்த வெள்ளமென தங்கைக் கனியாக
மோனந்தன் னாலே மொழியும் பெருமானே. (௪௮)
ஆட்டின மாயக்கூத் தென்ன வகத்துள்ளே
கூட்டெனை ஞானக்கூத் தாட்டிய வித்தகனே. (௪௯)
செல்ல லறுத்த சிவப்பிர காசனே
தொல்லை மறைதேர் சொருபானந் தச்சுடரோ. (௫௰)
செய்வந்த வானவருங் காணாத சேவடியான்
வாய்வந்த வாபுகழ வாழும் பெருமானே. (௫௧)

திருத்தாலாட்டு முற்றிற்று.

இரண்டாவது.

# பிள்ளைத்திருநாமம்.

[தத்துவ நிலையம்]

(காப்புப்பருவம்.)

## மும்மூர்த்திகள்.

ஏத்தியிறை யேகனென வனேகனென மறையி
னீறுகளு நின்றுருவ மின்னதென வுணராச்
சோத்தமுனக் கபயமென வனவரத நின்று
சொருபானந் தன்செம்பொற் றுணைமலர்த்தாள் காக்க
மூர்த்திகண்மூ வர்களென்ன மாலரன்நான் முகனாய்
முக்குணத்தான் மூவுலகு முறைபிறழா வண்ணங்
காத்தழித்துப் படைத்துவருங் கருமுகில்செம் பவளக்
கனகமெனுந் திருமேனிக் காரணநா யகரே. (௧)

## கலைமகள்.

பொய்யுடலைம் பொறிபுலனு யழியாம லடியேன்
பொருவிலனந் தானந்த போதம்வடி வாக
வையமுயிர் பரமெனும்பே தங்கழியத் திருவாய்
மலர்ந்தசொரு பானந்தன் மணிமலர்த்தாள் காக்க
செய்யகன கக்குன்றின் முகத்திடத்துந் திருவார்
செழுங்கமலத் தன்னம்போ லெழுந்தருளி யிருந்திங்
குய்யுமறம் பொருளின்பம் வீடுயிர்நன் குணர
வோதியநா மகளென்னு மும்பர்கணா யகியே. (௨)

# பிள்ளைத் திருநாமம்.

வேறு.

சத்தமாதர்கள்.

உலகுபதி னாலுமாக வாக்கினி
னுயிர்களிலை யாகுமாறு காப்பவு
மொருவும்வகை நூறியாடு கூத்தின
னொருபதொரு நூறுகூடு நோக்கின
னிலகுதலை னேழுமேறு கோட்டின
னெழுமலையு மூடுபோன வேற்கைய
னிகலிவரு தாருகாரி யார்கொலு
மெழுகடவுண் மாதர்பாது காக்கவே
கலகமத கோபலோப காத்திர
கனவுமணு காமைகாது மைத்திரி
கருணைமுதி தாதிமாத ரார்க்கொரு
கணவனென மேவிவாழு மாத்திகர்
துலவுமறை யோதுமாறி லாப்பர
சுகமெய்யுணர் வானுபூதி யாத்தும
சொருபமெனு மாறுமேனி சாத்திய.
சொருபனெனை யாளிபாத மேத்தியே. (௫)

வேறு.

உமையவள்.

சோதிசொரு பாநி னீதியறி யார்க
டோமிலொருமுவ ரென்ன வேத்திய
தூயமறை யோதி நாலுமுணராத
தூலமதி யாளர் சொன்னசாத்திர

வர்தியரோர்டேறு மாறுசில பேசி
மாறுமயநீர வென்னை யாட்கொளு
மாறுநா ஞகி மாயவிருடா
மாறவிருதாள்கள் சென்னி சூட்டியை
யாதியரி மாதர் தாமிருவ ராலு
மாஞ்சதணியாது முன்னோர் நாட்பதி
ஞறுமடி யான வாயிரவர் கூடி
யாடவரனைசை தன்னி னீத்தொரு
பாதியொரு மாது வாழவிரை வோடு
பாயவொரு மாது சென்னிமேற்கனை
பாடழிய மேவு மாரன்மலர் பாத
ஸீதுமனு காத கன்னிகாக்கவே. (ச)

வேறு.

முப்பத்து முக்கோடி தேவர்.

கதியறியாக் கட்டனை நாயினேற்கருள்
கருணையனைக் கற்றவாறு பாவினாற்கொடு
துதிசெய்துமெய்ப் பத்தர்பாடியாடு நீர்த்தனைச்
சொருபனைமற் றொப்பிலானை ஞான மூர்த்தியைப்
பதினொருநெற் றிக்கண்ணரோரோர் தேர்க்கெழு
பரியொருசக் கிரத்துநான்மை மூவர் பாற்கர
ரெதிரிவிபத் தட்டலோக பாலர் வைத்திய
ரிருவரொன் முப்பத்துமூவர் தேவர் காக்கவே (ரு)

காப்புப் பருவமுற்றிற்று

# வருகைப் பருவம்

## வேறு

நனிறதரு நளின முறைபவ னாக
நடுவறி துயிர்கொ ளமலனீ
நீதிபொதி சடில தரவரன் முதல
நவில்வுறு மமரர் கணமுனைட்
சிறைதரு பிறவி யறும்வகை யுறவுஞ்
செயவுள னுருகி நயனொடே
செயசெய விறைவ செயவெனு மொலிகள்
செவிமுத லருக் செலவுறு
வுறைதரு முடலை யுடனொடு நடலை
யுறுபவ கடல்கொ ளலையென
வுறுபுல னினிமை மொழியநல் வழியி
னுறவுரு மெளனயும் வினவியே
மறைதரு பொருளொர் மொழியினின் மதிகொள்
வகைசொல வலவன் வருகவே
வருபவ மொழிய வனுபவம் விளைய
வடிவுகொ ளமலன் வருகவே. (௧)

உரையுணர் வரிய வுணர்வுரு நிகழ்
வொருமொழி யருள் வருகவே
யுணர்தொறு முருகி யுளனுடல் புளக
முறுவுற வருள வருகவே
திரையொடு கரையில் சிவவுணர் வுததி
திளையென வருள வருகவே

செனனமொ டுறுதி செல்வர விலதொர்
தெளிவுற வருள வருகவே
யிரையுறு புலனொ டிசையுறு பொறிக
ளிவைதொறு மருவு கரணமே
யிருடருபுருட னிறையெனும் விதத்தி
யிவைகெட விதுவ தெனவொரு
வரையறு நினது வடிவொளி திகழ
வழியிட வலவன் வருகவே
வருபவ மொழிய வனுபவம் விளைய
வடிவுகொ ளமலன் வருகவே. (௨)

வினவியெ னுருவு தரவரு ளுருவின்
வெளிபடு விமலன் வருகவே
விரகழி யடிய ருளமிக வுருகி
விழிபுனல் சொரிய வருகவே
கனவினு மமரர் கருதவு மரிய
கழலிணை யருள வருகவே
கருதரு முருவு கரதல மருவு
கனியென வருள வருகவே
ஜெனவினை யளவ தெழுகடலளவ
தலவெனு மிதனை விழியினொ
லெரிமுக மிடினை யெனும்வகை பொடிசெய்
தெனதெழு பிறவி யிரியவே
மனவிட ரழியும் வகைபொழி கருணை.

மழை முகில் வருக வருகவே
வரும்பவ மொழிய வனுபவம் விளைய
வடிவுகொ ளமலன் வருகவே. (௩)

வேறு

மலரின் மணமென மணியினொளியென
மகிழு மொருபொருள் வருகவே
மதியு மிரவியு மனலு மெனவதின்
மருவு பயனவன் வருகவே
யலது வுளதென வறிய வொருவரு
மரிய விரகினன் வருகவே
யமிர்து தருசுவை யெனவெனகமணி
யருளு மருபரன் வருகவே
புலனு மனமுதல் கரண மூறிவரு
புனித வெனையுய வருகவே
புகழ்வ திகழ்வது புதுமை பழமைமொ
டொழியு நிலையவன் வருகவே
சொலவு கொடுதனை யறியுமு ணர்வினர்
தொடர வரியவன் வருகவே
சொருப வெனையுநி னருளி னடியிணை
துதிசெ யெனுமருள் வருகவே

வேறு.

மலர்தலை யுலகின் வருபொருண் முழுதும்
வடிவெனு மொருவன் வருகவே
மருவிய பொருள்கண் முழுதினு மொழிய
வடிவெனு மமலன் வருகவே
கலமொழிவறவெ னுளன்மனி யெனையு
மழிதரு நயனன் வருகவே
நவமணி யொளியி னொளிர்சு சொருப
நமதென வருள வருகவே
சலமதி யெனவென் மனனுறு துயர
மொழிதர வருள வருகவே
சளனுறு மவல வறுசம யமய
றவிரெனு மழகன் வருகவே
சிறுகுறு மறைகள் பலசொலி புணர்வு
தெளிவிலர் மறையன் வருகவே
திருவடி யெனது சென்னிமிசை யருளு
சிவபரன் வருக வருகவே, (ரு)

வேறு.

பரவுமிமையோர்கண் முனிவர்மறை யோது
பரிசுதனை நாடி யறிவுறார்
படர்பெருக மேனி யருள்கொடெனை யாளு
பரிசுபடி மேவி யரியகா
ணரவுகபிருகை யறிவினில தாமென்

நீநுமறையி னோது முவமைதா
னனுபவம தாக வகிலநிகழாம
லறிவுவடி வாக வறிவுதா
னிரவில்வரு சோம னிருமையில தாகும்
விழியினுள மாசு கழியவே
யெனுமறையி னீதி யிலகவிறை சீவ
னெனநிகழு பேத மிரியவே
வரவுதிரி வான் மதிவிழியின் மாசு
கழியவரு நாதன் வருகவே
மனிதர்வடி வாகி வருகருணை வாரி
வருகவெனை யாளி வருகவே. (கா)

கறைசெய்பவ வேலை முழுகியழி யாது
கடிதுகரை யேற நினைகுவார்
கதிசேர்குபர் தாளி னன்னைகையெனு ஞான
கலையையுண ராது கலகமார்
துறைகடொறு மேவி யறிவறியு மாறு
சுழலுதுயர் தீரவருளிமா
சுருதிமுடி வோது பொருளெனுரு வாகை
துணியவரு நாதன் வருகவே
யுறையுமள வாகி யனுபவ மிலாத
வவலவறி வாளர் கனவுநா
னனுகலற வாடு மலகைமன மாள
வருளியினி மீறி யிருவெனு

மறைசொல்வழி யேநம் வடிவுசிவமாக
மதியருளு நாதன் வருகவே
மணிதர்வடி வாகி வருகருணை வாரி
வருகவெனை யாளி வருகவே. (எ)

கதியதிது வாகு மெனமுயலு காம
கருமிகள் கணுதர் கபிலர்மாக்
கணிகர்மதி யாள ருகர்முதல் வாதர்
கலைகள்கத றுமவி றைவர்தாண்
முதியதமிழ் மாலை யணியவரு காழி
முருகர்மறை ஞான முனிவர்மான்
முடிவறிவில் பாத முளரிகொடு தூது
முதல்வர்கனி போக மொழிகுவா
ரதிகைநகர் நாத ரருள்செய்திரு நாவி
னரையரிறை யாளு மியல்பொரு
தமுதமுது பாடி யருளுதிரு வாதை
யதிபர்சட கோபர் துதிகளே
மதிசெயவெந் நாளு மகிழ்வொடுரை யாடும்
வகையருளு நாதன் வருகவே
மணிதர்வடி வாகி வருகருணை வாரி
வருகவெனை யாளி வருகவே. (அ)

வேறு.

நிறைவுகுறை வாத லழிதல்கழி சால
நிகழ்வுவர வீறு முதலோடே

நெடுமைகுற ணோர்மை பெருமைசிறி தாகை
யிலதுளது மான வுருவுமா
யீறுகையொரு காலு முலகின்வழு வாம
லுலவு மடியேனு முருகவே
யொருவடிவ மாகி யிருபதமு மீபு
மொருகருணை யாளன் வருகவே
யறுசமய வாதி னுறுசமய நாடி
யழகிதிது தீய் திதுவெனு
வவர்களொடு பேத கவலைமிக வோது
மவலமதி யான சவலை போய்
மறையின்முடி வேர்து பொருளென்வடி வாக
மதியருளு நாதன் வருகவே
மரணபவ மாற விரணமனன் மாற
வருகவெனை யாளி வருகவே (௧)

புயலளக பார முயலளவிடாத
புதியமதி யாகும் வதனம்வேள்
புயமருவு சாப முரியவொருபாக
நெரியுமிரு கோணுபுருவநீள்
கயலுலவு காவி கமலமலர் நீல
முழையதல வால வமுதமே
கரவுடைய நாளி னுலகுதடு மாறு
கலகமிட மார னளவியே
செயவருவதான கணைகளிரு காது

கிழியவினை யொரு ளழியவா
டிருநயன மார மிளநிலவு சாரு
சிறுமுறுவல் கோப மதரமா
மயிலியலின் மாதர் வடிவழகி ஞமன்
மதியருளு நாதன் வருகவே
மரணபவ மாற விரணமனன் மாற
வருகமல பாதன் வருகவே.

---

வருகைப்பருவம் முற்றிற்று. ஆக-௫௰.



# தாலப்பருவம்

## வேறு.

பருதியாய்ச் சசியாய்நீர் பார்கா றீவானாய்ப்
பகலிராத் திரியாய்மேல் கீழ்கூ றாயாகே
கருதினர்க் கருவாயே காகா தாயானாய்
கலகதார்க் ககளோடே கூடா வீடாகே
பொருதிநாச் சலியாமே நாமே நாமாகப்
புகழூநாத் தருவானே போதா காராநீள்
சுருதிசாற் றரியானே தாலோ தாலேலோ
துதிசெய்வார்க் கினியானே தாலோ தாலேலோ. (௧)

தெரிசனத் தியமாறு வேறு மாறுமா
சிவசுகாத் தியின்மூழ்கா மீள்கால் கூடாமே
மூரசுதாக் கியதீவாய் மேனா னால்வேத
மொழியுமாற் றமிலாதாய் மூவாய் சாவாதா
யரசனார்த் தனவேதா வானோர் கோமானா
லறிபொனாப் பொருளோரே காணா நாம்வாழ்வா
னொருசொலாற் றருவானே தாலோ தாலேலோ
வொழிவிலாப் பெருமானே தாலோ தாலேலோ. (௨)

தணியுமாற் றவிலாதோ வாதே வாதேதோ
சமயசாத் திரநூலே யோதா யானோள்
புணர்வுதார்க் ககளோடே யாய்வா னாள்வீணை

# பிள்ளைத் திருநாமம்.

பொழுதுபோக் கிவிடாமே பூமே னீவாராப்
பணியுமாத் திரைப்போதே வாறோ ரேறோர்தேர்
பதுமநாய்த் தலைமேலே தாரா நேராவோ
ருணர்வுதாக் கியகோவே தாலோ தாலேலோ
வொழிவிலாப் பெருமானே தாலோ தாலேலோ. (௩)

வேறு.

முன்னஞ் செயுமா தவகோ டிகளான்
மூதுநான் மறையோது
முனிவோர் தமினுற் பவியா மறையின்
முடிவிற் றுணிவுற்றுப்
பண்ணும் பொருளா னபரம் பொருளே
பொருளொன் றலதொன்றிற்
பற்றற் றுறவும் பகையும் புகழும்
பழியுங் கழியோடும்
பொன்னுஞ் சமமா கநினைந் திகழும்
பரமுந் தருமின்பப்
போகங் களெலா மோகங் களெனும்
படிபுந் தியின்வைத்துத்
தன்னந் தனியே யடைவா ருறவே
தாலோ தாலேலோ
தனிநா யகனே யெனையா ளுடையாய்
தாலோ தாலேலோ. (௪)

மத்தம் முறுமீ மாமிச மார்க்கந்
நியாயம் வைசேடிக
மாயா வாதஞ் சாங்கியந் திருமான்
மார்க்கம் மறையோதுஞ்
சித்தம் மறுவை ரவமா விரதங்
காளா முகம்வாமந்
திகழ்பா சுபதஞ் சைவம் மெனவே
சிவனே துபவேறும்
புத்தம் மருக முலகா யதிக
முதலா கியவாதம்
புகலுஞ் சிலுகிற் புகுதா தகலச்
சுகபூ ரணபோதச்
சத்திதன் னுருவாம் வகைதந் திடுவாய்
தாலோ தாலேலோ
தனிநா யகனே யெனையா ளுடையாய்
தாலோ தாலேலோ (௫)

இம்மற் கிரை யானவு டம்பை
யெடுத்தித் துகாரணமா
யிரவும் பகலும் மெளிவந் தனசெய்
திதனு லமையாதே
யிம்மர்க் கிடனாய் நடனு டியபொய்
வாழ்வைக் கருதாதே
மறையிற் றுறையிற் பொறையிற் றுறவி
னிறைவிற் குறைவற்றே

# பிள்ளைத் திருநாமம்.

யெம்மைக் குநமக் குறவா மவர்வே
றலநா மலதென்றே
யாதொன் றினுமியா வரொடும் பணியற்
றெல்லா வழியானுந்
தம்மைப் பெறுவா னினைவா ருறவே
தாலோ தாலேலோ
தனிநா யகனே யெனையா ளுடையாய்
தாலோ தாலேலோ. (௯)

தாற்பருவ முற்றிற்று.

# சப்பாணிப்பருவம்.

## வேறு.

நிலன்முழு தணிமுடி மலரெனு மரவணை
நித்திரை யுற்றோனு
நிகிலமு முதவிய நிமலனு மடிமுடி
யுற்றறி யத்தேடித்
தலன்முழு தையும்வெளி முழுதையு மியல்வகை
தட்டிபி ளைப்பாகிச்
சயசய வெனவடி பரவவும் வெளிபட
வற்றிவர் பித்தாக
மலன்முழு துறுமுட லெனதுரு வெனநினை
மத்தவெ னைத்தேடி
மனனுரை யறுநின துருவென துருவென
வைத்துமலர்த்தாளென்
குலன்முழு தையுமடி மைக்கொள வருமிறை
கொட்டுக சப்பாணி
குருபர பரசிவ சிவகர கரமலர்
கொட்டுக சப்பாணி.

வெறிகமழ் திருவடி மலரென் றலைமிசை
வைத்தரு ளித்தாவி
விடயமுண் விழிமுதல் புலனவை யெழலற
விட்டிரெ ளப்பேசி
மறிகட லலையென வுறுமனன் மலைவற

## பிள்ளைத் திருநாமம்.

யெம்மைக் குநமக் குறவா மவர்வே
றலகா மலதென்றே
யாதொன் றினுமியா வரொடும் பணியற்
றெல்லா வழியானுந்
தம்மைப் பெறுவா னினைவா ருறவே
தாலோ தாலேலோ
தனிநா யகனே யெனையா ளுடையாய்
தாலோ தாலேலோ. (க)

தாற்பருவ முற்றிற்று.

# சப்பாணிப்பருவம்.

வேறு.

நிலன்முழு தணிமுடி மலரெனு மரவணை
நித்திரை யுற்றோனு
நிகிலமு முதவிய நிமலனு மடிமுடி
யுற்றறி யத்தேடித்
தலன்முழு தையும்வெளி முழுதையு மியல்வகை
தட்டிபி ளேப்பாகிச்
சயசய வெனவடி பரவவும் வெளிபட
வற்றிவர் பித்தாக
மலன்முழு துறுமுட லெனதுரு வெனநினை
மத்தவெ னைத்தேடி
மனனுரை யறுநின துருவென துருவென
வைத்துமல ர்த்தாளென்
குலன்முழு தையுமடி மைக்கொள வருமிறை
கொட்டுக சப்பாணி
குருபர பரசிவ சிவகர கரமலர்
கொட்டுக சப்பாணி. (௧

வெறிகமழ் திருவடி மலரென் றலைமிசை
வைத்தரு ளித்தாவி
விடயமுண் விழிமுதல் புலனவை யெழலற
விட்டிரு ளப்பேசி
மறிகட லலையென வுறுமனன் மலைவற

வைத்தொரி மைப்போதின்
வடிவறி வெனவறி வகைசெய்த வறிவுறு
குற்றம றைதக்கூறி
யறிவறி பொருளறி பவனொளி திகழ்தரு
மூப்பரி சைத்திர
வறிபொரு ளறிவினி லறிவுறி வனிலவன்
முற்றறி விற்கூடக்
குறியலு குறிகுறி யெனவரு ளியவிறை
கொட்டுக சப்பாணி
குருபர பரசிவ சிவகர காமலர்
கொட்டுக சப்பாணி. (௧)

கடலுறு திரையெனு மனவினை கெடவெலா
வைத்தெரி மைப்போதிற்
கரதல மணியென வெளியெனி னெதிர்திகழ்
வித்தனை யெத்தோடு
முடன்மரு வியுமொரு மருவுத லறவிறை
நிறைநிற வித்தார
முணர்தொறு முணர்தொறு முளமுரு கிடவிஎன்
வைத்தனை பொற்பாதம்
வடகலை தமிழ்பல கலையலை கொடுவரு
கற்றெரு தொப்போர்தம்
…ழியொழி யொழிகென விழுபடு குழியலை
…த்த லுற்றோரின்

குடிகுடி வழிவழி யடிமைகொளமதிறை
கொட்டுக சப்பாணி
குருபர பரசிவ சிவகர கரமலர்
கொட்டுக சப்பாணி. (௩)

வேறு.

பணியு மடியவர் பிணிக ளறவருள்
பத்தர்வி னைக்கேட
பகரு மறைகளு மயரவெ னுள்வரு
பட்சப தக்கார
மணியும் வயிரமு மெனுமவ் வொளியெனுள்
வைத்தவ ருட்கோல
வடிவ மெவையுநின் வடிவ மெனவரு
மச்சுக நற்போத
நனுக வமரர்க ளரிய குருபர
நற்றவர் பற்றுள
நலம திடையற வருளி முடிமிசை
வைத்தம லர்ப்பாத
குணனு மலனற வருளு சிவபர
கொட்டுக சப்பாணி
குரவ வெனையுய விருகை மலர்கொடு
கொட்டுக சப்பாணி.

வேறு.

தூஞ்சல் விழித்தல் பிறத்த லிறத்தல்
சுருங்கல் விரித்தலெனச்
சொல்லும் விதங்களு மற்றவை யற்ற
சுகோததி யாய்நினையு
நெஞ்சு நினைப்பு மறப்புற நின்மல
நிட்கள மாயறிவாய்
நிற்ப விருப்ப கிடப்ப நடப்பன
நிற்பிறி தற்றொருகா
லெஞ்சுத லின்றிய வில்வுரு வென்றுண
ரவ்வுரு வுற்றுணர்வா
ரெவ்வள வவ்வள வாகிய நின்னுரு
வென்னுரு வாயிடவென்
குஞ்சியின் வைத்த துணர்ப்பது மங்கொடு
கொட்டுக சப்பாணி
கும்பிடு மன்பர்த மென்புரு கும்பர
கொட்டுக சப்பாணி. (ரு).

வேறு.

நாளென றுயாபபரியும் வாளென் றுரைத்தவுல
கிற்காத லற்றனடைவார்
நாளிங் கிதிக்குமறை நாவின் பொருட்டெளிய
வுற்றிய வுற்றருமையா

யானிங் குனக்குப்பம் யாமென் றுரைக்குநினை
யந்தை குட்கிடவா
லைலங் காற்கண்மொழி தேனம் புயத்தினவ
ளிப்பாவை யொப்பவென
வேளொங் கணைக்குமிரை யாய்மங்க லுற்றவென
சிந்தாகு லத்தினையெலா
மீதென் றிருத்திவெளி வீடுங் களித்தவிர
கைப்பாடி நட்டிடவே
நாளிங் களித்தெனது தாபந் தவிர்த்தவிறை
சப்பாணி கொட்டியருளே
தாதானை யுட்பெற்ற மூதாதை யானவிறை
சப்பாணி கொட்டியருளே. (௬)

ஓங்கார ணாங்களுன் பாதார விந்தமல
ருன்னப் படாதவதனு
லோதப் பெறேனுமென்ன மேதக்க வானவர்க
ளுள்ளம் பதைக்கவுருவ
மீதாகு மிங்கிறைவ னிவனேயெ னத்தெளிய
வன்போலி கட்கெளியையா
மிறைநின் பெருங்கருணை வெள்ளத்தி லேமூழ்கி
யென்செய்வ தென்றறிகிலேன்
நீதான விப்பிறவி நோய்தீர் மருந்தொன்றி
திருவுள்ள மாகவெனுமுன்

சென்னிக்கண் வைத்தடிக ளென்னற்கு ரைக்கரிய
தன்னைக்க ணத்தினரு ளருந்
தாதாவெ னப்புலவ ரோதும்பு கழ்ச்சொருப
சப்பாணி கொட்டியருளே
தாதாவை யும்பெற்ற மூதாதை யானவிறை
சப்பாணி கொட்டியருளே. (எ)

வேறு.

சித்தசு சித்திட நிற்குண முத்தி
யெனச்சிலர் நிற்பாருஞ்
சித்துரு நித்தவ நித்தவி தப்படல்
செப்புதி றத்தாரு
மத்துவி தத்துவி தத்துப யத்தும்
விதத்தும தத்தாரு
மத்துரு விற்பிறி தற்றமை தத்தமை
யத்தமு ரைப்பாரும்
புத்தர்மு தற்சம யத்தவர் தத்த
மதத்த பொருட்பேசப்
புக்கும லைத்தவி லைத்தக லைப்பொடு
புத்திச லித்தேகை
குத்துவ தத்தையொ ழித்தவ ருட்கடல்
கொட்டுக சப்பாணி

# செங்கீரைப் பருவம்.

குத்தரி யொத்த மனத்தை யுருக்கிறை
கொட்டுக சப்பாணி. (அ)

சப்பாணிப் பருவம் முற்றிற்று ஆக உக.

வேறு.

கருவிக டந்திட னருள்கிர கங்களி
தந்தா ளுந்தாளின்
கருணையு நெஞ்சது கருதுதொ றுங்க
ணிரண்டா னுந்தாரை
யருவி சொரிந்திட வதிசய மங்குற
நின்பா லன்பாயே
யரிகுரல் வந்தழு தழுது வரும்படி
கண்டார் நின்றார்க
ளிருவ ரிருந்திட மெனதுணை கொண்டு
நகுந்தோ றுந்தோறு
மெனது மனங்களி வரவர நின்கழ
லின்கி தம்பாடித்
தெருவு தொறுந்திரி தரவரு ளும்பர
செங்கோ செங்கீரை
சிவகர சிந்தனை யறவருள் சுந்தர
செங்கோ செங்கீரை

வேறு.

ஒழிவில ருண்மாது திருமுலைபினூறு
முணர்வு பரபோத வமுதுண்
மொழியின் மணநாற வருளுமறைஞான
முனிவர் தமிழ்மாலை வாழியே. (சா)

வேறு.

பாதமுடி தேடிருவர் பாலுமணு கார்வொருவர்
பாதமலர் சூடியருள்பொரு
நாதமொழி யாலவனி வீடுபெற வேர்துதிரு
நாவரசர் போதமது வாழியே. (எ)

வேறு.

நினைவினரி தாகி நெறியினெளி தாகு
நிமலநிறை வான பொருளையோர்
வினையிறனி தூது மறுகிடையி னேவு
விமலர்தமிழ் மாலை வாழியே. (அ)

வேறு.

செடிகொண் மாயப்பிறப்பிரு டீர்ப்பவன்
செய்ய தாமரைப் பாதமுன் சேர்ந்தவெம்
மடிகள் சாத்திய வண்டமிழ் மாலைக
ளமல வாரிய மாலைகள் வாழியே. (கூ) ஆல உகூ

வாழ்த்துமுற்றிற்று.

கடைதிறப்பு.

பண்ணார் மொழி யமுதந்தரு பவளந்திற வாதே
கண்ணாலுயி ருண்பீர்கடை திறமின்கடை திறமின். (க)

உருவாய்வரு பெருமாளையு ளங்கொண்டெவ ருடனுந்
திருவாய்மலர் திறவீர்கடை திறமின்கடை திறமின். (உ)

நீராவியு முழுதுங்கம லந்தானும திருகண்
ணீராவியின் முழுகித்தனி நிற்பீர்கடை திறமின். (ங)

அடையத்திரி புவனத்தையு மளவற்றுள நயனக்
கடையிட்டயில் பவர்பொற்கடை திறமின்கடை திறமின் ()

மலர்பொற்கழன் மலரிட்டிறை மதியைப்பரு கிடவே
சிலைசித்திர மெனநிற்பவர் திறமின்கடை திறமின். (ரு)

எளிவந்தரு ளிறைபொற்பத மிருகட்புல னுகரக்
களிவந்தவர் கனகக்கடை திறமின்கடை திறமின். (சா)

வேறு.

தணந்தபோது நுமைப்பெறாது தலைப்படந்தரு தம்பிரான்
மணந்தபோது நுமைப்பெறாது மயங்குவீர்கடை திறமினோ

வேறு.

அகில புவனமு முடையவ னருளினு
னமரர் பெறலரு மமுதினை நுகரவே
துகிலு மணிகளு நெகிழ்புற விழியுமோ
சொருகு மறிதுயி லுடையவர் திறமினோ. (அ

# மோகவதைப்பரணி.

அரிமு னிடவுணு மமுதல விதுபெரு
தவனு மலம்வரு மமுமெதின வமரர்தா
மெரிமுன் மெமுகென வுருகினு மடியரா
யினிய மொழியமிர் தருள்பவர் திறமினே. (கூ

வேறு.

எஞ்சவுல கங்களமிர் துண்டகளி தன்னினிறை யோனிரு கழற், கஞ்சமலர் கண்டகளி விஞ்சவரு வீர்கடைதி றந்திறமினே. (ய)

மெய்தழுவ வுங்கணிலை யுங்கலையும் வீழ்வுற விரும்பியிறை முன், கைதொழுது நும்மையு மிழந்துவிடு வீர்கடைதிறந்திறமினே. (கக)

வேறு.

சமய விதமள வறவுள துறைதொறுந்
தமர மிகவரு கலைபல மொழிதரு
சகல வினைகளு முதலிய வுலகுறை
சரமு மசரமு மெனவரு முயிரவை
யமையு முடல்கடொ றுளவக முளரிக
மமரு மகமென மருவிமு னறைதரு
மகில முதவிய வறிவன தடிபணி
யமரவ னிதைய ரணிகடை திறமினே. (கஉ

உணரு முனிகண மடிசய சயவென
வுரைசெய் துதியொடு தொழுவள வறுசிர

முடைய வுபநிட மூவகையொ டுரைசெய
யுளமெய் யுணர்வதி சுகமொரு கரையறு
புணரி யொருதன திடனென விதமுறு
புவன முழுதையு மமுதுசெய் தறிதுயில்
பொறிகொ ளரவணை மிசையமர் பரனடி
புகழுபு னலர மகளிர்க டிறமினோ. (௭௩

ஆசையு முடலினி னுரவிய நெகிழ்வன
வவனி புனல்சுடு வனவசை வனவன
லனில மிடைவெளி ககனமு னுருவல
வறிய நயனமு முருவறி கருவிய
திசையு மொழிபுல னவையன முதல்களு
மினையவு யிரது முழுவது மறிவல
வெவையு மறிவறி வுருவெனு மிறைகுண
ரசித வரையர மகளிர்கடிறமினோ. (௭௪

உதய வரையர மகளிரெ மிரவிமு
னுடுவு மவரதி பதியெனு மதியமு
மொளிர்வ திலருல கிருள்கெடு வதுமிவ
னுதய முறிலிவ னலதில் திறையென
விதய வெளியினி னிலைபெறு மறிவுரு
விரவு பகலறு மிரவிமு னிகழ்கில
னிவனு நிகழ்வதில் விறையொளி யினிலன
விவரை நகுட்வெணி தையர்கடை திறமினோ( )

பாவு புகழ்பழி பெறலிழ வுறவயல்
பதுமைபு ணர்பவள் பிரிவுற லுகமுயிர்
பலவு நிலைபெற னிதனமெ னிதனொரு
படியு மடிமகிழ் வுறநிக ழுளமுடை
வரவு திரிவறு நிறைவுறு மறிவுதம்
வடிவ தெனவனு பவமுள முனிவரர்
மதுர மொழியமிர் தினைநுகர் வுறவுள
மகிழும் வனவர மகளிர்க டிறமினோ. (கசு)

வேறு.

வீரஞ் சிறந்த சிலையநங்க வேளைவென்கண் டருளியவோங்
காரஞ் சிறந்த கனதனத்தீர் கனபொற் கபாடம் திறமினோ.
நல்லூ தரத்து மைந்தர்க்கு நாவா லன்றி நயனத்தாற்
சொல்லா தெல்லாஞ் சொல்லுவீர் சுடர்பொற் கபாடந்
திறமினோ. (கஅ)

ஐயங் கொண்டு நடுத்தேடி யறிவோ ரறியப் போதமணஞ்,
செய்யுங் கொங்கை யருளுவீர் செம்பொற் கபாடந் திற
மினோ. (ககூ)

கன்னிநாடுஞ் சோணாடுங் கவலை தீரும் படிவந்தென்
சென்னிநாடும் பதம்பாடச் செம்பொற் கபாடந்திறமினோ.
வன்னி யன்ன விறன்மோகன் மாள வந்த மலர்ப்பதத்தென்
சென்னிகொண்ட பிரான்வென்ற களப்போர்பாடத் திற
மினோ ஆ (உங) ரு.

காடு.

எனையாள வுருவாகி வருகோல வருண்மாது
மிவள்பேயும்வாழ்
நினையாமுன் மனன்வேல வழன்மேவு மொருபாலை
நெறிகூறுவாம். (௧)

மண்மாறு நீர்மாறு மெரிமாறும் வளிமாறு
தம்மாறுமேல்
விண்மாறு மாளாத தொன்றில்லை நிலையாமை
யழல்வேவவே. (௨)

இருடாவும் வன்னெஞ்சர் நன்னெஞ்ச ரென்றில்லை
யார்கண்களுங்
குருடாய்வி டுந்தீய கடமண்டு கோபக்
கொடுந்தீயிலே. (௩)

எத்தீயி னுங்காம வெந்தீகடஞ்சேரி டும்பைக்கெலாம்
வித்தீயு மதுசா டசத்தீயு மவ்வாறு மேஃகொள்ளுமே (௪)

நாசஞ்செய் பவவன்னி யழலாற வருண்மாதி னுமைமகளா
நேசஞ்செய் மொழிமாரி பொழிபோது
மொருகண்ணு நீரில்லையே. (௫)

காயத்தி னுயிர்கால வனல்வெள்ள மழல்மாற
நிழல்கண்ணினன்

னேயத்தி னருள்செய்ய பாதத்த வர்க்கன்றி
நிழலில்லையே. (

வேறு.

குறுகினண்ட ரழிவரென்று மொழிவதென்கொல் கொடி
தீ; மூறுகியண்ட முகடுகொண்ட முளரியானு முனியு
கருகியிந்து நிறனழிந்து கடமெழுந்த கனலிலே
யுருகியந்த வரியுமென்று முததியின்க ணுறைவதே. (
கலையிலங்கு மரனையும்பர் கடவுளென்று விடுவதோ
மலையினும்பர் புகினுமண்டு மதனவங்கி விதனமே. (
தரையினின்ற வவையெனும்பர் தருவுமில்லை சுகதர்த
மாசுமில்லை யுரைசெய்பந்த வனலிலங்கு மழியுமே. (
அழியுமிந்த வனலினெந்த வுலகுமென்ற வருகர்தா
மொழியுமந்த வருகர்பிண்டி மரமுமில்லை முடிவிலே (

வேறு.

உள்ளிற் பார்திப் போதும் பிரிந்
திரேனென் றுண்பேய்க் குரைக்கும்பேய்க்
கள்ளிப் பாலை யல்லாலோர்
கள்ளிப் பாலை யில்லையே. (

பொருவி றந்த வானவரும் புகன்ற விந்தக் கடத்தியை
வெருவி யன்றே பிறப்பில்லாவெளியாம் வீடும்விரும்புவ

வேறு.

உன்னவரி தாயதிரு வுருவுதன்னை

யுணருமதி மாறெழிய மானுமில்லை
பன்னுகலை யொழிய வொருகலையுமில்லை
பரமாம்ஸ மென்பதல்லாற் பறவையில்லை (௫௪)

பெருகிவருந் திருவுள்ளக் கருணைநீரும்
பேணுமடி யவர்தமது பெருகுடன்பா
லுருகிவருங் கண்ணீரு மில்லையாகி
யுலகினுயி ருய்வதற்கோ ருபாயமுண்டோ. (௫௫)

வேறு.

தம்பி ரானிரு செங்கம லப்பதந்
தங்கி டாமன னேயித்த மூல்வன
வெம்பி ரானையுன் னுதவு யிர்களே
யிவ்வ னத்தினி யங்கிடும் பேய்களே. (௫௬)

காடு முற்றும் ஆ — சுசு.

தேவி-உட்சோலை.

தூப்பி லாவல கைக்கணஞ் சேர்புறஞ்
சோலை யைச்சில சொல்வினஞ் சொல்லுதற்
கொப்பி லாளுறை கின்றவுட் சோலையை
யுரைப்ப தன்றது வுஞ்சிறி தோர்துவாம். (௫௭)

தாயும் பூதலுந் தென்னையு மாண்டுகொ
டம்பி ரானும டியரு மல்லது

பேயும் பூதமுந் தேவரு மற்றும்பி
றக்கும் யாரும் புகுதப்பெ றார்களே. (உ

வேறு.

வெந்து தாபதர்க டாயுதர வெந்தீயினால்
வந்து தாபமறு நீழலவண் மந்தாரமே. (1
மெய்ம்மை யேபெறவி ரும்பியடி மேவில்வின
தம்மை யேபெற வழங்குமவள் சந்தானமே. [ப
பாரி சாதமுட னும்பர்பல முந்தருதலாற்
பாரி சாதமென வும்பர்முனி வோர்பகர்வரே.
ஏம நல்குர விரந்தவர்க ளெல்லையில்பரந்
தாம நல்குமரி சந்தனமெ னச்செசாறருவே.
கற்ப கந்தருவ நக்கலைக டந்தபொருளே
கற்ப கந்தருவ தக்கலைக டந்தபொருளே.

வேறு.

பிறிவழி யின்றி யுருகிய நெஞ்சு
பெருகிய வின்ப வுருவையே
பொறிவழி யின்றி மலர்வன நின்று
புலனெனு மைந்து தருவுமே.
மலர்தரு பஞ்ச தருமது வின்ப
மறிகட லென்ற மறையெலர்.

மலரவ னந்தன் மகனர னின்ப
மதிநொரு விந்து வளவதே. (௬)

வேறு.

யாது நாசமு றவழி யொன்றிலா
வின்ப மாய்விளைந் தென்றுந்த ருணமா
யோது நாலு மறையின் கொழுந்தின்மே
லுள்ள ஞானக் கொழுந்தொன் றுமோங்குமே.

முடிவி லாப்பெரும் பாழாய்ச் சராசர
முற்றுந் தியவு மற்றெனை யாளவும்
வடிவி லான்வடி வாகிவ ருந்திரு
மாது பார்க்குங் கழுநீர் மலருமே. (௭௧)

வேறு.

பத்தி யாங்கடற் றோன்றுமோர்
பாவை முன்றிலிற் சங்கநன்
முத்தி யாம்பெறவ ழுங்குமே
முன்னை நான்மறைமு ழுங்குமே. (௭௨

மொழியி னுல்லளப் பரிதென
முளரி நல்குமுத் தேவரு
மழியு நாளினு மழிவிலா

வளவி லாதமர் நிதியைப்ப.　(௮
உட்சோலை முற்றும்

வேறு. தேவி கோட்டம்.

தொந்தமி லாவுள மென்றுமொ ழிந்தன
சுருதிகள் சொல்லளவா
வந்தமி லாதவ கண்டனொ டம்மை
யமர்ந்திடு மாலயமே.　(௮
விடவில மேவரும் வேதவி ழுப்பொரு
டனைவிட வில்லடியா
ருடவில மேயென வோர்தினன் வார்தநல்
லூரானு வப்பினொடே.　(௮

வேறு.

அண்டமெலாந் தன்னுடைய் வகத்தடக்குந் திருமேனி
யம்மைக்கேற்க
வுண்டெனலா வதுகோயி லன்பருள மல்லதுவே
றுலகத்துண்டோ.　(௮

வாசல்

செழுந்தரள வடமின்றி யகிலாண்ட வடமணியுந்
திருவேர்வம்மா
தெழுந்தருளுந் திருவாச லிருசெவியா மடியவரோ
பெரியர்யாரே.　((

விளக்கு.

ர'மதி யொழியலகைக் கிடும்விளக்கா மன்னைதனக்
மாருள்ளு
ா றுமதி யாந்தன்னை யொழியவவி யாதவிளக்
த்தாண்டோ. (மெஅ) ஆ. அச.

தேவி கோலம்.

லும்வந் தென்னையாண்ட தம்பிரான் மலர்ப்பாதந்
தோருள்ளக்
லுவந் தருளியுறை கோமளத்தின் றிருமேனி
லுற்றும். க)

வேறு.

மேலார்க மீரேழின் முளரிவாழு மூதாதை
பிபிலி கர்த்தக முடிவதாக மேல்கீழ்செய்
ம்வாழ்வும் வாணுளும் வலியும்வேறு வேருகி
நேக மாகோடி வடிவிலேக மாயாளே. (உ)
மாதர் வேல்போலும் விழியும்வாணி லாவிசு
மோர்வி டாதோதி நரகிறைளும் வீழ்வேனை
மாத ரார்க்கேத மகலவாள வோர்மேனி
ாதர் தாமேவ வருளுகாதல் கூர்வாளே. (ங
ரோ டோவாது நதிசெய்நாதர் சீர்பாத

நளினகீத நாவார நவிலுவார்க் டாழார
வயனுமாலு மேருளு மவனுநாளு மாராயு
மழிவிலாத வோர்போத வயிர்தபான மீவாளே. (௪)

நிலனில்வானில் வாழ்வோர்க ணிலையிலாமை தாளுடி
நிகரில்வீடு சேர்போத நெறிகள்போல வேகூறு
சலனவாதில் வீழாது தமையலாது தேடாது
சமதமாதி சேர்வார்க டலையின்மேவு தாளாளே. (௫)

வேறு.

அடியவ ரளவறு பிறவி யச்சம
தறவரு ளியபத மறியு மித்தனை
முடியறி வீறமுயல் பணிய வர்க்கிலை
மொழிமுடி வெனமறை முடிவு ரைக்குமே. (௬)

அலர்மண முரைபொருண் மணிய திற்பிரபை
யவையிவர் நிகரென மிகவு ரைப்பதோர்
கலவிசெய் தொருவடி வுறம தற்செறு
கடவுளை மருவிய கனத னத்தளே. (௭)

அருவென வுருவென நிகழு னைத்துமோ
ரணுவென வவளொரு திருவு ருக்கொளு
முருவினை யணுவினி னணுவெ னக்கொளு
மூணர்வரி தவள்செயு மொருந டத்தையே. (அ)

## வேறு.

நிகழுமுலகினிலகில வுயிர்விழியு நிகழவொளியே
திகழுமெரி மதியிரவி திகழுமொளி திருநயனமே (௧௧)
கவியுமிகு ககனவொலி யுலகினுயிர் கருதும்வகையே
செவியினூறு திசைகளையு முதவுமவள் செவிமலர்களே. ()
நவமணியு மிறைவிதிரு வுருவினொளி யுடனவிலலா
முவமமல வுலகமுயி ருணர்வுணரு மொளியவொளியே. ()
கருமுதலை கவரவொரு கரியதுயிர் கழிபொழுதிலே
யொருமுதலை நினையவிருள் கிழியவருமொளி திகிரியே. ()
கருமிடைசெய் பலகரண வவுணர்நிசி சரர்கணனலா
முருமிடியி னரவின்முடி வுறமுழவு மொலிபணிலமே (௧௩)

## வேறு.

கறுக்குநிசி சரன்செவி வாய்முதல ஞானகரு மறுகமௌனமே
யொறுக்குமொரு பதுசிரமு முருளவொரு கணையிறைவி
தனுவுதவுமே. (௧௪)

## வேறு.

ஊனவடி வாளவுணர் கோடிபடை சாயவொழி
யாதொளிருமெய்ஞ்
ஞானவடி வாடனது ஞானவடி வாண்மிகு
நலன்பெருகியே (௧௫)

முத்தண்டு மொருதண்டு மலவெய்ப விறன்மோக
னெனுமந்தக
னுத்தண்ட மொழிவிப்ப துணர்வின்ப வுருவான
வொருதண்டமே. (கசு)

வேறு.

ஒழிவி லுலகெனு முருவினிறையவ
னாகவணைமிசை யணைவதே
யழிவிலறிவெனு முருவினலமிகு
முடியரகமல் ரமளியே. (கஎ)

எந்தவளவறு மண்டமனுவென
வண்டமெனவனு விசையுமா
தந்தவளவமை கின்றதடியவ
ரம்பொனகமல ரமளியே. (கஅ)

அயர்வுநினைவறு மகமென்மலரினி
லகிலபுவனமு மில்லையே
யுயிருநிகழ்விலை பரமுநிகழ்விலை
யிறைவியுணர்வொளி யுள்ளதே (கக)

வேறு.

ஆடிசூடு வாரடியா
ரமரர்முடி யவர்கோவின்

முடிசூடப் பெறுவதுவோ
பெறிற்பெறுவார் மூவருமே. (௨0)
மொழியின்மொழி மொழியினருண்
முதல்வியடி யாரொழியப்
பழியின்மறை யறியுமோ
பதம்பணிந்து பாடவே. (௨௧)

வேறு.

நாரணனை முதலாக கைவதீர வுலகங்காப்
பவரைக்காக்குஞ்
சீரணங்கின் பதமொருகாற் பிரியாநல் லன்பர்களே
திருமெய்க்காவல். (௨௨)
ஒன்பதுதீர்த் தமுமன்பர் தம்பாதம் விளக்கியநீர்க்
கொவ்வாதென்றே
யன்பர்கடங் கண்ணீர்கொண் டம்மைக்கு மஞ்சனநீ
ராட்டுவார்கள். (௨௩)

வேறு.

யாபபுச் செய்ய வலங்கலு மர்டையு
மெனது நெஞ்சுசெஞ் சாந்த மிருக்கரங்
கூப்புச் செய்கை யணியென்று கூறினன்
குருகை யாளிமற் றூர்வல்லார் கூறவே. (௨௪)
புகலு மாறரி தாகிய பூவைக்குப்
பூத பௌதிக மாகிப்பொ லிந்திடு

மகில மாவி பரமிவை யன்றியே
யண்ட ருண்ணு மமுதோ வமுதமே. (௨௫) ஆசா

ஆல்.

சிவனி டங்கொடிரு மாத மர்ந்தருளு
தெய்வ வாலமுள தென்று முன்
னுபநி டங்கள்பல வோதும் யானும
துரைக்க லாமள வுரைப்பனே. (௧)

வேறு.

ஆனமுதலின்க ணேயடைய வாதியிறைபண்டை நாலுமறை
யாயவரி தென்ற வீடுவிளை யாடியருள்கின்ற தோர்மொழி
யில், வானமுதலைந்து பூதமிய மானனிகழ்சந்த்ர சூரியரு
மாயவருமென்று மோதுமொரு வாதையறநின்று நீடியது

ஆயபலவும்பர் வானமிடை யான்நிலனம்பு ராசிமலை
யாழுமுறநின்ற பாதலனு மாகவிவையைந்தி னேழுமவை
மேயபலவும்பராதியென வேறுபடவந்த யோனிகளு
மேவுசகதண்ட கோடிபலம் வீழவெழநின்ற சாகையது. (௩)

நாலுமறையங்க மாறுசிவ ஞானன்விரிஞ்ச னுமகில
நாயகர்விளம்பு மாகமமு நாடுபதினெண்பு ராணமிறை
கோலமறைகின்ற கீதையிதி காசமுடனன்ப ராவிகளி, கூ
மொழிசெஞ்சொன் மாலைபல கூறுகிளிதங்கு கூடுளது. (௪

ஓருவமையின்றி மேவுபர லோகமுறு கின்ற வீடுமிறை
யோனையெதிர்கண்டு வாழவரு மோரளவிலின்ப வீடுமவ

னோருவமையென்ற வீடுமொருசீர்மையுறவொன்றும் [வீடுமிவை
கீதிபெறவெம்பி ரானருள நேயமொடிருந்த நீழலது. (௫)

வானு மிறைவன்ச தாசிவனு
மீசனுமியங்கு மாருதமும்
வரளெரியு மும்ப ருமரனும்
வார்புனலும்வெங்க ணுகணேயி
ஞனுநிலனும் பிதாமகனு
மாகவரு மைந்து பூதமிவ
ராவ தனுவின்ப மாணமினி
யாலி னளவென்கொ லோதுவதே. (௬)

வேறு.

சொன்னவாலி னின்னவூச லெல்லைசொல்ல வில்லையா
மன்னவாகனத்தலெல்லை சொல்லவாகி னுருமே. (௭)

ஆக ாா௰௬.

வேறு பலிபீடம்.

அண்டபல கோடிகளரா லரணபண் டிதரமைத்த
பிண்டபலி யிடும்பெரிய பீடிகையார் பேசுவார். (௧)

வத்தாநின் றிடுகாவோ டிணையடியின் விழுந்தலேகள்
கூத்தாடவுடலமுயிர் பலிகொடுப்பார் கோடியே. (௨)

வேறு.

தம்பிறவி வேரொடு தறிக்குமிறை தேவியிரு
தாடலைகடாங்
கும்பிட லொழிந்துபய மின்றி விளையாடுவ
குறைத்தலைகளே. (௩

வாளெரிபி னிட்டபசு வாவிமகிழ் வுற்றிறைவி
வாணலகை கைக்கொளுமதே
யாளநல னுற்றறிஞர் ஞானவெரி யிட்டபசு
வாவியிவள் கைக்கொளுமதே. (௪)

நிலாவரு முகத்தினி னிலாவிய விழிக்கடை
நிலாதுயி லறப்பருகியே
யுலாவா வரித்தனி யுலாவருவர் மெத்தென
வியோகினிகள் சிற்சிலவரே. (௫)

வேறு.

மருங்கிலா வகைவளர்ந்த தனங்கொண்டு வையமுயி
ரொருங்கெலா மொருங்கும்வகை யோகினிகளுலாவுவரே.
அப்பொழுதைக் கப்பொழுது மதிசயமா மதுவேகொண்
டெப்பொழுது மதிசயமா யிருப்பரிடா கினிகளே. (௭)

வேறு.

இருண்கைக் கிரைகொடுத் தெழிலுருக் கொடுசகத்
திருணசைக் கிடனறுத் தொளிர்வர்யோ கினிகளே (௮

பகலுமத் தமுமறப் பாழுதத் துவமுறச்
சகலவத் துவுமெடுத் தயில்வர்சா தகர்களே. (௯)

வேறு.

அகிலமு மறவிழிந்த தாளுடையா
ரளவறு வறவுயர்ந்த நீண்முடியார்
பகலிருளறநிறைஞ்செய் மேனியினார்
பலிகொள வுலவுமந்த்ர பைரவரே. (௰)

அணிமுடி யளவிறந்து மேவினரா
லணிமலர் பெரிதுவந்து சூடுவர்நீள்
பணிமுடி தரவிழிந்த தாளவர்சேர்
பரிசுற வருள்வர்மந்த்ர பைரவரே. (௧௧)

கரியினு நிறனிருண்ட பேய்தொழுவே
கருணையி னிரவிபிந்து தாரகைவா
ளொரியொளி கெடவிலங்கு பேரொளியா
யிலகுற வருள்வர்மந்த்ர பைரவரே. (௧௨)

கலகலெ னணிசிறந்த பைரவர்நீள்
கலைகளி னொலியடங்க வீணைகபூ
தலகலி கெடவியைந்த கீதமொடே
தமருக விசைவழங்கி யாடுவரே. (௧௩)

பழகிய வுடலமிந்தி யாதியினோர்
பணியற மதிவழங்கு நாதர்கள்பே

ரழகிய கருணைகண்டு நீள்விழியா
லருவிகள் விடுவர்நின்று சாதகரே. (கச

வேறு.

அகிலசக மறையும்வகை யளவில்சுக மதுநிறைய
வமுதுசெய்துதாம்
பகலிரவு தெரிவுதற விலகுமுரு வுடையர்சிவ
பைரவர்களே. (கரு

எம்மையருள் செய்கென விரந்தவவர் கட்கினிய
பைரவர்கடாந்
தம்மையருள் செய்குதலி னெப்பர்தமை யாளுடைய
தத்துவனையே. (கசா

ஏறுமயி டன்றலை துணித்தியமன் வென்றசிவ
யோகினிகண்முன்
சீறுமயி டன்றலை துணித்தவொரு தெய்வமயி
லிற்றிகழ்வரே. (கள)

வேறு.

சாலிவரிதென்று நாலுமறை யாயிரமுகங்க ளானவுயர்
சாகைபலகொண்டு தேடநனி தாரணியுள் வந்து தாமனிதர்
போலவெளிவந்த நாதனிரு பாதமுடி கொண்டு பூமியிடர்
போகவெனநின்றி டாகினிகள் போதமதுவுண்டு பாடுவரே.

ஞாலமயிர்தீண்டு வேகபுல னைகநடநின்று கால்வனைய
நாடிமனவுங்கன் மேவுமுயிர் நாசமுறுமந்த காரமதி

யாலமமிர்துண்டு நாடரிய வாதியிறைபண்டை நீதியிவை
யாகுமெனவன்பர் காணவிளை யாடுவர்கணங்க ணாயகரே.

பெலிபீடம்முற்றிற்று.

ஆ கஙரு.

---

பேய்.

போதமாம்வடி வுள்ளவாறறு போகமார்குத லின்றியே
பேதமாகிய வாதமேபகர் பேய்களைச்சில பேசுவாம். (க)

வேறு.

நீதிகணபங்க மேநிலை யானவுயிரும்பன் வானிலை, நீரின
தொழுங்கு போன்மதி நேருறவியம்பு வீடிறை, போதிநி
ழலின்க ணோதிய போதநெறியென்று வாதிகள், போரின்
மிகவென்று சீலர போர்வைபுனைகின்ற பேய்சில. (உ)

ஏசுமுளதின் றநேகம தேகமெனநின்றி டாதுட, லேதனள
வின்ப வீடுல கேழின்முடிவென்ற மாறுகள், பேசுமருகன்
ற னூனெறி பேணியுடையின்றி நாடவர், பேயெனவியம்ப
வோர்துடை பீலிகொடுநின்ற பேய்சில. (ங)

நாடுபரனன்றி தீவினை நாகநிரயங்க ளாருயிர், நாசபவபந்த
வீடெனு ஞானமவமென்று மாம்வழி, தேடுபொருள்
கொண்டுநாரியர் சீரடிபொருந்தல் வீடிது, தேவர்குருவின்
றன் வாய்மொழி தேறுமெனநின்ற பேய்சில. (ச)

நாதனறிவென்று மாமறை நாவின்முடிவெங்கு மோதிய
ஞானநெறிகண்டும் வீடுற நாளுநினைவின்றி நீள்வினை
வேதநெறியென்று மீள்வறு வீடுபிறிதின்றி வானக
மேவுமிதுவென்று நாடொறும் வேள்விசெயநின்ற பே
சில. (௫

ஆனவுடலிந்தி யாதிக ளாகுமெனபுந்தி மானக
மாருயிர்கள்பந்த வீடுக ளாதியிறையென்ற போதமும்
வானமுதலைந்து பூதமு மாசுர்முதல்வந்த யோனியும்
வாழுமயனண்ட கூடமு மாயையெனநின்றபேய்சில. (௬

ஆழிவளைகண்ட தேகுறி யாகவிழிகின்ற சாதிக
ளானுமவருண்ட சேடம தார்வமுடனுண்டும் வேறில
னூழியுலகுண்ட கோன்முழு தாகுமெனுமின்ப மார்குரு
கூரன்மொழிகண்டும் வேறுற வோதிமயல்கொண்ட பே
[சில (௭

நாதனருள்சண்ட யான்மறை ஞானமுனிபண்டு பாடிய
நாலுமறையந்த நீதியை நாடிநெருநிஞ்சின் மானிகழ்
பேதமதுகண்ட போதநி பீதியெனநின்ற தாமொரு
பேறுமிழவுங்கொ ளாமிகு பேதமறைகின்ற பேய்சில. (௮

ஆதிமறையந்த நீதியை யாயவறிகின்ற போன்முன
மாயவறிவின்மை யால்வரு மாகதிசைநின் றனேகமு
மோதுபரனென்று வீடுறு மியோகதிசையின்க ணேக
மோதிமறையெங்கள் பாலவி ரோதமெனநின்ற பேய்சி

ஆழிபுலகங்கள் வீடுற வாரணம்விளங்க வோதிய
வாதிபிறைசந்த்ர மௌலியை யாடலதுகண்ட கோமளம்
வாழிசகதண்ட நாயகி வாழியெனவின்ப மாமகிழ்
வாசநறவுண்டு தாமதி மாறிவிழுகின்ற பேய்சில (௰)

மேலிரவிபிந்து சேய்புதன் வியாழன்வெளிமந்த னீராறு
மேடமுதல்வந்த ராசியை வேறுபடலின்றி நாளெழு
நாவில்வருகின்ற வாறுக ஞாசநிகழ்சிந்த ஞாதிக
ஞாடியறைகின்ற சோதிட நாளுமறைகின்ற பேய்சில. (௰௧)

வேறு.

முனிக்கண மெல்லாமனிதர் பந்தமுற வீடுபெற
மூலமிது வென்றுபகரு
மனக்கடவு ளானசெழு மதியொழிய வேறுபர
வத்துவில தென்றசிலபேய். (௰௨)

விண்ணவ னியானையும் விளங்குவது மற்றவ
னெழுந்தருளின் மேவுமுயிரின்
கண்ணவ னலாதுபிறி தில்லைகதி ரோனலது
கடவுளில தென்றசிலபேய். (௰௩)

மாலய னுருத்திரன் மகேசுரர் சதாசிவரு
மற்றுமுள தேவருமெலாங்

காலவச ராயழித லாலழிவி லர்மலுள
காலமிறை யென்றசிலபேய்.

பாவருல கத்துவினை வெல்லவுரி யாரமரர்
யாவரு மிறைஞ்சுமொரு முத்
தேவரு மொழித்திலர்கள் செய்தவினை யன்றியெ
தெய்வமில தென்றசிலபேய்.

அந்தர மியங்குநரும் வருவாரி யாளியர
வாதிகளு மஞ்சுமுலகு
மந்திர வசத்திறைவ ரென்பதுவு மற்றதனை
யென்றுமய லுற்றசிலபேய்.

மூத்திதர வோதுமிரு முச்சமய நாலுமறை
நாலுமுழு துந்தருவதாஞ்
சத்திதரு மந்திரமு மெய்பொருளு மாகுவது
சத்தமென நின்றசிலபேய்.

வேறு.

வழுத்தித் தற்பசி யார்க்கவி பாடுநர்
வழுச்சொற் சொற்றறி யர்த்தன மோதுதற்
கெழுத்துச் சொற்பொரு ளியாப்பலங் காரமென்
றிவற்றைக் கற்றிரு மாப்புறும் பேய்சில.

படித்துப் பற்பல நூல்களுங் காமுறு
பசிக்குக் குத்திர ராயிரந் தார்கையிற்
பிடித்துப் பிச்சையி டாரகம் போயவை
பிதற்றிப் பய்க்கழு ளுவரும் பேய்சில. (௧௯)

வேறு.

ஊழைக் கழியச் சிலகா லமிருந்
துண்ணாக் கருதூற் றுடலத் துளவுங்
கூழைக் குமிழிட் டுமுகந் ததனைக்
கும்பித் துவிடுஞ் சிலகூ ளிகளே. (௨௰)

கடவா ளரிகோ முகம்வீ ரமலர்க்
கமலம் மயில்பத் திரசோத் திகருக்
குடவா தனமென் றிருகை யொடுகால்
கோணப் பழகுஞ் சிலகூ ளிகளே. (௨௧)

தீதீர மலமென் றுணரா துடலைச்
சேமிப் பவைதா னதினு வலசிக்
கோதா மலமும் மெனநல் லறிவோர்
கூறத் திரியுஞ் சிலகூ ளிகளே. (௨௨)

மூலந் திகழுங் கியுருக் கவிழு
முடிசே ரமிர்தத் துளிமுத் தொருசெஞ்

கோலந் திகழ்தந் துவிளுற் றிதெனக்
கோள்கொண் டயருஞ் சிலகூளிகளே. (௨௩)

தோயத் துலவச் சுடுவெங் கனலிற்
றோயச் சுரர்சா திகள்போ கியவா
காயத் துலவக் காயத் தைவிடக்
காயத் திலுறக் கற்குஞ் சிலபேய். (௨௪)

ஆடம் பரமா மறுமைத் துணையா
மசனைத் தமகத் தொழியப் புறனே
வேடம் பலகொண் டுநடித் துழலும்
வேதா ளகணங் கள்விதம் பலவே. (௨௫)

வேறு.

கூடிய வாய வினைபல கத்துவ
கொடிய வாயன கொள்ளிவாய்ப் பேய்களே, (௨௬)

ஆ ௱௯௬.

---

தொழில்.

ஐநூ கோடி யள்வென் றிப் பேய்களுக்
கோது கோமிவற் றின்செய லோதுவாம். (௧)

வேறு.

அமையக்கற் பதுவிட்டுச் சிலதர்க்கித் தமையாச்
சமையக்கத் ததுகற்றுத் தலைமுட்டிக் கொளுமே. (௨)

பொருதர்க்கப் பரபட்சச் சமயத்தைப் பொரவே
விருதிட்டுப் பொருதிட்டுத் தனைமெச்சிக் கொளுமே (௩)
சயமுற்றப் பொருண்முற்றத் தமிழிட்டுச் சொலவா
ரியமிட்டுச் சொலவொட்டொட் டெனவட்டித் திடுமே (௪)
சொணவத்தத் தினைமுட்டத் தொடாக்கெட் டினையான்
வினவத்தட் டிலதைக்கத் தெனவெட்கிச் சொலுமே (௫)
உனதர்க்கப் பொருள்பத்தெட் டுளதட்டிப் படியே
யெனதர்க்கப் பொருளிற்றட் டிலமுத்திக் கெனுமே. (௬)
பரிசுத்தப் பொருளெத்தத் துவநித்தத் துவமே
துரிசற்றுக் கெடுமித்தைத் துணிசித்தத் தெனுமே. (௭)
தலையிற்சொற் கடையிற்சொற் பொருளொக்கத் தழுவா
மலையச்சொற் கெட * வத்துத் தினசொற்கட் டிடுமே.
துணிவுற்றத் துவிதத்தைத் துவிதத்தைச் சொலவே
பணிவுற்றுத் தணிவற்றிப் படித்திக்கப் படுமே. (௯)
குருதர்க்கத் தினிவ்வெற்றிக் கொடியிட்டுக் கொளுமே
யொருதர்க்கக் கழுதைச்சொற் றொருதர்க்கக் கழுதே.
தெரிசித்துப் பரிசுத்தப் பொருள்சித்தத் துதவா
தெரிசித்தத் தொடுதர்க்கித் திடமற்றிப் படியே. (௧௦)

வேறு.

அறவுரைக ளவையெனவு மிவையெனவு மலகையுட
னலகைபிசுவிற்

---

* வத்திப்பன எனவும்பாடம்.

செறவுரைசெய் பலகலையி னெறியினுயர் ககனமுடி
செவிடுபடுமே. (௯௨) ஆ ௱௯௩)

தொழின் முற்றிற்று.

---

உவமை.

கன்றின வுளத்தொடு களத்தினி னரம்புகள்
பரம்பவமையா
தொன்றினுரை யொன்றுரைசெ யாதகலை யோதல
கை யொப்புரைசெய்வாம். (௧)

வேறு.

நன்னலத்தபர ஞானநிற்கவினை
நல்லறப்பயனை நச்சுபேய்
கன்னலைக்கழிய விட்டதற்றகழி
னோதுகொள்பவர் கடுக்குமே. (௨)

உட்கிடந்தமல னெழிவுறுதுபுனல்
கொண்டிட்டம்புகழு வுற்றபேய்
மட்குடந்தனின் மலத்தைவைத்தது
புறந்துடைப்பவனை மானுமே. (௩)

அறங்கொணெஞ்சொழிய வலகை யன்பினொடு
கட்டிநின்றவழ கார்மடம்

புறங்கொள்செஞ்சடை யகங்கொள் காமவெரி
போதருந்தகைமை போலுமே. (௪)

தன்னினுறிய நின்றமானமவை
கொண்டுதன்னதுரு நாடுபே
யுன்னினுவமை பாதவங்கொடெரி
பாவகற்கடுத லொக்குமே. (௫)

துதித்தலென்குருவும் யாமுமோரறிவ
தாகுமென்றுவினை சூழவே
மதித்தபேயுகவு நன்றிகொன்றவள
வற்றபாதகனை மானுமே. (௬)

கள்ளையுண்டுமுன் புள்ளபோதமு
மிழந்திடுங்கழுது கையின்முன்
புள்ளதுங்கெட வவாவிருவிரத
வாதமுதுபவ னொக்குமே. (௭)

அருந்தலும்புணர்வு மாதரித்துழலு
மலகைவலையரிடு கண்ணியிற்
பருந்தின்வாயரவின் மண்டுகங்கொள்சிறு
பறவைநுகர்நறவை யொக்குமே. (௮)

பந்தமுத்திபெற வொருவரின்றிவரு
பவமறுக்குமயல் வுற்றபேய்

வந்தைபெற்றமக னுற்றநோய்விட
மருந்துசெய்பவரை மானுமே. (கூ

ஒன்றுபல்பொரு ளநித்தநித்தமு
முள்ளதில்லதுரு வருவமா
மென்றுசொல்லலகை தெளிவுவல்விருளி
னிருளையிட்டதிலி னொக்குமே. (0

வேறு.

போதமாயகண்டமான் பொருளதொன்றை யெண்ணில்பல்
பேதமாக்கு மலகையெண்ணில் பிரமகாதர்போலுமே (கஉ
தன்றெழிந்து வேறெனச் சகத்தைநாட லுற்றபேய்
பொன்றெழிந்து பூண்விரும்பு போதகினர் போலுமே.
எதிர்நிகழ்ந்த துண்டலாத தில்லையென்றி யம்புபேய்
கதிரையில்லை யென்றியம்பு கண்ணிலாள னொக்குமே. (
இடும்பையோடு சுற்றமுற்ற வின்னதீர்க்க நின்றபேய்
குடும்பிகோபுரஞ்சுமந்த கூனுபாவை மானுமே. (கச

வேறு.

இக்களேபர நிற்கவி யற்றுபேய்
மொக்குள் பூண்கட்டு மூர்க்கனை யொக்குமே. (கரு

வேறு.

அகலி டத்துள தீங்கெலா மவற்றினுக் கனுவாம்
புகல்வ் தென்கொல்பேய்க் கழகுபொல் லாமையேயன்றே

பேதமன்னுபூதங்களின் பெருமைபார் சொல்லும்
பூதமைந்தையும் பெற்றது மவற்றினோர் பூதம். (கஎ)
ஓதவெல்லையுண் டாதலி னுய்ந்தில வலகை
போதமெல்லையி லாமையின் மெலிந்தன பூதம்.() ஆ. ௩௧௧

---

விச்சை.

எக்க ணங்களு மெத்துதி யுங்கொடு
தொக்க ணங்கினைச் சூழ்ந்தடிபோற்றவே. (க)

உம்ப ராதிப ராமும்பர் கைதொழ
வெம்பி ராட்டி யிருந்தரு ளெல்லையில். (உ)

விச்சை யாவையுங் கற்றவிச்சாதர
ரிச்சை யாம்பர விச்சையை நெஞ்சிலே. (௩)

ஆய காலமி தாமெனவங்கொரு
பேயை வாவென்று பேய்த்தனம் போக்கவே, (ச)

வேறு.

ஆணுடன்பெணலி யாயுடம்புக
ளாநந்தமாயதனி லொன்றினெண்
சாணுடம்பினள வாவிருந்தநின்
றன்மைபாரதனி னன்மைபார். (ரு)

மடக்குமாறுமிகும் வானவர்க்குமரி
தாயறக்கடிய வாயுவிற்

கடக்குமாமன னடங்கல்பாரஃ
தடங்கிநின்றதொரு கருமைபார். (௬)

புக்கபூமிதெரி யாதவாறுமுன்
னின்கணின்றபுரை யொன்றிலா
மிக்கபேரிரு ளொளிக்கஞானநல்
விளக்குவந்துகண் விழித்தல்பார். (௭

விழித்தியாவையும் விழித்திமைத்துவெ
கமைத்தளித்தகில மீளவு
மழித்துமூவர்களு மாகிநின்றவது
வாதல்பாரதுவ லாமைபார். (௮

இட்டதீப்மு மிலங்குமெய்ப்பொருளு
மெண்ணும்யாவைகளு மின்றியே
விட்டதீயென விளங்குமாறுமற
விட்டிருந்ததொரு விரகுபார் ௯

களிக்கயர்வையு மிறந்ததென்றவு
மிறந்ததேர்கரிய கங்குல்போ
யொளிக்கயாவையு முணர்ந்துநின்றபர
மானவொண்கதி ருதித்தல்பார். (௰

எண்ண்வாருமிசை யாதலண்டசத
கோடிபுந்தரமு னேதுவரம்

விண்ணையாதிவரு பூதமைந்தினையும்
விழியினானது விழுங்கல்பார். (௧௧)

காட்சியாவுமொரு கண்ணதானபடி
பார்கவின்பெற விருந்ததோர்
மாட்சிபார்வசன மானகோசர
மலர்க்கையுற்றமணி யாதல்பார். (௧௨)

மறப்புமின்றியோர் நினைப்புமின்றிமலர்
வதுவுமின்றிமலர் வற்றதோ
ரிறப்புமின்றிநிக ரின்றியிப்பொரு
ளிருத்தல்பாரென வியம்பவே. (௧௩)

அலகையாயுழலு மென்னையேயுள
வனந்தவின்பவறி வாக்கினா
யுலகையார்தமி னொருத்தனாமென
வுனைக்கருத்தினி னினைப்பதே. (௧௪)

முன்னையானெனது கண்டிலேன்மொழி
யிறந்தவின்பவறி வாயினே
னென்னையானினி வியப்புமாறென
விறைஞ்சிநின்றவனை யேத்தியே. (௧௫)

இந்தவிச்சையுல கத்திலியாருள
ரெனக்குநின்றிரு வுளத்தினால்

வந்தவிச்சையென வவனுநயகி
மலர்ப்பதங்களில் வணங்கவே. (கசு)

அன்னையாதரவி னோடவன்றலையி
னம்புயப்பத மளித்தவந்
தென்னையாளிபர விச்சைவல்லவனை
யாவரும்பணிமி னென்னவே (கஎ) ஆ உா அ.

---

பேயிரங்கல்.

விச்சைகண்டவர்க டொழுகைகண்டவை
மிகப்பசித்துவிழி சுழலுவேம்
பிச்சைகொண்டுணவு மிடுகிலார்களிவை
பேய்களென்றிகழ்வு பேசியே. (க)

அண்ணலாரடியர் கொண்டநல்லவற
வேடமாகுமவை கொண்டியா
முண்ணலாமென நினைந்துகொண்டன
மறிந்துகொண்டதிவ் வுலகமே. (உ)

எந்நிலங்களும் வளர்ந்தவேழ்கடலு
மெப்பொருப்புமுள யாவையுந்
தின்னினும்பருகி னுங்கெடாதுபசி
யென்னருந்துயிது தீருமே. (ங)

வேறு.

தாகமோ காதிபெலாந் தணிக்குமொரு தனிமருந்திங்
கேகமா முணர்வென்ப ரெங்கள் கணிற் காண்கிலமே. (௪)

அந்தவொரு மருந்தினைப்பெற் றநந்தமா யிரத்தொருவ
ருய்ந்தவருண் டிலையென்ன வோதுவதும் வேதமே. (௫)

மகனாராப் பெற்றமறை வல்லவரும் பெற்றிலரா
சுகனார்பெற் றனரென்று சொல்லுவதும் வேதமே. (௬)

அப்படியே யரியபொருள் பெறுமவரா ரலகைகளா
யிப்படியே யிப்படியிற் றிரிகின்ற யாங்களியார். (௭)

கற்றெல்லை யறப்பிதற்றிக் கண்குழிந்து கடைக்கொடாறுஞ்
சற்றல்ல யாம்பசித்துத் தடுமாறுந் தடுமாற்றம் (௮)

மழித்துநீட் டியும்பறிந் தும் வற்கலைகள் பலபுனைந்து
மொழித்துங்கோட் டிகள்கொண்ட தெத்தனையா முண்ண
[ வே. (௯)

கருக்கெடுப்போ முங்களோநாங் கழல்சூட்டி யென்றுபோய்க்
குருக்கெடுப்போ மெனிற்கண்டு குதித்தோடிப் போவர்
கவே. (௰)

பேசிலோ வல்லவாய்ப் பேயென்பர் பேசுதற்குக்
கூசிலோ வூமனெனக் கொச்சையெனக் கூறுவரே. (௧௧)

துதிப்பாரைத் துதிப்பதுவுந் துதித்தாலுந் தம்மையவ
மதிப்பாரை மதிப்பதுவும் வயிறொருசாண் வளர்த்தற்கே.

மிகையாகும் பகைபிதனில் வேறுண்டோ வுற்றவரும்
பகையாகப் பண்ணுவதும் பாழ்வயிறே யல்லவோ. (கசு)

இந்தவயி றேபெரிய தேழ்கடலோ பெரியதுதான்
வெந்தவயிற் றுள்ளெரியோ வேலையினில் வடவெரியோ
வந்தனைசெய் தனைவாழ்த்த வைத்தருளாய் வயிற்றினெரிக்
கிந்தனந்தே டிச்சுழலப் பண்ணினைநீ யெங்களையே

உடலெழுசா ணுப்பண்ணி யொருசாணு மொழிப்பதற்குக்
கடலுலகி னுடலமெலாங் காண்பானைக் காண்கிலமே. (கஅ)

பிழைத்தக்கார் பொறுத்தருள்கை பெரியோய்நின் கடன
ன்றோ, யுன்பிழைத்தக்கா லடியோங்க ளுனைக்குறுதி யுரைத்
தருளே. (கஎ) ஆ. உஉ௫.

வேறு—கனவு.

எனவிளைப்பெ லாம்விளம்ப யிரவுகண்ட தொருகனவு
நனவெனத் திகழ்ந்ததென்ன வொன்றுநின்று நவிலுமே.

இமைத்ததோர்க ணில்லையோவெ ரெல்லையற்ற வல்லையிட்
டமைத்தவோர் மகாந்தகார நின்றியா னமுங்கவே (உ)

விட்டிலங்கு தீபமேற் றிசைக்கணே விளங்கவோர்
மட்டலங்கன் மார்பினு ளொருத்தன்வந் திருக்கவே. (௩)

எல்லையற்ற வன்பதம் பணிந்தியா னிறைஞ்சவே
தொல்லையுற்ற வன்பரென்னை யாளவென்று சொல்லவே. ()

புலன்களிப்ப லுந்தசெய்ய பொற்பதங்க ளன்றியே
நலன்களிப்ப தென்னையென்று நான்மிகக் களிக்கவே (௫)

தேனுமிக்க பாலுமென்ன நின்றுதித்தி யாவென்முன்
மோனமுத்ரை தன்னிலே யிருக்கவந்த மூர்த்தியே. (சு)

மெய்யெனு நலத்தொடே விழித்ததென் கணிப்பய
னையைநாடி யருளுகென்ன வறியவோது மன்னையே (எ)

அந்தகார மோகனின்னை யாளவந் திருந்தவ
னெந்தைகார ணன்ப்ரகாச ஞான மிட்டதீபமே (அ)

மோனமா யிருந்ததன்மை மொழியிறந்த வின்பமெய்ஞ்
ஞானமா யிருந்தவேறி லாததன்மை நாடவே. (கூ)

மேற்றிசைக்கண் வானவர்க்கு மேலனுக லாலுடன்
போற்றிசைக்கு மன்பர்பாத முற்றபுண்ணி யத்தரோ: (ய)

கருத்தினு டொணுதவெந்தை கண்ணினுட மண்ணின்மே
லொருத்தனுகி வந்தளிப்ப னென்றுவேத மோதுமே. (கக)

வேறு.

மரண மும்பிறப் பும்மறு மாமணி
காண மெல்லாங் கடந்த கடவுளே. (கஉ)

வினவி வந்துநீர் வேண்டிய தேதருங்
கனவு முந்துமுக் காரிய மில்லையே. (கங)

என்ன வன்னை யிறைவி மறையெலாஞ்
சொன்ன வன்பிற வாளென்று சொல்லுமே. (கச)

விண்மு தற்பொரு ளெல்லாம் விளைப்பவன்
கண்மு தற்புலன் காண்டற் கரியனே (கரு)

முந்தை மூவர்க்கு மூலமு னிவர்களுஞ்
சிந்தை யானுந் தெரிதற் கரியனே. (௧௬)

வரவு போக்கற்ற வான்பொரு ளென்றுமுன்
பரவு மாமறை யெல்லாம் பகருமே. (௧௭)

முடிவு மாதியு மற்ற முழுமுதல்
வடிவ மாகி வரும்படி யெங்ஙனே. (௧௮)

சொல்லு கோலஞ் சுருதியி ருக்கமோர்
வல்ல வோவென வன்னை யருளுமே. (௧௯)

அருவ னாகினு மன்பர்க் குருவனாய்
வருவ னென்றது மாமறை காணுமே. (௨௦)

பத்தி யாம்வலை யிற்படும் பார்மிசை
புத்தி யாலறி யொண்ணாப் புராணனே. (௨௧)

தேவி யிப்படிக் கூறத் திருவருள்
பாவி யேற்கில தென்றுப தைக்கவே. (௨௨)

ஆக ௨௪௭.

---

சுசிவன்னபோதம்.

அலகை யச்ச மறவக வர்களு
முலகின் முத்திபெ றும்பரி சோதுவாம். (௧)

புணர்ந்த பர்வமெ லாம்பரி பூரண
முணர்ந்த ஞானி விழியட வோடுமே. (௨)

வேறு.

எழிலொரு ஞானி புகழென்னை கூற
வுயர்வீ டிவன்சொல் வழிசெய்
தொழிலாளர் சேர்கை யதுகேளு முன்னை
யிதிகாச மொன்றுசொலவே. (௩)

தந்தாப மற்ற பரனேவல் செய்த
வவனுற்ற பேறுதனைமுன்
செந்தா மரைக்கண் முதல்வர்க்கெம் மண்ண
றிருவாய் மலர்ந்ததிதுவே. (௪)

உவமிப்பின் ஞானி விழிபட்டு முன்னை
வினைவிட்டு முத்தியுலகிற்
றவமற்ற வெய்ய வினையே புரிந்த
சசிவன்ன னெய்துகதையே. (௫)

வேறு.

ஏமம் புகுவா ருளபா தகரா
மியாவர்க் குளுமிக் கவனு குமிவ
னும்ம் புகல்வார் குலமும் மொரிவரீய்
நரகம் புகுமா றுநடந் தனனே. (௬)

மலமே வியதீ வினையின் வலியால்
மகிழும் பர்பதத் திலிருந் தவிவன்

# மோகவதைப்பரணி.

குலமே வியகென் புலவா ணார்களுந்
கொடிதா நரகங் குடியே றினரே.

மிகமே வியபுண் ணியபா வமெனும்
வினையின் பயன்மே லொருகா லுமுறு
திகமே வருமென் பதணு லானோ
யெல்லா மிவனைச் செறவெய் தினவே.

தன்புத் திரனை யம்விடா மையிறுற்
றவனுற் றனிவற் பெறுதந் தையுளாங்
றுன்புற் றினியென் னைகொலோ புதல்வன்
றுயர்தீர் வகையென் றுசுழன் றனனே.

ஒன்று லும்வினைத் துயர்துய்ப் பதலா
லொழிவிக் குமுபா யமுனக் கிலதே
யென்று லுமறிந் தவனன் புவிடா
திவனைக் கொடுழன் றனனெங் கருமே.

ஒருமா தவன்மற் றிவன்வே தனைகண்
டொழிவற் றுளவொன் றையுளத் தினரு
பரமா கியஞா னிகள்கண் ணுறலே
பரமெள டதமென் றுபகர்ந் தனனே.

தீனந் தமிலா ததனைத் தருவான்
சத்தீச் சுரமென் னுமிடந் தனில்வாழ்

மானந் திபாாயணனென் பவனின்
மைந்தர்க் குறுநோய்க் குமருந்தெனவே. (௰௨)

முடியா வுபதே சமிதென் றவனு
முனிவன் பதமெய் திமொழிந் தனனிக்
கொடியான் வெருவா துகுயிற் றியநோய்
கூறற் கரிதா யகொடுந் தொழிலே. [௰௩]

ஈங்குன் றிருமுன் பகரும் படியோ
விவனெய் தியதீ வினையுன் னவெலா
நீங்கும் படிதன் னனுபூ தியினு
னிகழும் விழிவைத் தனனின் மலனே. (௰௪)

கணியா தபவக் கடுவா னதிருக்
கண்வைத் தனும்விட் டனகா துகடும்
பிணியா வையுநல்ல பிதா விமறைதாள்
பேணிப் பணியென் றுபெயர்ந் தனனே. (௰௫)

இடனே முதலா கவுவந் திறையோ
னேவும் பணிசெய் திவனுஞ் சிலநா
ளுடனே யிவனே திருமே னிதனக்
குரியா னெனவுற் றனனும் பனேடே (௰௬)

நன்று முனிதாள் வழிபா டதனு
ணு விதமா னபிறப் பினைவிட்

டொன்று கியவீ டுணருத் தமர்கட்
குளசா தனநா லுமுதித் தனவே. (௧௭)

முனிவன் றிருமுன் புளதன் குறைதான்
மொழிவன் சிலவுஞ் சவிருஞ் சியதாய்ப்
பணிவுந் திருகண் கள்பதங் களிலே
பலகால் வலம்வந் துபணிந் தனனே. (௧௮)

அருளே வடிவா கியமா முனிதா
னறியா தவர்போ லவுழுந் தலுறும்
பொருளே தெனமைந் தனடுங் கினனிப்
பொல்லா தபவப் புணரிக் கெனவே. (௧௯)

வெருவும் பிறவிக் கடல்வித் தாமுன்
வேதா கமகீ தைவிளம் புமதைக்
குருவுந் தனதன் பன்மனக் களவிற்
கொளுமா றுதொகுத் திதுகூ றிடுமே. (௨௰)

வேறு

மரண பவங்களான புனலை யுடையது
மதியை விழுங்குகாம வரவு பெரியது
கரண வொழுங்கறு தா விடய விரைநுகர்
கணமொ டியங்குமீன மிகவு முகள்வதே. (௨௧)

பெருமித மென்றுகூறு பெருமை யுடையது
பிணிகளெ னுங்கெடாத புலவு கமழ்வது
வருமிட ரின்பமான திரைகள் பொருவது
மனமெனும் வஞ்சராஜ மகர முறைவதே. (௨௨

அளவி லகந்தை யாமை யபரிமிதமுள
வவாவெ னிறைந்தவாழ மறிய வரியது
களவு நெருங்குபாரு மலையு முடையது
கலக விடங்கண்மேவு திருமி நெளிவதே. (௨௩

துகளெனு நன்கலாத நுரைக டருவது
துறவினி னின்பமான கரையை விடவகன்
மகளிரெ னுந்தவாத வலிய சுழியது
மறவியு மஞ்சுகோப வடவை யெரிவதே. (௨௪)

வெருவருகின்றபோக முதலை யுடையது
விவித மனந்தமான துறையு மறிபவ
ரொருவர் கடந்துபோக விரகி லெழுபவ
வுததி விளம்பயாவ ருலகி னறிஞரே. (௨௫)

பொறிவழி சென்றுமீளு மவல மதிகொடு
பொருசம யங்களாறு மறியவி ழுமதி
லறிவழி வொன்றிலாத பொருள தெனவுள
வனுபவ வங்கமேறு மறிஞ ரகல்வரே. (௨௯)

புணரி கடந்துபோக விரகி லெனமொழி
பொழுது புலம்பியாவி புதல்வ னிருமுன
முணர்வெனும் வங்கமேறு மறிஞ ரகில்வரோன்.
றுரையை வழங்கிநாத னுவகை யருளவே, (௨௭)

வேறு.

வாழியென விறைவனடி தொழுதுவரு பவமா
மாழியினை யகலுமறி வருளுகென வவரே. (௨௮)
பரவறிவு மபரவறி வெனவுமிரு பரிசாத்
திரவறிவை யறியுமவர் மொழிவர்தெளி வுறவே. ()
அபரவுணர் வருமறைகண் முதலகில கலையு
முபரம தறவுதவு முணர்வபர வுணர்வே. (௩௰
ஆகமவி தங்களறி வரபர மறியார்
யோகமொ டிறங்குமவ ரேபர முணர்ந்தோர். (௩௧)
புராணமிதி காசமெவை யும்பொரு ளனைத்தின்
பிராணனறி யாதுள விடத்திவை பிதற்றே. (௩௨
இயலறிவ திசையறிவ தினமறிவ துளதா
மயலறிவ திறிவதல வறிவறிவ தறிவே. (௩௩)
நவிலுகலை யறுபத்து நாலுமுணர் வாரும்
பவலபம தறுசுத்த பரமமறி யாரே. (௩௪)
ஆகவறி வாளரறி வாரிவை யனைத்து
மேகவறி வாளரிவை யாவுமறி யாரே. (௩௫)

ஐயறி வறிந்தவை யடங்கினவ ரேனு
மெய்யறிவி லாதவர்கள் வீடது பெறாரே. (௩௬)

மெய்ம்மையறி வல்லதமில் வேறறிவ தெல்லாந்
தம்மையறி யும்மறிவ தேயறிவு தானே. (௩௭)

பூசனையு மனுசகல பொருளுமறி தமையு
மீசனையும் வேறறற வறிவதறி வெனவே. (௩௮)

தானெனு மிடப்பது தனைத்தவிர வேறு
யானெனு மருத்தமுள தோவருளு மெனவே ()

வேறு.

எனதாடை பொன்பூ மகன்மனையில் பாய்மா
விபங்கண் முகங்கால்கை மெய்யென்ன வென்றுந்
தனதா யுரைப்பான் வகுத்திந்த வூனைத்
தானென் றயர்த்துஞ் சொலத்தக்க தன்றே. (௪0)

தாளாக வூராழி யாவெங்கில் வீணை
தண்டாக வன்மார்பு தட்டாக மொட்டா
நாளா மலர்ச்சென்னி கூந்தற் கொடித்தேர்
நாணுமூர் வானில் வேறாக நாடே. (௪௧)

கடக்குஞ் சரம்பண்ணி யுண்ணின் றொருத்தன்
கைபார்த கன்னங்கள் மெய்போ லியக்கும்
கிடக்குந் நடத்தா விடத்திவ் வுடம்புங்
கிடக்கும் மொருத்தன் னடத்தா விடத்தே. (௪௨)

ஒருகூறு மலமாகு மொருகூ றுடம்பாகு
மோர்கூறு மனமாகு மூண்டற்ற வன்ன

மிருகூறு நீயாகி யொருகூறு நீயா
மிழிக்கும் மலஞ்சோ ரிடப்பட்ட வுடலே. (சங)

கிளரா தரத்தன்று மன்னஞ் சடக்கை
கிட்டப் பொருதே யிருந்தார் முனிந்தார்
தளரா துறப்பொன்று முயிர்போக வன்றே
தழற்பள்ளி மீதே துயின்றார் சமித்தே. (சச)

நிழற்பார்வை கண்ணாடி யிற்பாவை கைகா
ணிமிர்க்கும் முடக்கும் மிவன்செய்யு மெல்லாந்
தொழிற்பால வாமற்றிவ் வுடலஞ்செய் தொழிலுஞ்
சுடர்ஞான வடிவான வன்செய்த தொழிலே. (சரு)

அறிகின்ற பொருளொன்று மறிவானில் வேறே
யாருவிவ் வூனுகநா னென்ன லாமோ
செறிகின்ற புள்ளல்ல வேகூடிவ் வகையே
செடமான வுடனின்னில் வேறென்று தெளியே. ( )

நிலனாகும் வற்பென்ற னெகிழ்கின்ற நீரா
நெருப்பா மிதிற்சுட்ட வெல்லாமு மனிலஞ்
சலமான புரையான வானிந்த வுடலஞ்
சடமான வைம்பூத வுருவங்க டாமே. (சஎ)

வீழிலையப்பு மரனென்னில் ரவியாதி யாலே
விளங்கின்ற தல்லால் விளங்காமை யாலே
யொழியப்படுங்கன்ன முதனாலு முன்ற
னுருக்கண்ட கண்டன்னை யொப்பாக வுன்னே. (சஅ)

வேறு.

ண்பொருள் கனினுண்பவை முக்கூறதின்
யன்பு நடுக்கூறது மச்சைக்கனி யாகு [முற்கூ
ஃகொண்ட கடைக்கூறது வாசகாயெழு மென்
றன்மறை யந்தங்க ளிசைக்கின்றன வாமே [றே

றும்புனன் முக்கூறதின் முற்கூறுவர் நீரா
ந்நடு விற்கூறு கடைக்கூறு பிராண
ணும்பிதி விருகூறவை யோயிடி னன்றே
ன்ற பிராணன்னது யோகுவை யிசையே. (௫௰)

வேறு.

ானு மல்லதுஞ்சி னுணர்வின்மை யாலஃ
நம் புலன்கவொழிவாற்
ன தென்னின்மன்னை யொழியாது சேனை
ழ் வலஞ்செய் பொழுதே. (௫௧)

மொடுங்கவாயு நிகழ்[illegible]ன்கொ லென்னி
காவ லாகுமலதேன்
மடைந்ததென்று தமர்சுட்டி டார்முன்
ாலின் ஞாளிகொளுமே. (௫௨)

ற வெண்ணவுள்ள காணத்தி லொன்றி
ாவி தென்னதெனலான்
ன மன்னமென்ற வதனுளு மல்ல
லை வந்தவகையே. (௫௩)

வேறு.

இடரின் புளதாய் நிலையிற் றறிவுற்
றென்னுங் காணங் களிலா யெவரு
மடரும் பிறவிக் கடியென் றுரைரு
மாங்கா ரமுநீ யலவென் றறியே. (ருச)

ஐயப் படலோர் பொருணிச் சயமா
யறியப் படல்யா னெனதென் றுமதற்
செய்யப் படல்செய் வதுசிந் தனையாஞ்
சித்தம் மதுவன் றெனநீ தெளியே. (ருரு)

முன்னு கவுடம் பதுசித் தமதே
முடிவா கமொழிந் தபொருட் டிறடான்
நின்னு கிலநீ யறியும் பொருளாய்
நிகழ்கின் றதனு லெனநின் மலனே. (ருசு)

உன்னு லறியப் படும்யா வையுமுன்
னுருவன் றெனவோ தினையொக் குமெனக்
கென்னு லறியா தொழியும் பொருளோ
யாணு ருவதென் றனனென் றலுமே. (ருஎ)

அறியாப் பொருள்கா ரணமா யைகுறித்
தறியும் பொருள்கா ரியமா முலகிந்
நெறியாற் றிகழ்நான் மறையந் தமெலா
நீயன் றெனவோர் துநிரந் தரமே. (ருஅ)

அறியும் பொருளன் றறியாப் பொருளன்
றறிவா கியநீ யெனுமப் பொருடான்

பொறியின் வழிநின் றறியும் பொருளோ
போதக் கண்விழித் தறியும் பொருளே. (௫௯)

வேதப் பொருடா னிதுவே றுசொலும்
வினையா வையுமன் றெருவே றமிலாப்
போதப் பொருளாந் தமறைக் கணியாம்
புனிதப் பொருடத் வமசிப் பொருளே. (௬0)

வேறு.

நிமலமாம்பர மதுவெனும்பொரு ணீயெனும்பொருள் சீவனே, யமலமான விரண்டையிக்கிய மசிபதப்பொரு ளாவதே. (௬௧)

அருமையாகிய பிரமமுன்னிலை யாருமாருயிர் பின்னிலை யிருமையான விரண்ட யிக்கிய மெய்துமாறெவ னென்னவே. (௬௨)

உபாதியால்வரு பேதமேயிவர் பேதமன்றுரு வுயிரினின் கபாதியாமுடல் போலிறைக்குள காரணாதிகள் காயமே.
ஈசன்முற்றறி வான்வியாபி யெவைக்குமேது வியம்புமா காசகன்னிரு பாதிபாவனை காரணாதிக ளாவதே. (௬௩)

நீதியானிரு பாதிநீக்கிட நீயெனச்சொல் பதத்தினு மாதியாகிய தற்பதத்து மசுத்த சுத்த முறைத்துமே. (௬௫)
ஆகமுன்றிக ழேழுநானென றெம்பதத்தி னசுத்தமே சோகமின்றிய சான்றுநானென றெம்பதப்பொருள் சுத்தமே. (௬௬)

விட்டலக்கணை தனையும்விட்டு விடாதலக்கணை தனையுநீ
விட்டுவிட்டு விடாதலக்கணை யால்விளங்கு விளங்கவே. ()

போதுமேவிய தேசம்விட்டொரு புருடனைக்கொளுமாறுபோ, லோதுமீருடல் கண்டுவிட்டதி னுண்மைகாண வுணர்ந்திடே. (எஎ)

வேறு.

பிரியா வுயிர்கா ரியமா முடலும்
பிரமத் தறுகா ரணமா முடலுங்
கரியா கியவா தனையுங் கழியக்
காட்டும் படிகண் டுகொள்கண் ணுறவே. (எஅ)

கரணத் திரணிற் பினுமப் பொருளைக்
காணக் கிடையா தவைகை யறவே
மரணப் படினும் மதுகண் டுகொளும்
வழியில் லையெனும் படிநீ மதியே. (எகூ)

எந்தக் காரணங் களுமே வனுறு
விதன்வா தனையால் விடயங் களோடே
யந்தக் காரணங் கள்பொருந் தல்களு
வவைமாய் தல்சுழுத் தியவத் தையதே. (அ0)

வேறு.

வினவிற் பாத்தையறி வுறுநற் கவத்தைபுலன் வினை
யே, நனவிற் சுழுத்திநிலை வரினப் பொருட்டிகழு நல
வே. (

துவிதத் தலத்தைகளை யறிவுற்ற வத்துரிய நிலைசிவனே
யிவிதத்தி னப்புருட னனவுற்ற வத்துரிய நிலையிசனே

அகிலக் கரிப்பரம துரியப் பொருட்டுரிய மதுவர்கை
புகலுற்ற தத்வமசி யெனுமுப் பதத்தின்முடி பொரு
வதே. (

நிமலப் பொருட்சுருதி நெறியிற் பெறக்கருணை நிதிகூற
யமலப் பொருட்பெறுத லருமைத் தெனக்கழறி யடி
வே. (

தமரக் கலைக்களவு தெரிவற்ற தற்பொருள தனையிருவ
னமரர்க் களப்பரிய பதநற் புனற்கொடுசெய் தபிடேக

பவளத்தில் வைத்தவயிர் தினின்மிச்சி லிட்டினிய பரி
டுமா, தவளப்பொ டிக்கவச மெனவிட் டுடற்பணைகக ட
யவே. (

உதகத்து டற்பொருளொ டுயிர்கைக்கொ டுச்சிமிசை
ருபோதொடே

பதகத்த லத்தைவிட விருகைத்த லத்தொடிரு
பதமேவியே.

ஒழியப்பு லக்கணுப நிடதப்பொ ருட்டெரிய
வுளஞானமாம்
விழியைக்கொ டுத்துமொழி யெனமுப்ப தப்பொருளும்
வெளியாகவே. (அஅ)

நனவைத்து வக்கிமுடி துரியத்தை முற்றவிறை
நவினீதியே
மனவர்க்க மற்றவனு பவமுற்ற சிற்கசன
வலியோதுமே. (அகூ)

புரணமாகவே புறப்புள புலன்களு மந்தக்
கரணம் யாவையும் வழங்கிட நனவெனக் கண்டேன். ()

புரண மாகிய புறம்புள புலன்கெட வந்தக்
கரணம் யாவையும் வழங்கிடங் கனவெனக் கண்டேன் ()

மரண மாகிய திசையிது வெனும்படி மனுதி
கரணம் யாவையு மிறந்துள சுழுத்தியுங் கண்டேன் (கூஉ)

எஞ்ச லின்றியெக் கரணமு மிறந்திருண் டிருந்த
துஞ்ச லங்குணர் போதமாந் துரியமுங் கண்டேன்

துரிய மாகிய போதமோர் துளக்கமற் றனைத்தின்
கரிய தாயிருந் திடம்பர னனவெனக் கண்டேன். (கூச)

புணர்ந்த விச்சகந் தொழிந்துணர் போதமாந் தனையே
யுணர்ந்த மற்றது பரன்கன வெனும்படி யுணர்ந்தேன்

சான்று சாக்கிய மிறந்திடத் தானிருந் தமையுந்
தோன்றுறுவிடம் பரன்சுழுத் தியெனத் துணிந்தேன்

மரித்த தென்றுணர்ந் துரைத்தது மரித்திடந் தனிலே
தெரித்த போதமே ததுபரன் றுரியமாய்த் தெளிந்தேன்

இறையெ னும்பொருட் டுரியமே யென்னையாண் டவனே
மறையி னந்தநற் பதப்பொரு ளெனவென மதித்தேன்

பண்டை விச்சுவ வாதனைப் பழுதுபோய் முழுதுங்
கண்ட கண்ணதே யாகிய கனவதுங் கண்டேன்.

காட்சி யாவையுங் கண்ணதா யக்கணுங் கரைந்த
மாட்சி யாகிய வகோசர முறக்கமாய் மதித்தேன்.

அருந்த வாமறை யந்தமா மகோசரந் தனினீ
யிருந்த வாறறி வித்தவா றெங்ஙன மிசைப்பேன்.

எம்பி ரானிடந் தொறுமிடந் தொறுமது வதுவாய்த்
தம்பி ரானடஞ் செயும்வகை சாற்றுமா றறியேன்.

ஆவி யேயடி யேன்செய்கை மாறுனக் கென்னெனிற்
பாவி யேனது தானுநின் னுடையதாம் பண்டே

ஆவல் செய்தென தாக்கையுள் ளளவுநின் னடியார்க்
கேவல் செய்வதே யன்றிமற் றொன்றுநா னறியேன்

இறவி லெப்பத மும்பெற வேண்டிலே னென்றும்
பிறவி வேண்டுவ னின்றிருப் பணிசெயப் பெறினே.

வேறு.

என்றுபல கர்ல்விழு மெழுந்தொழு மழும்புரியு
மென்னையினியா
னின்றுபல வாகவுரை செய்தவவ னன்பினொடு
நெஞ்சுருகியே. (௱௬)

எட்டினறி வின்றியிறை தன்னிலறி வின்றியிவ் வுடம்பினு
டனே, வீட்டிலுறை வானையினி வீடுபெறு மென்பது விளம்
புகிலமே. (௱௭)

வஞ்சவலி யானரகில் வீழ்பிறி ரங்கரகு பாழ்படமிகா
விஞ்சைவலி யாலடைய வேறினர்சு ராதிபர்கண் மேதிலகமே, (௱௮)

தேவரு மனித்தரு மிவன்றொழில் வியந்துரை செயப்படு
வதோ, மூவரும் வணங்கிமுடி யாலவன தேவல்செய மூந்
துறுவரே. (௱௯)

ஞானியை நரன்சுர னெனத்தொழிக ஞாலமுய
நர்தனருளான்
மேனியது கொண்டுதனை நல்கவரு மென்றறையும் வேதமு
டிவே. (௱௰) ௸ நருள,

## திருமுடியடைவு.

மூல மான மறைப்படி மூலமே
கோல மான பரிசுகள் கூறுவாம். (அ

வேறு.

தன்னுத நல்க வருளே நிறைந்த திருமேனி கொண்டு தக
தாள், முன்னுன தேவ ரொருமூவர் சூட விறையா யிருந்
முதலோன். (உ

மாதுற்ற பாகனெனவந்து வெள்ளி மலைமே லிருந்துமனை
நா, லோதுற்ற ஞான வடிவைத் திகழ்த்தி யுலகைக் கப்பு மந்
வுரவோன். (ந

ஆலத்தி னீழ லறநல்கி ஞான
வநுபூதி யாகவழியா
மூலத்தை நாலு முனிவர்க்கு மோன
மொழியால் வழங்கு முனிவோன் (ச

வெளியாய் விசும்பி னிருண்மாற வந்த
வெயிலோன் விளங்குமுனநா
ளொளியா யுனக்கு மொளியா னெனத்த
னொளிதான் விளங்கு மொளியோன். (ரு

தேடுனுத்த தன்ன தநுபூதி தேவர்
குருவைத் தெளிக்க வொளிசேர்

மோனத்தி ருந்த படியே யிருந்து
மொழிவற்ற வொன்றை மொழிவோன் (௬)

மகனார் தமக்கு மிகநல்கி யெந்தை வருகென்று தந்தைப
ணியச், சுகனார் திருத்த முறஞான நல்கி யிடர்தா ணொழி
ந்த சுடரோன். (௭)

போராழி யேறி யடலாழி யேவி யருளாது பொன்றுபிற
விப், பேராழி யேற விசையற்கு நெஞ்ச மிசையப் பகர்
ந்த பெரியோன். (௮)

தேனொக்க மன்னு மமிர்தொக்க வேத
சிரமே மொழிந்த குருகைக்
கோனுக்கு வந்து பெருகன்பு நெஞ்சு
முருகக் கொடுத்த குரவோன். (௯)

ஊழிக்க மிழ்ந்த வறன்மேன் மிதந்த வயனிற்சி றந்த ம
றையோர், காழிக்கண் வந்து சிறுபால கன்க ணுறுமாறு
நின்ற கழலோன். (௰)

இல்லூரு வந்த மடவார் தனங்க ளிடர்நஞ்சு தஞ்ச மிறை
யோ, னல்லூரில் வந்த பதமென்று நாவி னரசன் றரிக்க
நவில்வோன். (௰௧

இளையாது பூணு மணவாளர் போல
விளமாதர் கொங்கை யிடையே
விளையாட வீடு மிகுசங் கரற்கு
விளைவிக்க வல்ல விறலோன். (௰௨)

உரைசெய்ய வின்றி யுளவொன்று வந்த
தெனவாத வூர னிருகண்
டிரைசெய்ய நீர்கொ டுரைசெய்ய வன்று
திருவாய் மலர்ந்த திறலோன். (௰௩)

சித்தான வேட மதுகொண்டு செம்மை
மிருசேர்தி சித்த வடமா
மத்தான மேவி யறிவான தன்னை
யறிவித் திருந்த வறவோன். (௰௪)

தானந்த மற்ற வருண்மேனி நின்ற
படிநிற்க வன்று தனதா
மாநந்த நிர்த்த மறிவித்த தில்லை
நகர்வந் தளித்த வருளோன். (௰௫)

அமரா திபர்க்கு மயன்மா லரர்க்கு
நிகரான வாதி மறையோர்
குமரர் பதிக்க ணொருமேனி கொண்ட
வருண்மேனி நல்கு குரவோன். (௰௬)

நல்லேன முன்னர் வருமங்கை தன்னை
நகரா வுவந்து பிறிது
மல்லே னெனும லழியாத தன்னை
யொழியாமை சொன்ன வறவோன், (௰௭)

புரந்தாரு கென்ற மறைவல்ல பூமி
சுரர்சொல்ல நல்ல புகழ்சேர்

பரந்தா ளுவந்து பரமாம் பதத்தை
யறிவித்தி ருந்த பழையோன். (௧அ)

தன்செப்பு மாறில் பதமன்பர் தங்க
டலையிற் பதித்து மதுரம்
புன்செய்க்கண் மேவி யொழிவற்ற தேசு
புகழுற்ற தூய புகழோன். (௧௯)

சீலம் பொருந்து முனிவோர் கணங்கள்
செயவென் றிறைஞ்ச வறவோர்
கோலம் பொருந்தி நலமார் திருப்பை
நகர்வந் திருந்த குரவோன். (௨௰)

புயமாதர் கொங்கை பெறவேறில் போத
கனமான பாத மலர்பெற்
றுயர்மா தவத்த ருலகுய்ய வந்து
விறையாய் வருக்கை யுறைவோன் (௨௧)

பாரார் வருத்த முறுபந்த பாச
மறவந்து பாத மருடற்
கோரார் வருக்கை யிடமா வுவந்த
நடராச னென்னுமிறையோன். (௨௨)

வெருவந்த தொண்டர் கருவெந்து வீழ
நிறையைந்து வென்வி மறையோர்
திருவிந்த ளூரி லுருவந்தில் வைய
மகிழ்வித்த செய்ய திறலோன். (௨௩)

ஆவத்தை மாற வுலகன்பர் தன்னி
னருண்மேனி கொண்டு திருவார்
கோவத்தை மேவி யமுதைச் சுரந்த
நிகர்வேறி லாத குரவோன். (உச)

வேறு

ஆரணிதரு கனவிநொளிர் புரணமொரு கரணமற
வயிலவொரு மொழியருளவே
நாரணிவரு சொருபமென திடரகல விருகழல்க
டருகருணை பெரியகுரவோன். உரு) ஆ ௬௨

---

வேறு திருவபிடேகம்.

ஆகியழி யாவண்ண மன்பர்க் கெல்லா
மரியதனைக் கொடுத்தருளு மந்தவாதி
யோகி சொரு பானந்தன் மோகற் காய்ந்திட்
டுங்கள்பசி தீர்த்தருள வுள்ளஞ் சென்றே. (க)

குருவடிவ மாகிவந்த சொருபன் றனே
மைந்தனென வேறுமொரு கோலங் கொண்டான்
றிருவருளா லவன்கொண்ட கோல மான
திருவுருவஞ் செய்தசெயல் செப்ப லுற்றும். (உ

வேறு

குருவரு ளொழிந்தறிவு கூடலரி தென்பது
குறிக்கொடு லகந்
திருவருளொ நாடும்வகை தன்றிருவு ளத்தினருள்
சென்றருளியே. (௩)

நந்தைசொரு பன்கழல் பணிந்தபிற வாதநெறி
நான்வினவவே
மைந்தனுள மன்புகொளல் கண்டருளி யெந்தையு
மகிழ்ந்தருளியே. (௪)

செப்பரிய வீடருள்செ யத்திருவு ளத்தினருள்
சென்றுமிகவே
ஒப்பரிய வெந்தைபெரு மானுவகை யோடும
துரைத்தருளுமே. (௫)

வேறு.

மாறிலொளி யாய்நிக ழனந்தவறி வின்பம்
வாய்மைமவடி வாகிமன வாசகமி றந்தோர்
வேறில்பொரு ளாயதனின் வேறுபடு பற்றும்
வீடுமில தாகுமது வேதநெறி வீடே. (௬)

கண்ணுமுத லாகியபு லன்களுந டியங்கும்
கால்களுப ஞ்சிகர ணங்களுமு டம்பும்
விண்ணுமுத லாகவரு பூதமும னைத்தும்
வேறிலறி வாய்நிகழ்தல் வேதநெறி வீடே. (௭)

புல்கி மைந்தரோர் மேனிவி ளக்கினர்
போத மாகவொ ருதகளைப் போதிலே. (

உத்த மாபர மானந்த நாடிநீ
யுடைய தேயென் றுரைத்தருள் செய்திறை
அத்த மாநம் பதந்தனை நீயென்று
தூய பண்டைப் படியை விளக்கியே. (

உவப்பி னுவிவ் வுலகினை யாள்வதற்
குரிமை யிற்றிரு வுள்ளத் தடைத்திறை
சிவப்பிர காசனை யுக்கிர காமத்துச்
செய்ய பாத மணிமுடி சூட்டியே. (

வேறு

தன்பிறந்தியி லாதகோன்முடி யாதிகான்முடி வாரு
கன்பினோருள் கருணைநல்லற மணிபுராபர ணங்களே (

கோட்டமொன்று முள்ளமாமலர்
கொண்டுகட்புனல் கொண்டுசெய்
வாட்டமொன்று மன்பர்வாசக
மாலையே திரு மாலையே (

ஒன்றுமோதுவ மம்பெறுவிறை தந்தவாகம வுபநிடத்
தென்றுமோதுச துஷ்பதத்தரி யாசனத்தி னிருப்பமே

வேறு

ணி யிற்சிவந் தருசி வற்கதிர்ந்
தி டச்சலஞ் சலமொலிக்குமே. (௨௪)

பி றப்பறப் பருதி யிந்துவந்
பு றத்தினுஞ் சுடரெடுப்பரே. (௨௫)

ங்க ளொந்தைநா மங்கள் கொண்டுதாள்
ங்கி நின்று நாமங்கை வாழ்த்துமே. (௨௬)

யஞ்செறு பதநினைந்துபூ
ரக நின்றுபொ மாரிதூவுமே. (௨௭)

ர சக்ரமற் றுயிர்த னைப்பெறு
ா சக்ரமெங் கணுநடக்குமே. (௨௮)

ரக பாகநன் மகுட மேறும்வண்
ரக யாதிவெண் கவரி வீசுமே (௨௯]

க ணங்களு மறைக ளுலுமச்
க ணங்களுந் தொழுது போற்றுமே. (௩௰)

வேறு.

ா கேதனந் தன்னைவ ழங்கிட
ப திக்கினுங் கட்ட வவையுமக்
ர கேத மறுக்குமம் பொற்கழ
டய வாருமென் றுலித்த ழைக்குமே.

ர இயுல காரணபரி சொன்னவொருதன்
ணின்றுணர்வின் மாயையொட விஞ்ஞைபு
டயுயி ராகியுயி ரானவவனே [ணர்வா
ர இயறி வின்மையெனு மாதிசையவே .(ச)

லா மைபெறு மைந்தன்மன மந்தமனனுக்
ன் னிய ரபேட்சையு முபேட்சையுமெனப்
ர மோகன்முதல் வந்தன ரபேட்சை மடவாள்
வேகன்முதல் வந்தன ருபேட்சையறவே.()

நெறியை மேவிய வபேக்ஷை யைமனம்
றற் றுமவன் பெற்றவர்கள் கொள்கவெனவே
மா கவசு ரேசனர சானவதனு
வேகன்முத லானசுர ராறுவர்களே. (சூ)

ரென்பதடன் மோகன்முத லாமறவரே
ரன்பது விவேகன்முத லர்மறவரே
டமிங்கிருவர் வம்சவர லாறுமெனவே
ண மோகனர சாளவுல கெய்துதயரே. (எ)

வேறு

ல்லைசொல்ல வறிஞரில்லை சிறிதியான்
யால் விளைந்தவா விளம்புகேன். (அ)

குடர்வழும்பு தொடர்நரம்பு குருதியென்பு
கடல்வழங்கு மயிர்தமிந்த மகளிரென்பர் க

வேரிவாசி யுண்டுவண்டு ஞிமிறுமிண்டு மை
வாரிவாரி யுண்டவம்பு வாகமென்பர் மயிலை

மயல்கொடம்பை யுமிழநின்ற குமிழியென்பு
கயல்களென்பர் பிணைகளென்பர் கணைகளெ
யே.

துரிசுதன்று கபம்வழங்கு துளைசெய்துண்ட
பரிசில்கொண்டு கவிசனங்கள் குமிழுதென்று

மலவொழுங்குண் மலியநின்ற வதரம்விஞ்ச
விலவதன்று தளிரதன்ற திந்திரகோப மெ

பல்லையென்று மென்பெனுது பவளமுட்பொ
முல்லையென்று முறுவலென்று முத்தமென்ட

கலர்நிறஞ்செய் வதனம்வீஞ்சு கபம்விளைந்
மலர்நிறைந்த மறுவொழிந்த மதியமென்பர்

மருவிசந்து தொறுமெனும்பென் மதியதி
டேலு டருவுலந்த விளகுமுய்ந்து தழுவி
வரே.

பிணிசெய்கின்ற கழலையென்பில் பிசிதபிண்
யணிசெய்கொங்கை யமிர்தகும்ப மெனவிரு

அபசதங்களுபயாந்திர மவை சொரிந்த வ
விபசிரங்க டடநிதம்ப மெனவியம்பி யிடுவே

அரிபரந்த விழியிலன்ப ரதிபயஞ்சொ லளவதோ
பரிபுரஞ்செய் பதயுகங்கொள் பணியுவந்து பணிவரே.()

வேறு

ஓராத வன்ப ருறுகாத லென்னை யுரைசெய்தல் யாதுமு
ணர்வோ, ராராத வன்பு மடவார்தி றத்தி னலையாழி யே
ழினளவே. (உ௰)

உளஞ்செய்து கொண்ட மடமா திருக்க
விலைமாதர் தாமு முளராக்
களஞ்செய்வர் காதல் பெரிதாகி யேதில்
குலமாதர் தங்கள் கவினே. (உக)

வேறு

வார்த்தை வேறுசெயல் வேறு வஞ்சமா
மனனும் வேறுபட மாதர் வைகலுந்
தூர்த்த சேவைசெயு வன்பு செய்வீர
சுத்த மாமவர சுத்த மாகவே. (உஉ)

உருவ நங்கனனை யார்வ னப்பிலா
ரும்பர் நீசரென லற்று ளன்கொள்வா
ரிரும னஞ்செய்மட வார்த னத்தையே
யிளையர் மூப்பரிவ ரென்று மில்லையே. (உ௩)

வேறு,

கிறியினிப் பாவையர்க ளுறுதுவக் காடவர்கள்
கிளரவொட் டாதநரகென்
றறியவுற் றுருமுற வணைவதப் பாழுருவி
லைகலைப் பானவி னே (உ௪)

குடர்வழும்பு தொடர்நரம்பு குருதிவெண்பு குழுமவுங்
கடல்வழங்கு மமிர்தமிந்த மகளிரென்பர் கவிகளே (௪

வேரிவாசி யுண்டுவண்டு ஞிமிறுமிண்டு மடையவேழ்
வாரிவாரி யுண்டவம்பு வாகமென்பர் மயினரயே. (

மயல்கொடம்பை யுமிழுநின்ற குமிழியென்று மதிகொள்
கயல்களென்பர் பிணைகளென்பர் கணைகளென்பர் கண்ணை
யே. (க

துரிசதன்று கபம்வழங்கு துளைசெய்துண்ட மதனையே
பரிசில்கொண்டு கவிசனங்கள் குமிழதென்று பகர்வரே (

மலவொழுங்குண் மலியநின்ற வதரம்விஞ்ச மதனரே
விலவதன்று தளிரதன்ற திந்திர கோப மென்பரே. (

பல்லையென்று மென்பெறுது பவளமுட்டொ திந்தகூர்
முல்லையென்று முறுவலென்று முத்தமென்பர் பித்தரே

கலர்நிறஞ்செய் வதனம்விஞ்ச கபம்விளைந்த கவினை
மலர்நிறைந்த மறுவொழிந்த மதியமென்பர் மயல்கொ

மருவிசந்து தொறுமெலும்பென் மதியதின்றி வளை
டேர, டருவுலந்த விளகுழுய்ந்து தழுவிலென்று வி
வரே. (

அரிபரந்த விழியிலன்ப ரதிபயஞ்சொ லளவதோ
பரிபுரஞ்செய் பதயுகங்கோள் பணியுவந்து பணிவரே.()

வேறு

ஓராத வன்ப ருறுகாத லென்னை யுரைசெய்தல் யாதுமு
ணர்வோ, ராராத வன்பு மடவார்தி றத்தி னலையாழி யே
ழினளவே. (உ௰)

உளஞ்செய்து கொண்ட மடமா திருக்க
விலைமாதர் தாமு முளராக்
களஞ்செய்வர் காதல் பெரிதாகி யேதில்
குலமாதர் தங்கள் கவினே. (உக)

வேறு

வார்த்தை வேறுசெயல் வேறு வஞ்சமா
மனனும் வேறுபட மாதர் வைகலுந்
தூர்த்த சேவைசெயு வன்பு செய்வீரே
சுத்த மாமவர சுத்த மாகவே. (உஉ)

உருவ நங்கனனை யார்வ னப்பிலா
ரும்பர் நீசரென லற்று ளன்கொள்வா
ரிருமனஞ்செய்மட வார்தனத்தையே
யிளையர் மூப்பரிவ ரென்று மில்லையே. (உ௩)

வேறு,

கிறியினிப் பாவையர்க ளூறுதுவக் காடவர்கள்
கிளரவொட் டாதநாகென்
றறியவுற் றுருமுற வணைவதப் பாழுருவி
லுருவருப் பானவிடனே. (உ௪)

இறுகவப் பாவையர்க டழுவவித் தாசைபக
விரவுழைத் தாவிபிறவே
யுறுகவுற் ருனுமிவ ரொழிபநிற் போமெனுணர்
வொருகணப் போதுமிலரே. (உரு)

வேறு.

ீறுவர் யாவரோடு மடவார்கள் காதல்
பொருள்கர்தல் சிந்தைசெயவே
கூறுவர் வாய்மையல்ல படிறே நினைப்பர்
கொலைசெய்வர் கோபமிகவே. (உசு)

பாகுதி வந்தொருண்டி பரிவோடு நல்கு
மவரோடு செய்வர்படிறே
வாகுதி பண்ணவன்பொ டணைகின்ற வன்கை
யடுகின்ற வங்கியெனவே. (உஎ)

புற்புதமென்னவிந்த்ர தனுவென்ன வந்திவ்
வுடல்பொன்றல் கண்டுநிறைபொன்
வெற்பதன் விந்துவென்னும் வகைதேடி ஞனு
மமையாம லாசைமிகுமே. (உஅ)

நொங்தொரு குன்றி குன்றில் விலைசெய்வர் தம்மை
நுகர்வே நினைந்து நுர்கவர்
வங்தொரு குன்றையொன்றின் மதிசெய்வர் தம்மை
யொருவச்ர பாணியெனவே. (உசு)

வேறு.

புலைசரிந்த குலனைநின்று புகழ்வதுஞ்செய் துவகையாற், றலை
சரிந்து தொழுவமொன்று தருவனென்று தமதுளே (௩௰)

வேறு.

அருந்தலும் புணர்ப்புமன்ப ரானவான வசையைால்,வருந்த
லென்று முள்ளதாப மாதவத்தி னில்லையே. (௩௧)

வேறு.

பிறன்பொருள் கவர்ந்துகொண் மாறது
நினைந்தறிவு பேசும்வகையே
யறம்பொருளை னுங்கலைகள் கற்பது
மதற்கிசைய நிற்பதுவுமே. (௩௨)

அருந்தவ ரொழுந்துல கடங்கலு நடந்தணி
நடஞ்செயலினே
ரிருந்தவ வுடம்புகொ டிடந்தொறு மிடந்தொறு
மிசைந்திடுவரே. (௩௩)

வேறு.

தெளிய மாதிமுத லெட்டி யோகமுஞ்
செய்து செய்வர் பொருடி வாவிரா
வெளிச மாம்சமது நித்தை ஸ்மதுனம்
விடியு மெல்லையினி யோக மேகவே. (௩௪)

சிந்தை மாதரைய லான்ம றந்துமொரு
தெய்வ சிந்தனைசெ யார்களே
தந்தை தாயர்முது குரவ ரேவல்செய
மைந்த ரானவர்க டவிர்வரே. (ருரு)

கொண்ட கேள்வனை யொழிந்தொ ருத்தனொடு
கூடி வாழ்வர்குல மாதரே
பெண்டிர் காதலொடும் வாட வாடவர்கள்
பிறனில் வீழ்வர்பிழை பெருகவே. (ருசா)

ஒழுக்கி லாதவ ரொழுக்க முள்ளவர்
தவங்க ளைப்பழு துரைப்பரே
வழுக்கி லாவறிஞ ரறிவி லார்களென
வறிவின் மானிடவ ரறைவரே. (ருஎ)

அரசர் நீதிகெட வாழ்வர் தங்களை
யடைந்த வர்க்கருள்செ யார்களே
புரைசெய் தானையர சரைய மைச்சரடு
போர்க்க ளத்தி னிறை போவரே. (ருஅ)

உறுப யன்சிறிது மின்றி யும்பிற
ரிடும்பை கண்டிட வுவப்பரே
பெறுப யன்கருதி யுறவு கொண்டவர்க
ளிரவு கண்டுதனி பிரிவரே. (ருகூ)

வேறு.

குடும்பச் சிந்தை யொழியக் குரம்பைகூ
ரிடும்பை சிந்த நினைவென்ப தில்லையே (சய)

ஊக்கக் கேட்டி னுளத்த நலன்பிற
ராக்கக் கேட்டி னெரியு மவியுமே. (சக)

பட்ட வாகம் பதைப்பது பார்க்கவே
விட்ட வாவென்ன வேலை விடுவரே. (சஉ)

குமத மெங்கணு மானது கோதறு
சமத மங்க ணொளித்தன தப்பியே. (சங)

மோக முட்டி மொழியிய மாதியா
மியோக மெட்டு மொளித்தன வோடியே (சச)

வீட்டின் மேவும் விருப்பம் வெகுண்டுபோய்க்
காட்டின் மேவிக் கரந்து திரியுமே. (சரு)

காந்தி வெஞ்சினக் காயெரி போனது
சாந்தி தாந்தி யிழந்துயிர் தன்னொடே. (சசு)

வேத நான்கும் விளங்கிய வாகம
பாத நான்கும் வழங்கில பாரிலே. (சஎ)

எங்கு முள்ள திறையரு ளின்றியப்
பங்க முள்ளபொய்ப் பாடாண்ட நூல்களே. (சஅ

வர்க்கம் விட்டவெம் மார்க்கமும் வாதுசெய்
தர்க்க மிட்டுத் தடியடி யானதே, (சகூ)

வேறு.

அந்தரமிகவி ளைந்தது வன்பருளறம் கன்றன
மந்தரமலை மறைந்தன மந்திரவுபதி டங்களும். (௫௰)

இந்திரவுலகெ னும்படி யெங்கணுமதன னின்புறு
தந்திரநலம டந்தையர் தங்குலமிக விளைந்தது. (௫௧)

மங்கையர்செயும்வ ரம்பறு மங்கலகலக மெங்கணுஞ்
சங்கையைவிடநி லம்பல சங்கரகுலம்வி ளைந்தது (௫௨)

அந்தியுமரபி றந்தன ரந்தணர்குலகு ளப்புகக்
குந்தியகுளிபி றன்பொருள் கொண்டிடு மபிம தங்கொடு
முந்தியமறைமொ ழிந்திலர் முன்னெழும்வகையொ ழிந்தி
டப், புந்தியினிடைபு குந்தது பொங்கெரிதிரிவி தங்களும்.

வேறு.

உரைசெய்முறையின்றிமற் றுழவருண வொன்றறுத்
தரசர்பொருள் கொண்டிடற் கமைவரவர் நின்றழ. (௫௫)

புகைவர வழிந்திடப் பொருண்முழுது கொண்டுவெடம்
பகைவர வழிந்திடப் படர்வாரு வெஞ்சுரம். (௫௬)

அரிகளுறில் வெஞ்சமத் தவரையட லின்றிநற்
பரிகரி யிழிந்துகைப் படைவிடுவ ரஞ்சலில் (௫௭)

குலவணிக ரன்புடைக் குரவர்பொரு ளென்றிலச்
சிலவணுகி லங்கதிற் சிறிதுகொள்ளல் சங்கையில் (௫௮)

வேறு.

வஞ்ச மொன்று மொழிய வணிகர்த
நெஞ்சி னென்று மிறிதில்லை நிற்பதே. (௫௯)

அவம்பு ரிந்து திரிவார்க ளந்தணர்
தவம்பு ரிந்து திரிவார் சதுர்த்தரே. (௬0)

வேறு.

பாதமோதி யேவல்செய்த பணவரைப் பழித்துநால்
வேதமோதி நீசசாதி விப்ரசாதி யானவே. (௬௧)

மறையவுண்கை தவிரவின்ப வருளகந்த மதூவெனு
நிறையவுண்டு விப்ரசாதி நீசசாதி யானதே. (௬௨)

மோகன்சரிதை முற்றிற்று.

---

வேறு.

சொல்லு வானரிது மோக சேனைசெய
லென்ன வேசுருதி சொல்லுவான்
வெல்லு வானவனை யிறைவ ருமபடி
தவஞ்செய் வான்விறல்வி வேகனே. (௬௩)

தவத்தி னாற்பெறு வி வேகன் முன்பிறைவி
தான்மொ ழிந்தருளு தம்பிரான்
றவத்தி னார்தொழு சிவப்பிர காசனிரு
செய்ய செம்பொனடி சேரவே. (௬௪)

வேறு.

தோரவி வேகங் கொடுபொரு மோகன்
சூராசு ரேச ருந் தேயத் தொலைப்பதுந்
தேர விவேகன் சிவப்பிர காசன்
பதத்தின்வின் ணப்பஞ் செய்யும ளவே. (௬௫)

வேறு.

அடிவழங்கி னறிஞர்க டம்பிரா
னமரின் மோகனுஞ் சேனையு மாருயிர்
மடியு மென்னு மளவோ வவற்றரு
மனமு மர்யுமா மாயையு மாயுமே. (௬௬)

ஒன்று கூறு முபநிட மெம்பிரா
னுருவு கொண்ட துறுதுயர் தீர்க்கவே
யென்று கூற விரும்பசி தீர்ந்தபோ
லின்ப மெய்தி யிருந்த வளவிலே. (௬௭) ஆ. ௪௮௧.

---

வேறு—ஏகன் றிருப்பவனி.

ஆண்டானடி யருளெய்தவி வேகனடன் மோகன்
மாண்டானுயி ரென்றங்கொரு விச்சாதரன் வந்தே (௧)
பாதந்தன தலையிற்கொடு படவப்பழ மறைதேர்
மாதந்தமி லிறைசேவடி வந்தித்து மகிழ்ந்தே. (௨)

வேறு.

என்ற வப்பயனை னெம்பி ரானருளின் மோக னுருயிரிழக் கவே, வென்ற வப்பரிசெ லாம்வி ளம்புகென வேதொடங் கினன்வி ளம்பவே. (௩)

வான நாடரும வித்த ராகவழி தேட வீடுபெற மண்ணிலே, ஞான நாயகன்ம லர்ப்ப தந்தனை வழங்கு நாளிலொரு நாளிலே. (௪)

வேறு.

ஒடிவில்பர வின்பமுற வுரியபர விஞ்சைமகள்
கலவியை யுவந்தவுரவோ
னடியவர்கள் சங்கதுதி யதிரவணி சங்கமெழ
வறிதுயி லுணர்ந்தருளியே. (௫)

கண்புனலு மார்வமும் வழுத்துமிசை மாலையு
மழுத்தமுறு காதலடியா
ரொண்புனலு நாண்மலரு மொக்கவிர விப்பரவு
மர்ச்சனையு வந்தருளியே. (௬)

வேறு.

சிவேக நாதசிவ போற்றி செம்பொனடி
போற்றி போற்றிசய சயவெனு
விவேக ஞதிகளு மடியர் தம்மொடு
முனிக்க ணங்களும் விரும்பியே. (௭)

புவியு ளார்மகிழ நீதி ருப்பவனி
போத நின்கழல்கள் போற்றவே
யவியுண் வானவர்கள் யாரும் வந்தனர்க
ளெந்தை காட்சியரு ளென்னவே. (௮)

வேறு.

மேதகு சங்கும் பளிதமு மேயு
மிர்க்ம தமுஞ்சேர் விடுபனி நீரின்

சேதக முந்தற் சேர்ந்தவர் நெஞ்சிற்
சாந்தமு மெய்யிற் சேரவ ணிந்தே. (௯)

செங்கழு நீர்கொண் டன்பர்செ யும்பூ
மாலையொ டுள்ளஞ் சேரநு ராகத்
தங்கழு நீர்கொண் டன்பர்செ யும்பா
மாலையு மார்பத் தாரவ ணிந்தே. (௰)

ஆருற வாரிங் கயலென வுள்ளத்
தறிஞரு மாயா வகையவ ரோடும்
போருறு மோகன் கிளையொடு பொன்றிப்
போகமி திக்கப் பொற்கழ லிட்டே. (௧௧)

குடிமுழு தாளக் குவலய மேவுங்
குருபர னார்தங் கருணையொ டுஞ்சே
வடிமுத லாகத் திருவபி டேகத்
தளவும ணிப்பொற் பணியும ணிந்தே. (௧௨)

சேமிசை யானுந் தூய்மறை நாலுந்
திருநெடு மாலுஞ் செவ்வர விந்தப்
பூமிசை யானுங் காமுறு ஞானப்
போதக மேலே போதரு போதே. (௧௩)

வேறு.

நடுமதி வரப்புவனி தலமதி சயிக்கவொளிர்
நலின்மருவு முத்திவரவே

யுடுமதி யொளிக்கவடி யவர்மதி களிக்கவுய
ரொருகுடை நிழற்றிவரவே. (௧௪)

சாமர முழக்கவுயிர் சாமர மொழிக்கவல
தாமரையு கத்தினலரூர்
சாமரம னுக்கருகு தாமரை முகத்தியர்கள்
சாமரமி ரட்டிவரவே. (௧௫)

விடைகருட னன்னமுத லாகவெழு துங்கொடிகள்
பின்புவர விண்ணவரெலாந்
தொடரவரி தென்று * மன்ற மொழியன்றியெ னும்
பெரிய, துவசமுமு யர்த்துவரவே (௧௬) ஆசுகூள

---

பரவுதல்.

இரவிமதி பிரமன்முதல் சுரரவனி சுரர்முனிவ
ரெழின்மறைகள் சயசயவெனப்
பரவிவரு மரவமொடு பரவையென வடியவர்கள்
பரவிவரு பரிசுபகர்வாம். (௩)

வேறு.

கர்தலிணைந் தருகியழு மடியார் தங்கள
கண்ணினின்றும் பேராத கண்ணே போற்றி

---

* தொடர்வரிய தென்றுபல சுருதிமொழி வீடுதரு
துவசமுனுயர்த்து வரவே. எனவும்பாடம்

போதலையும் வருதலையு மொழித்து ஞானப்
பூரணமாய் வேதிக்கும் புனிதா போற்றி.  (உ)

பொய்யர்க்குப் பொய்யான பூத பேதப்
பொருளாயு மிருளாயும் புரிந்தாய் போற்றி
மெய்யர்க்கு மெய்ஞ்ஞான வநந்தா னந்த
வொளியாகி வெளிப்பட்ட வேந்தே போற்றி.  (௩)

ஆதியுமா யந்தமுமாய் நின்றாய் போற்றி
யாதியந்த மில்லாத வமலா போற்றி
சோதியுமா யிருளுமாய் நின்ற தூய
சொருபானந் தச்சுடரே போற்றிபோற்றி.  (௪)

அனைத்துலகு நின்பாலா நின்றாய்போற்றி
யழிவாக்க மறநிறைந்த வாதி போற்றி
நினைத்தவடி வாய்நிகழ்ந்து நின்றாய் போற்றி
நினைவிறந்தா ருள்ளத்து நிதியே போற்றி.  (௫)

காரணத்தின் காரணமாய்க் கழன்றாய் போற்றி
கண்களிக்கும் படிவந்த கழல்கள் போற்றி
யாரணத்தின் மெய்ப்பொருளா மறிவே போற்றி
யடியவரங் கைக்கனியா மமிர்தே போற்றி.  (௬)

கல்லாமை கற்பித்த தாளர் போற்றி
கண்ணிற்குங் கண்ணான கண்ணே போற்றி

சொல்லாமற் சொல்லிறந்த பரமானந்தச்
சுடர்திகழச் சொல்லவல்ல சோதி போற்றி. (எ)

ஆவியா யனைத்துயிர்க்கு நின்றாய் போற்றி
யறிவறியா மையைக்கடந்த வறிவே போற்றி
பாவியாப் பாவகத்தி னிருந்தாய் போற்றி
பற்றற்றார் பற்றநின்ற பற்றே போற்றி. (அ)

போகமும்வீ டும்புரக்கும் புனிதா போற்றி
போதுக்குப் போதுநலம் புதியாய் போற்றி
யேகமுமா யநேகமுமா யிருந்தாய் போற்றி
யெல்லாமா யல்லாத விறைவா போற்றி. (கூ)

பரமுமவ ருளத்திருந்த பதியே போற்றி
பந்தமும்வீ டும்படைத்த பரனே போற்றி
யிரவுபக லறவருளு மெந்தாய் போற்றி
யிப்பரிசென் றியம்பரிய விறைவா போற்றி. (ய)

முத்திக்கு வித்தான முதல்வா போற்றி
மொழியிறந்த வானந்த மூர்த்தி போற்றி
தித்திக்கு ஞானகனத் தேனே போற்றி
சிவப்பிரகா சக்கனியே போற்றி போற்றி. (கக)

வேறு,

அன்னையை யினிக்காணு மேமயடைந்தவர்க் கமிர்தாய் நின்ற
தன்னையே யளிக்க வல்ல தம்பிரான் போற்றி போற்றி. (௧௨

துய்யசே வடியான் மாயைத் தூகளறத் துகைக்க வல்ல
செய்யசே வகனே போற்றி சிவப்பிர காசா போற்றி. (கங)

இப்படி மறைக ளாலும் யாவரும் போற்ற வீச
னப்படி யிலாத பொற்றா ளணங்கனார் வணங்கி வாழ்த்தி

வேறு,

அன்றால முண்டா னிவன்காணு மென்பா
ரருளல்ல வோவுள்ள தெல்லா மவன்பாற்
சென்றா லிரங்கா திரானென்று செல்வார்
தெரியாது பெரியோர்க டருவுள்ள மென்பார். (கரு)

அளியொன்று தோண்மாலை தரவேண்டு மானே
யஞ்சாது பின்செல்ல யாமார்கொ லென்பா
ரெளியன் சிடர்நல்ல மெய்யன்ப ரோடே
யேத்திப் பணிந்தா லிவன்சால வென்பார், (கசு)

அங்கண்ண னென்பார் திருக்கண்க ளன்றே
வடிபேணு நம்மாவி யடுகின்ற தென்பா
ரெங்கண்ணின் முன்னேயிவ் விறைவன்க ணின்று
மெங்கே யொளிப்பே மிவர்க்கென் றுரைப்பார். (கஎ)

தனுக்கல்லை முன்செய்த தனிவீர னென்பார்
தன்காலின் வீழத் தடங்கண்க ளாலே
மனக்கல்லை யெல்லாம் வளைத்தாள நேரே
வல்லான்மு னெக்கல்லும் வளையாத தென்பார். (கஅ)

நாமாது முற்செய்த தவமென்கொ லென்பார்
நாமாதி தன்றன்னை நாவார வாழ்த்திப்
பாமாலை சாத்தும் பதம்பெற்று நின்றாள்
பாரீர் தார்பெற்ற பதமென்று பகர்வார். (கசு)

பொன்மேனி கண்டார்கட் ன்மேனி யாகப்
புரக்கும்பி ரானென்றல் பொய்யன்று மெய்யே
யென்மேனி பொன்மேனி யாய்விட்ட தென்பா
ரிப்பேறு பெறுவார்க ளியாரென் றிசைப்பார். உ0)

வேறு.

முடியாதப தத்தை யளிக்கு
மொழியாமொழி யாளிப தத்தே
கடியார்மலர் தூய்த்தொழு கிற்பீர்
கையென்னத வஞ்செய்த தென்பார். (உக)

மரணப்பிற வித்துயர் தீர
மருந்தென்று வணங்கி வணங்கிச்
சரணப்பது மந்தலை வைப்பார்
தலையென்னத வஞ்செய்த தென்பார். (உஉ)

புரணப்பரி பூரணபோதப்
பொன்மேனி புலப்பட நல்குங்
கருணைக்கழல் கண்களில் வைப்பார்
கண்ணென்ன தவஞ்செய்த தென்பார். (உங)

மிகைசெய்தார் தம்மைத்தாம் வென்றுவிட வேண்டி
யிகல்செய்யா தென்றும் பொறுக்க—யிகல்செய்யிற்
கோபத்தை யொன்றையுங் கொல்க வதுவல்லா
றுபத்தை யெல்லா மறும். (௱)

அற்புத யோகிக் கனுகூல மானவா
னற்பவா றாவ தெனவறிக—வாடுகின்ற
பொற்புறு நீரிற் புறத்தூய்மை யுட்டூய்மை
சிற்பொருளா லுள்ளத் தெளிவு (௱௧)

நியமம்.

தவஞ்செபஞ் சந்தோட மாத்திகந் தானஞ்
சிவன்றரு நல்விரதஞ் சித்தாந்தக்—கேள்வி
யுவந்த சிவபூசை யொண்மதிநாண் பத்து
நிவந்த நியமங்க ளாம். (௱௨)

தவநோன்பா லூண்சுருக்கித் தம்முடம்பை வாட்ட
லெவனுக் பிறவியெனக் கெய்திற்-றெந்தாலே
சிவமான முத்தித் திறனேமித் தன்றோர்தல்
பவமாறப் பண்ணுந் தவம். (௱௩)

கூடியது கொண்டமைதல் சந்தோடங் கோகநக
னுடமுதலா நவில்கின்ற-வெப்பதமும்
வீடிப் பாமுளத்தே மெய்காண் மகிழ்ச்சிசந்
தோட மெனுஞ்சுருதிச் சொல்.

ஆத்திகம் வேதநெறித் தேற்றமா மாதரத்தோ
டூத்தல் பயன்கருதா நீகையாங்—காத்திரத்தால்
வந்தித்தல் வாயார வாழ்த்தன் மனத்திறையைச்
சிந்தித்தல் பூசை செயல். (௱௫)

பிரமந்தா னுய்த்தெளியப் பேசுமறைக் கேள்வி
திரிவன்னத் தோர்கட்குஞ் சித்தாந்தக்—கேள்வி
புரையில் புராணந்தான் பொய்யிலா மாதர்
சரதவே ளாளர்க்கு மாம். (௱௬)

மந்திரந் தாரக மாதியா மன்னிருடிச்
சந்த மதிதெய்வந் தான்கொண்டு—முந்தி
யுரைவாய் துடியுள்ள லொன்றிற்கொண் டோரா
யிர்மாம் பயனுண் டவை. (௱௭)

வெறுத்தே யரிதெனினு மென்மேல் விருப்ப
மறுத்தே யிதுவே யறம்பொருளின்ப
மிறுத்தான வீடுமெனக் குரவ னேவன்
மறுசெயன் மாவிரத மாம். (௱௮)

ஆசின் மறைநெறியி னுதரவு தான்மறியான்
றேச வழக்கிற் சிறந்த—மறைநெறியி
லாசிறு வென்னுங் கருமத் தருவருத்துக்
கூசுந நாணமெனக் கொள்.

### ஆதனம்.

பத்திரங் கோமுகம் பங்கேரு கஞ்சிங்கஞ்
சொத்திகம் வீரஞ் சுகாதனம்—முத்த
மயிலாச னந்தண்ட மாயோ கியர்கள்
பயிலா சனங்களிவை பத்து. (௱௰)

செவ்வே யுடலுங் கழுத்துஞ் சிரமுமுற
வெவ்வா தனத்தே யிருந்தவர்க்குங்—கைவந்தால்
வாத முதனோய் நலியா மதியுடையோ
ராதனு மென்ப தது. (௱௰க)

### பிராணாயாமம்.

வாங்கிப் பதினாறு மாத்திரை நான்மடங்கு
தாங்கித்தற் பாதிதனைவிடக்—கால்வலத்தால்
வாங்கி விடத்தி விடத்தேல் வலத்தில்விட
வோங்கார முச்சரித்துக் கொண்டு. (௱௰உ)

### பிரத்தியாகாரம்.

ஒருக்கா லுமுள்ள முபாதிவே றாகப்
பிரித்துணர்வைக் காண்டலும் பின்ன—வுபாதி
கரைத்துப் பருகிவெறுங் கண்ணாக் குதலும்
பிரத்தியா காரமெனப் பேசு. (௱௰௩)

### தாரணை.

ஆய வுடம்பனைத்து மைம்பூதத் தேவைத்து
மாயையி லேவைத்த மாபூத—மாயைப்
பரத்திலே வைத்தப் பரமேதா னாகத்
தரித்தலே தாரணை தான். (௱௰௪)

### தியானம்.

பொருளின்மெய் காண்டல் புலத்தியான முள்ள
பொருளினை தல்புத்தித் தியானம்—பொருளறிந்த
போத மறிதல்போ தந்தியானம் போதமே
யாதல் பரத்தியான மாம். (௱௰௫)

### சமாதி.

காய முதலையர் கீரயா தியிலழித்து
மாய விருளினவை மாள்வித்து—மாயை
யொருக்கித்தன் னுற்று லுபரத்தோ டொன்று
யிருக்கை சமாதி யியல்பு. (௱௰௬)

### அணிமாதிபலவிகழ்ச்சி.

நல்ல வியோகெட்டு ஞானத்திற் கங்கமெனுஞ்
செல்வ மணிமாதி சிந்தைசெய்வார்—கல்லை
விரும்பின் சுவர்க்கரும்பின் கோலா விடந்து
விரும்பித் துவிடெடுப்பார் வேறு. (௱௰௭

### ஈருடல்.

வேய்ந்ததோல் சோரிதசை வெள்ளென்பு மச்சைசிரை
சேர்ந்த இரதே தேகமா—மேய்ந்த
வகனுற் கரணமீ ரைம்புலன் வாயு
பகர்சூக்கம் பஃதொன் பது. (௱௰௮)

### பஞ்சகோசம்.

அன்னம் பிராணன் மனஞான மானந்த
மென்னுங்கோ சங்க ளிவையைந்தும்--பன்னுய
கிரமத்தா லொன்றிற்கொன் றுள்ளாகுங் கேடில்
பிரமத்தா லாகுநிலை பேறு. (௱௰௯)

### பஞ்சாசயம்.

பந்திக்கு மாமா சயம்பக்கு வாசய
மந்த மலமூவர்நீ ராசயங்கண்—மைந்த
ருறைதரு கெர்ப்பா சயமென் றுடற்கே
யுறைதரு மாசயங்க ளைந்து. (௱௨௦)

### ஈரேழுநாடி

ஈரேழு நாடி யிடைபிங் கலைசுழினை
வாருனை நாட்பூடா வைரி--யலம்புருடை
காந்தாரி பைசுனி சங்கினி யத்தி
சிகுவை குகுபுருடன் கூ. (௱௨௧)

### ஈரேழுவாயு.

பிராண னபான னுதானன் வியான
னாவிசையன் றேவதத்த னுமை—கிருதரனே
அந்தரி யாமி முக்கியன் பிரபஞ்சன்
வைரன் சமானன் வளி. (௱௨௨)

### ஷடாதாரம்.

மூலாதிட் டான மணிபூ ரகம்விசுத்தி
யேனு மனாகத மாஞ்ஞை—யிருமூன்றின்
மேலாதா ரத்துமதி வெய்யோன் விசுத்தியிற்றீ
மூலாதா ரத்துறைய மூண்டு. (௱௨௩)

### அஷ்டவிகாரம்.

உன்னவருங்காம கோப முலோபமுடன்
மன்னுறு மோக மதமாச்—சரியந்
தன்னை மிகமதிக்குந் தம்பம் பொறாமையெனு
மின்னல் விகாரங்க ளெட்டு. (௱௨௪)

### ஷட்பாவனை.

ஒன்றிற் பிறத்த லுளதாத லோங்கிவள
ரன்றிப் பருத்த லறத்தேய்தல்—பொன்ற
லெனுமாறு பாவமு மிவ்வுடற்கே ஞான
கனமாந் தனக்கில்லை காண். (௱௨௫)

சட்கோடி.

வீடுபெற் றில்லை பிறிதொன் றி றைதன்னை
வீடுபெற் றில்லை பிறிதொன்றைத்—தன்றானும்
வீடுபெற் றில்லைதன் றைற்றன்னை யிவ்வாறு
கோடியு மில்லை தனக்கு. (௫௨௩)

சதுர்னம்.

அன்னபா னங்கள் பிராணனை தேயாகு
மன்னு மகிழ்வு மடிவு—மனத்தன
வின்னலா மூத்த விறத்த லியாக்கையு
ஞன்னுக்கு நாடி லிலது. (௫௨௪)

முக்காரகம்.

மயலுடல் வாக்கு மனமென்று மாந்தர்
அயருறு மின்பமுந் துன்பமுந்—துப்பச்
செயலுறை சிந்தனை தீமையு நன்று
முயல்வன காரக மூன்று. (௫௨௫)

மும்மலம்.

உருவுணர வொண்ணா வகையுணர்வை யொன்றி
மருவிய வாணவ மாயை—கருமங்கண்
மூக்குந் தவிடு முமியு மிவையாக்கை
யாக்கும் பவவித்துக் காம். (௫௨௬)

## முக்குணம்.

சுத்தமாஞ் சாத்திகமுந் தூய்மையி ருமதமு
மத்திமமா ராசதமு மாந்தர்க்கு—நித்த
மறிவறி யாமை யவற்றின் புணர்ச்சி
குறியுடைய மூன்று குணம். (௱௩௰)

## முப்பிணிக்குணம்.

கீர்த்தி கருணை நிலைமை யளிமானம்
போத மவையின்மை போரிற்—புறங்கொடுக்கல்
மேதக் கவர்ப்பழித்தல் வேண்டா தவைபிதற்றல்
வாதக் குணமா மதி. (௱௩௧)

அறிவுடைமை யைந்தடக்க லாகத் தழகு
நெறியுடைமை சொல்வன்மை நீர்மை—பெறுவரிய
வத்து விதஞானத் தாதரவா மாண்மையிவை
பித்தகுண மென்றெனப் பேசு. (௱௩௨)

வெற்றிபிற ழாமை புகழ்கருணை யூக்கங்
குறிமதுகை கோப மிலாமை—பொறையோர்
நியமின் றியவீகை நெஞ்சத் துவகை
கபமொன் றியகுணமாக் காண். (௱௩௩)

## முத்துக்கம்.

ஆதிபௌ திகமாதி தெய்விக மான்மிகமென்

ஏது தாபமூன்றி னுட்க வருமிடியின்
வாத மழைமேவனில் வன்னி பனியாதி
பௌதிக மாகும் படர். (௱௯௪)

வாரு முதகேனைவு மானுடர் மாப்பறவை
பேயசுரர் நாகத்தார் பீடையாங்-காயத்தின்
மானஞ் சினமவா மாச்சரிய மாதிமனத்
தானதுய ராதியான் மா. (௱௯௫)

இடனில் கருப்புகுத லீக்குப் பிறத்த
னடையுடன் மூத்த னரைத்தன்-படமை
நிசோவறச் சாது ணியம் புகுத
லஞ்ஞயமவை தெய்விக மாம். (௱௯௬)

மூவேடணை.

மகப்பற்று தாரும் வருஞ்சுற்ற மெல்லாஞ்
சகப்பற்றுச் சங்கற்ப மெல்லா-முகப்புற்ற
வெப்பொருளு மத்தப்பற் றிவ்வே டணைமூன்று
மெய்ப்பொருள் கண்டால் விடும். (௱௯௭)

மூவவத்தை

காணுமது நேரே நனவா நிலைபேறு
காணாமை காணு மதுகனவா-மொன்றையுங்
காணா தொழிகை சுழுத்தியாங் காணாமை
காணுங்கட் கில்லை யவை. (௱௯௮)

நாற்கரணம்.

ஐய மனனு மபிமான மாங்கார
மையறு வேதுணிதன் மாமதியாஞ்-செய்ய
வருசிந் தனைசித்த மாகு மவையே
யொருநான்கா முட்கரண மொன்று. (௧௩௯)

ஐம்பூதம்.

காசினிநீர் தீகால்வான் கந்தஞ் சுவையொளியூ
றோசைமா பூத முறுகுணங்கள்-மாசில்
செவிமெய்வாய் கண்மூக்குச் செப்பியநுண் பூத
மவையறியு மைம்புலன்க ளாம். (௧௪௰)

ஓதுகுணமீ வரன்முதலா வொன்றிற்கொன் றேறுமுறை
யீதனடை பேர்க்குத லின்ப-மீகிவாய்
கைபொடுகால் பாயு ருபத்தங் கருமங்கள்
செய்யும் புலனைச் செப்பு. (௧௪௧)

பூதநிறம் பொன்வெண்மை செம்மை கருமைபுகை
யேர்து முருவ மதற்குரைக்கில்-மீதி
சதுர மதிபாதி மூன்றாறு கோண
மதியமாம் வட்ட மவையாம். (௧௪௨)

உண்ணிலை.

புத்தி கருமப் புலன்பத்த தின்விடயஞ்
சத்த வுசனாதி தன்பத்துச்-சித்த

மதமான வன்றான் கறிவா னொருவ
னகமா கியவிருபத் தைந்து. (௧௪௩)

புறநிலை

தசைமயிர்தோ லென்புசிரை தண்ணிணநீர் மூளை
யுதிரம் பெலம்பசி தாகந் முறக்க
மிதுனா மறப்பிருப்பு மேலோங்க லோடல்
கதிகிடத்தன் மானபயங் காதல் கதநா
ணிதமாம் புறத்திருபத் தைந்து. (௧௪௪)

இருபத்தெட்டு,

விகுதி யிருபத்து மூன்றும் பகுதியு
நாலா யுகண்ட புருடனுங்-காலமு
முயர்ந்த வியோமம் வியோமா திதமென்
றியம்பு மிவையிருபத் தெட்டு. (௧௪௫)

தத்துவமுப்பத்தாறு.

கலைமுதலான் மாவீறு சத்திசிவம் வித்தை
சுலமில் சதாசிவ மீசன்-கலைமாயை
யேறுவிச்சை கால மிராக நியதியையத்
தாறசுத்தஞ் சுத்த மரோ. (௧௪௬)

தத்துவந்தொண்ணூற்றாறு.

பூதமிறங் கோசம் புறநிலையு முண்ணிலையும்
வாத விகார மலங்குணங்க-ளாதார

மேக புருடவினை யஞ்சா லவத்தைதமியனை
வாக விளைவொன் றொன்றாற்று. (௧௪௭)

### தத்துவநிச்சயம்.

ஊலவாத தத்துவத்தி னுண்மை புணர்ந்த
விலவா மிறைவியப் பென்னை - பலவாக்
கண்ணிலவு மாசுடையார் கண்டாற் பலவாமோ
தண்ணிலவொன் றல்லவோ தான். (௧௪௮)

### குணசம்பந்தாவத்தை.

முத்திற னான குணத்தன மூன்றவத்தை
யுத்தமமாஞ் சாத்திக மாமுணர்ச்சி - தான்கனு
மத்திம ராசதமாண்ட சுழுத்திதா
னத்தம தாமதம தாம். (௧௪௯)

### அவத்தாந்தரவிவத்தை.

நனவு முதலவத்தை நாலைவயோ டொன்றின்
நனவுமுதனாலுங் கண்டார் - கனவா
நனவு முதனாலுங் காணார்கள் காண்பர்
நனவாக ஞான கனம். (௧௫௰)

நனவி னனவு புலன்வழக்க மாகு
நனவிற் கனவு நினைவா - நனவில்
மனநினை வின்மை சுழுத்தி நினைவின்மை
தனைநாடி துரியுந் தான். (௧௫௧)

கனவி னனவுபோற் காண்ட னனவாங்
கனவினிற் கண்டு மறத்தல்-கனவாங்
கனவிற் சுழுத்திகா ணாமைகாண் பானை
யனுமதித்த லாமற் றது. (௧௫௨)

சுழுத்தி நனவொன்றுந் தோன்றாமை தோன்றல்
சுழுத்தி கனவாஞ் சுழுத்தி-சுழுத்தி
யரிய வறிவா லழிக்கை சுழுத்தி
துரியமாஞ் சொல்லிறந்த பாழ். (௧௫௩)

துரிய நனவா மிதமுணர்ந்த போதந்
துரிய கனவா மகமுணர்ந்த-போதந்
துரியச் சுழுத்தி வியோமந் துரியந்
துரியம் பரமாகச் சொல். (௧௫௪)

ஆதாரகேதாவவத்தை.

சந்தித் திடம்புருவந் தன்னினிலை சாக்கிரமாங்
கந்தரத்தி னிற்கை கனவாஞ் - சுழுத்தியந்
விந்து மெனுமிதய மேவலா முந்திக்கு
நால்விரலி னுலா வது. (௧௫௫)

காரணகேதாவவத்தை

நனவிற் பதினாற் காணமு நான்கு
கனவிற் சுழுத்தி கருத - லறமூன்றுந்

தனதாகை வேறாகை தான்றுரிய மற்ற
தெனதியானற்ற விடம். (௧௫௬)

அவத்தைக் கழிவு.

ஒருக்க நனைப்போங் கனைப்போ மூளத்தை
தரிக்கத்தற் றியானத்திற் றற்சுழுத்தி - போரு
மரிக்குஞ் சமாதி துரிய மதீதம்
புரிந்தும் பரம்விளங்கப் போம். (௧௫௭)

துரிசனவத்தை.

சுழுத்திநன வின்வரிற் றோன்றியிடுஞ் சீவன்
பழிப்பினதீ தத்திற் பரமன்—விழித்தவனேற்
றீதொருங்க வண்ட குரவன் றிருக்கோல
மேதொருங்கித் தோன்று மெனி. (௧௫௮)

மாவாக்கியம்.

அதுநீயா னென்று மப்பதங்கண் மூன்றி
னதுவென் பதுபிரம நீயென் — பதுசீவ
னான் யெனும்பதந்தா னவ்விருவ ரைக்கியமா
மூன்று முபாதி யொழித்து. (௧௫௯)

ஓங்காரம்.

புகலு மனைநியவத்தை காலம் புவன
மிகலீர்குணந் தீயிறைவர் செய்கை—தகவே

உகார வுகார மகார மதனாற்
சகலமுந் தாரக மாம். (கசூ௦)

அசபை.

அஞ்ச வுருவிருபத் தோராயிரத் தறுநூ
றெஞ்ச லறநின் றியம்பாமற்—றுனியம்பித்
தஞ்சப்பிரமத்திற் றன்வேறன் றென்னுமஃ
தஞ்ச லொழிக்குந் துணை. (கசூக)

ஸ்ரீபஞ்சாக்ஷரம்.

சிவமுதற் றத்துவங்க டேவதைகள் செய்கை
யவனிமுதற் பூத மவத்தை—புவனங்கள்
கோசம் பொறிபுலன்கள் கூறுங் கரணமெலா
மீசன் றிருவஞ் செழுத்து. (கசூஉ)

ஸ்ரீ அஷ்டாக்ஷரம்.

நாராய ணாய நமவென் பொருள்சீவ
னேரா ரிறையேக மென்றறிகை—பேர்வேறு
காரண காரிய காயத்தா னென்றுகும்
பூரண போதப் பொருள். (கசூங)

வாக்கியவிவேகம்.

ஊக்கி யறுதியிட வொண்ணா வொருதன்னைப்
போக்கி யிலாத பொருடா—னருளாலே

பாக்கியத்தால் வந்து பலிக்கி னலதில்லை
வாக்கியத் தார்காணு மாறு (௧௯௩)

சீவபரவேறுபாடு,

அறிவா னறிவொன்ன வாகத்தே சீவ
னிறையோனென் பாருண் டிருவர்—பிறியாச்
சுபாசுபங்க ளவிவரைச் சொல்லவரு பேத
வுபாதிகளா னல்லதுரு வொன்று. (௧௯௪)

சீவலக்ஷணம்.

இதமக மெய்து மிரண்டி தொழிலு
மீதிய தவையறிந்த மாத்திரமே- சீவ
னிதன் பவங்க டனக்கில்லை நித்த
னத்தனை யறிவா னவன். (௧௯௫)

பரலக்ஷணம்.

எப்பொருட்குங் காரணமா யெப்பொருட்கு மீசனு
மெப்பொருட்குந் தோற்ற நிலையிறவா—வெப்பொருடா
னல்ல திலதா யகமும் புறமுநிறைந்
தெல்லா மறிவா னிறை. (௧௯௬)

சீவபரவேறின்மை.

உபாதி யொழிந்தா லுயிர்பரங்க ளொன்றே
யுபாசுப ராய்நின்ற தோற்ற—முபாதி.

கடாகார மாகாயம் வேறாகக் காண்கை
யடாகா ணறிவொன்றே யாம். (௧௬௮)

மாயாவிவேகம்.

அறியாத மாயைக் கடியறியத் தேடி
னறிவா லறியவொண் ணாது — மறியாமைக்
கேது வறியி லறிவா லிருட்கேது
சோதியைக் கொண்டறிந்து சொல். (௧௬௯)

உலகவிவேகம்.

போதக்கண் பூதங்கள் பொய்யா மவைமெய்யாம்
பேதக் கட்டாதிப் பிறழ்வுகளிற் — பேதங்கள்
சுத்திகையின் வெள்ளியின்மெய் தோன்றும் படுங்கனவு
நித்திரையைப் பாரந் நிலை. (௧௭௦)

அயலாக மெய்போ லனைத்தபே தத்தை
மயலாகக் கண்டமா மாயத் — துயில்போ
லெண்பீடு மிவ்வுலக முண்டாமா றெங்ஙனே
கண்படைபோ யுண்டோ கனா. (௧௭௧)

வன்னி யிருக்கமரம் வன்மிசையு ஞானதே
தன்னிகழ்ச்சி யின்றேலித் தன்மையர் — ஞன்ஞன
தன்னிகழ்ந்தா லுண்டோ சகத்தின்பஞ் சற்குருவால்
வன்னிகண்டா லுண்டோ மரம். (௧௭௨)

ஞானமுதன்மை.

போகாதி மூன்று முணர்வதனுக் கங்கமா
மாகா தெனிற்பதங்க ளாயழியுந்—தேக
மொழிய வருமுத்தி யொன்றுதற்கு ஞான
விழியை யலதில்லை வேறு (௧௱௩)

ஞானலக்ஷணம்.

பொறிவா யறிபுலன்கள் போதக் கரண
வழிவான வெல்லா மடங்கி—யறிவா
னறிவா னறிவ தறியும் பொருளென்
றறியா தறிவ தறிவு. (௧௱௪)

ஞானப்பெருமை.

அலைபிலே கன்ம மடியிலே யாக்குந்
தலையிலே ஞானந் தரிக்கு—மலையா
தருமறை நூலே யறியுஞா னத்தின்
பெருமை யறியார் பிறர் (௧௱௫)

ஞானபூசை.

இன்பக்கண் ணீராட்டி யேத்தி யெழின்மலரா
வன்பிட்டுத் தம்மை யமிர்தாக்கி—முன்புற்ற
சிற்சடமெல் லாஞ்சிவ மாகநோக் கல்சிவா
ர்ச்சனை யாகு மது. (௧௱௬)

ஞானயோகம்.

யோகத் தபாவமெனும் யோகமது கைகூடி
னேகப் பொருளதனை னெய்தியிடு—மேக
மதுவா மிதுவன் றெனவகண்ட மான
வதுவாகை மாயோக மாம். (௧௭௭)

ஞானவலி.

புணர்பாவ புண்ணியங்க ளெண்ணிறந்த தெல்லா
முணர்வா மெரிகொளுவி னுண்டோ—வுணராமை
கூடவெந் தெழுத துண்டோ குழைந்தமரங்
காடுவெந் தீப்பட்டக் கால். (௧௭௮)

யோகநழுவுதல்.

யோகத்தா லேகத்தைக் கூடா திடையினுயிர்
போகிற்றான் பொல்லா வுலகிற்—புகாநல்ல
யாகத்தா னெய்து பயனெல்லா மெய்திப்பின்
யோகத்தான் முத்தியுறும். (௧௭௯)

ஊழ்வலி.

தந்த வறியாமை போகவுந் தான்போகா
திந்த வுடனிற்ப தென்னென்னி—னுந்துங்
குசவன்கை விட்டாலுங் கூடா திகிரி
விசைவந் திடாதே விட. (௧௮௦)

### முத்திசாதனம்.

கருபயன் வேண்டாத் தருவினைகள் சாந்தி
சுருதிகள் கேள்வி துறவி—குருவைப்
பெறுதற்கிங் கேது பெறற்கரிய முத்தி
யுறுதற்கிங் கேது வவன். (௧௮௧)

### ஆசாரியலக்ஷணம்.

சிறையா முடன்முதல் சித்தமீ ருக
விறையோனே யானல்லே னென்று—மறைந்
பதுவா னென்ற தெனுவானே னென்று
விதுர்கா னென்பா னிறை: (௧௮௨)

### ஆசாரியன்மகிமை.

உள்ளந் தனினின் றொளித்தான் பரன்குரவன்.
கள்ளந் தனைத்தவிர்த்துக் காட்டினான்—வள்ள
லருவான கோலமோ வக்கோலங் காணக்
குருவான கோலமோ கூறு. (௧௮௩)

### அஞ்ஞாசாரியலக்ஷணம்.

தயிற்புணர்ப்பாற் கெர்ப்பந் தொடுகடனீ ராமை
மயிர்ப்படா மின்மினியின் வன்னி—முயற்கோ
டெருத்தின்பான் மெய்யுணர் வில்லாதான் பண்ணுங்
குருத்துவமு நேராகக் கொள். (௧௮[illegible])

## அமிர்தசாரம்.

### பக்குவலக்ஷணம்.

காய நிலையின்மை கண்டான் கருத்துச்செந்
தீயி னடுவிற்றன் சித்தஞ்-சினவரவின்
வாயுறு மண்டுகத்தின் னெஞ்சம் வரியுழுவை
தாயவ னுள்ளஞ் சமம். (௱௮௫)

### அபக்குவலக்ஷணம்.

தப்பாற் றவந்தூய்மை வாய்மை தயாவிலா
ருப்ப னடிபேறு ருள்ளபொரு-ணம்பார்
பொருள்செய்ய வாதரிப்பார் போக நினைவா
ரருள்செய்ய லாகா தவர். (௱௮௬)

சித்தியா நிற்குஞ் சிலர்க்கு விபரீதப்
புத்தியா குஞ்சிலர்க்குப் போதுமே-சுத்தமாம்
பானீய மொன்றேனும் பாம்புண்டா னஞ்சீனு
மானீயு நல்ல வமிர்து. (௱௮௭)

### சீஷசரிதை

கழல்போற்ற வாயாரக் கண்மல்க வுள்ள
மழல்சேர் மெழுகி னழிவெய்த-யாக்கை
யெழில்சேர் குருபரன்ற னேவலேல் செய்க
நிழல்போல முன்பினு நின்று. (௱௮௮)

சந்தனந் தாம்பூலந் தாரார்த னஞ்சயன
மர்தனம் பொய்வெய்ய மாற்றங்கள்—சிந்தைக்
கரவபி மானங் கலுழ்ச்சி களிப்பின்ன
குரவன்முன் மேவா தகொள். (௱அ௯)

### சம்பிரதாயலக்ஷணம்.

அருகைபுற்ற நீராக்கொண் டாக்கை பொருளாவி
பங்கயச்கண் ணற்கொண்டு பண்டைவினைச்—சங்கையற
பூத மலமுழுதும் போத மெனநிகழ்த்தப்
பாதமலர் வைத்தான் பரன். (௧௯௰)

### ஊனுயிர்வேறுபாடு.

ஆக்கை முதற்சித்த மீறாக வெப்பொருளு,
நோக்கு மவன்றன்னை நோக்கா—தவைசடமாச்
சாக்கியா நின்றவவன் சற்குருவா வந்தபரன்
வாக்கில் வெளிப்படுங்காண் வந்து. (௧௯௧)

கலைக்கட்டளை முற்றிற்று.

---

## அநுபவக்கட்டளை,

### சிவதரிசனம்.

போக்கு மனநெருக்கிப் போதமங் கில்லாமை
நோக்கிய நோக்காலந் நோக்கத்தை-நோக்கென்றன்
றொன்றாத வெண்ணம்போய்த் தஞ்சிற் றிருளறிவாச்
சான்றாகி நின்றேனுன் றான். (௧)

சொல்லாட வில்லாத் துரியாதீ தம்பிறக்க
வெல்லா மவிழ விரு. (கூ)

...ந தெரிவு தெரியாமை யென்பதற
...ந்த தெனவும் வகையில்லை—மீாய்ந்ததுவும்
போந்த விடத்தே புகலு மஃதொழிய
மாய்ந்தீ விடத்தில்லை மற்று. (எ)

## வியோமதூஷணம்.

அடங்குகையாலே யதீதமு நின்னை
மடங்கொள் சுழுத்தியை மானுக்—கிடங்கொள்ள
நில்லாக் கனவே துரிய நிலையிரண்டு
மல்லாமை யாலவத்தை யாம். (அ)

## பாதரிசனம்.

அதீதம் பொருளென்ற லப்பொருளே தென்று
னதீதம் பொருளர் வறிந்த—புதனொருவ
னுண்டாங்கா னென்றுன் றுரைத்தா னுரைத்திலுமே
கண்டா னதுகசனுங் கண். (கூ)

பிறிதுக் கறிவிருந்த பெற்றியே னென்ன
வறிவிற் கறிவா விருந்த—வறிவை
யறிவே யறிகின்ற தன்றி யறியப்
பிறிதேது மில்லை பிறழ்வு. (௰)

முளைச்செயன் மாள வளித்திரு தாளுரை
யொன்று னெஞ்சார
நினைப்பது மீள மறப்பது வாநினை
வின்று யொன்றுகி
நிகழ்ச்சி யறுத நிலைப்பொ ருளாகிய
நின்கோ லங்காணத்
தினைத்துணை போதி னெனக்கருண் மாதவ
செங்கோ செங்கீரை
சிவப்பிர காச தவத்தனி நாயக
செங்கோ செங்கீரை. (ரு)

வேறு.

பாதமுடி தேடிருவர் பாதலனும் வானுமுடி
வாகவிவர் சென்றேயவே
பாரினது நாதனருள் வானில்வர நாமரிய
பாவியர்களென்றேதவே
பேதமொட்டபேதமெனு மாறுகொடு வாதுசில
பேசுமவர் திண்டாடவே
பேணுமடி யார்கடிரு வாய்மலரு மோர்விரகு
பேசிநனி கொண்டாடவே
வேதமுட ஞகமபு ராணமன வாசக
முறுதனென நின்றேதகீ

வேதங்க ளுச்சியுறை பாதங்கள் வைத்தருள
வேயென் றலைக்கி யையவதோ
வோடும் மனப்பிணியை மீளென் றளித்தறிவை
யோரென் றுணர்த்தி யமையா
வோரும்பொ ருட்கு நினை வேறென் றுணர்த்தியு
ராவொன் றுணர்த்து மிறைவா!
வீடென் றெனக்குவினை வேனுன் கடைத்தலை
வீடென் றிருப்ப னலதோர்
மேவும்பொ ருட்களுட னேவுஞ் சுவர்க்கமினி
வேறென் றெனக்கொர் பொருளோ.
தேடும் மறைக்கரியை யாருஞ் சிவப்பிரம
செங்கீரை யாடியருளே
தேறும் மவர்க்குணர்வு நீயென் றளிக்குமிறை
செங்கீரை யாடியருளே.

வேறு

அஞ்சொன் புலனை னரிப்புண் டவலக்
கடல்வா யழிவேனை
வாரு யெனநின் னருளா மடிவைத்
தழகாம் விழியாலென்
வஞ்சம் மெறியா மறியா வறிவாம்
வடிவா மெனதுள்ளே

மன்னுஞ் சொருபா மதியாய் ரவியாய்
வருபூ தமுமானாய்
நஞ்சஞ் சினமென் றயன்மான் முதறே
வர்கடா மயல்செய்ய
நாதா வடியோ நசியா வகையா
ளுடையா யெனவன்பர்க்
கஞ்சும் மருளா னாயினும் பரனே
யாடாய் செங்கீரை
யரன்மால் பிரமர்க் கறியா வறிவே
யாடாய் செங்கீரை. (அ)

செங்கீரைப்பருவம் முற்றிற்று. ஆக-௩௪.

# முத்தப்பருவம்.

மதியு மிலமதி யுடைய வறிஞரை
மருவி யொருகலை கற்றிலே
மதுர கவியல வடசொ றமிழ்விர
கறியும் வழிசெல வுற்றிலேம்
புதிய சொலவொரு பொருண்மை பெறவியல்
புனையு நினைவது பெற்றிலேம்
புலவர் சொனசொன சொலவு மவர்நினை
பொருளு முரைசெய்து நிற்கனே
துதியில் வருசொல வொழிய வறிதொரு
சொல்வு மிலமெனும் பெற்றியால்
சுரரு முனிவரு மெமது சொலவுக
டொழுது சிரமிசை யிற்கொளா
முதிய மறையென மொழிய வருளிய
முதல்வ பணிமணி முத்தமே
முடிவில் பவமொரு கொடியின் முடிவுசெய்
முனிவ பணிமணி முத்தமே.

கழிய மொழிவகை பொழிய வுளனுறு
கவலை யறவிலர் கட்டுநூல்
கதறி விடுமறு சமய நெறியுறல்
கருது நினைவது தப்பவே
விழிய தொழியவொர் சொலவு மிலதுல
கெனநி னருளினை மெச்சியே
விழிக ளருவிகள் பொழிய வுருகிட

விரகு செயவல வித்தகா
வழிய விருவினை யமல மலர்விழி
யடிய ரவர்பெற வைத்தெதுநீ
யழியு மலவுட லல்வு ளுருவறி
வுருவ மெனுமது சத்தியமே
மொழிய வொருமொழி மொழியு முருகிதழ்
முளரி பணிமணி முத்தமே
முடிவில் பலவொரு நொடியின் முடிவுசெய்
முனிவ யணிமணி முத்தமே. (௨)

வேறு.

தளர்வ தின்றிநீ னுலகி னின்புறு
தலைமை யொன்றிய முத்திதான்
சமமெ னும்படி தலைவ நின்றிரு
வுருவு தந்தருண் முத்திதா
னுளன்ம கிழ்ந்திட வுருகு மன்பொடு
னருகி ருந்திடு முத்திதான்
னொழிவ தின்றிநீ னுணர்வெ னுந்திரு
வுருவொ டொன்றிடு முத்திதான்
வளமை யொன்றொழி வறவு டம்புட
னுடைய விங்கடை வுற்றியான்
மகிழ விங்கருள் வடிவு கொண்டரு
மறை மொழிந்திட வுற்றமா
முளரி யங்கழ லருள வந்தருண்

முனிவ தந்தருண் முத்தமே
முதலு மின்றியோர் முடிவுமின்றிய
முதல்வ தந்தருண் முத்தமே.

வரவு டன்றிரி வுருப தந்தரும்
வலவ தந்தருண் முத்தமே
மதியி றந்துள மதிய றிந்திடு
மதிஞ தந்தருண் முத்தமே
பாவி நின்கழல் பரிவொ டும்புகல்
பரிசு தந்தருண் முத்தமே
பதக மின்றிய வவர றிந்திடு
பரம தந்தருண் முத்தமே
பிரவி சந்திர னெரி மறைந்திட
மிகவி லங்கிய சித்துமெய்
யெலையி னின்பமெ னுருவு தந்தரு
ளிறைவ தந்தருண் முத்தமே
முரிவு றும்மவ மொழிய வொன்றருள்
முனிவ தந்தருள் முத்தமே
மூதலு மின்றியோர் முடிவு மின்றிய
முனிவ தந்தருண் முத்தமே.

ஒழிவ றுந்திரு வுருவு தந்தரு
ளொருவ தந்தருண் முத்தமே
யுருகு மன்பர்க ளுணர்வு றுந்திரு

வுருவ தந்தருண் முத்தமே
முழுது நின்றிரு வுருவெ னுந்தனி
முதல்வ தந்தருண் முத்தமே
முரச றைந்துணை யருள வந்தருண்
முனைவ தந்தருண் முத்தமே
தொழுதெ ழன்பர்க ளறிய வந்தருள்
சொருப நின்கழல் செப்புமா
சுருதி யஞ்சவெ னறிவி னன்றியில்
சொலவு கொண்டுனை மத்தனேன்
மொழிய நின்றிரு முகம லர்ந்தருண்
முனிவ தந்தருண் முத்தமே
முதலு மின்றியொர் முடிவு மின்றிய
முதல்வ தந்தருண் முத்தமே. (௫)

வேறு.

வளரு மிருகன கலச தனமலை
மருவு தசைநிண மச்சைசீ
வழுவ ழெனவிழும் வழலை வருபுரை
கழலை மறுவுற வுற்றதோர்
குளிர்வு தருமொளி ருடைய மதியல
குருதி முகமொளி கற்கநீர்
கொழுகொ ழெனவிழு குழுமி குலவிய
குமிழ மலரல சுத்தமா

வுளது வடிவினை யுணர வுறினொரு
கணனு நினைவறு கட்டடமா
யுலவு பொறியென வுணர வருளியொ
ருரையி னுபநிட தத்தமே
முளரி மலரித ழலரு மொளிமுக
முதல்வ பணிமணி முத்தமே
முடிவில் பவமொரு நொடியின் முடிவுசெ
முனிவ பணிமணி முத்தமே.

வேறு.

நித்த வதிபதி சுத்த நிருபதி
பத்த நிரவய வத்திலே
நெக்க வுளனொடு பொக்க மறவரு
நிட்டை யுடையவ ரிட்டனே
கத்தி யலைபடு புத்தர் முதலவர்
கட்டு வனசில முட்டை நூல்
கற்று வருசில சற்றர் சொலவுறு
கட்ட வழியினை விட்டுமா
சித்தி யழகிய பத்தி யெனநினை
முத்தி யருளிய சித்தனே!
செத்தி வுடலொரு தத்த படமென
நிற்க வருளிய சிற்சுகா!
முத்தி நிலமிசை யெத்தி யருளிய

முத்த பணிமணி முத்தமே
முற்று முழுவற நிற்கு மொழிமுகன்
முத்த பணிமணி முத்தமே. (௭)

முத்தப் பருவ முற்றிற்று. ஆக—௪௪.

# அம்புலிப் பருவம்.

வேறு.

முனிவ ரன்சொரு பன்ற ருங்கழன்
முடிவ றிந்தில னரியுநான்
முகனு மன்றணி முடிவ றிந்தில
னெனமொ ழிந்தன மறையெலா
மினிவ ரும்பவ மொழிய வெண்பகை
யுறவு டம்புட னினியவீ
டிதுவெ னும்படி தெளிய விங்கொரு
மொழிமொ ழிந்திருள் வெளியொடே
யனித மிங்கித முறும கம்புற
மறநி றைந்துள வமலமா
வறிவ னந்தமெய் யளவி னின்பமெ
னுருவெ னும்படி யருளினான்
மனித னென்றிட வரவி சைந்தவன்
வருக வென்றபின் வருகவே
மறுவொ ழிந்திடும் வடிவு தந்திட
வருக வம்புலி வருகவே.

வேறு.

கோதி லர்வமு தக்கடல் குளிக்கவாங்
குறைவொடு நிறைவற்றுக்
கோடி லாவுடம் புறவுமா நினக்கொரு

கோளினுன் மறையாத
சோதி யானிலை பிறவுமாம் பண்டைநின்
சேர்டசக் கலையன்றித்
துகளி லாவறு பத்துநாற் கலையுநின்
சொருபமா நினதல்லாப்
பாதி நாளுமுன் றன்னதா மரிப்பதுற்
பவிப்பதா யிதுகாலம்
பட்ட பாடெலாங் கெட்டுநற் பரம்பொரு
ளாகவாம் பணிந்தேத்தி
யாதி நாயகன் றன்னுட னுடுதற்
கம்புலீ வருவாயே
யாண்ட நாயகன் றன்னுட னுடுதற்
கம்புலீ வருவாயே (உ)

தேசு நாமெனு மதிகொடோ சிவப்பிர
காசனிங் கழைத்தக்காற்
செல்லு வோமெனு திருந்ததுன் சிவப்பெலாந்
தீயதுன் வெளுப்பெல்லா
மாசி லாதநீ ருடையதுன் கறுப்பெலா
மண்ணதுன் னசைவெல்லா
மாரு தத்ததுன் புரைப்பெலாம் வானதைம்
பூதமாய் வான்மீதே
பூசி லாடுநீ யும்பனு மெனமதித்
திடப்பெறு யும்பர்க்கு

மும்ப ரானவர் தமக்குமுள் ளுணர்வதா
மும்பனு மிவன்பாதத்
தாசி லாவறி வாகவாம்
மாடுதற் கம்புலீ வருவாயே
யாண்ட நாயகன் றன்னுட னுடுதற்
கம்புலீ வருவாயே

வேறு.

இருளொலா மெறியுநின் னொளியெனுங் க
லிங்குவா ராதமையோ
விரவிதேர் கொடுவரும் புரவிவந் திட்டமே
திலதுநின் னொளியதற்கோ
ருருவையே யொத்திகா னுன்னையும் மவ
லும்பர்யா வரையுமற்று
முணர்வுளோர் யாவரையு முட்புறம் பறநி
துருவுதோன் றுதலன்ன
மருளவே மூடுமா மிரையவல் லிருளையே
மாத்திரைப் போதினுள்ளே
மாயவேரி ரளவிலா ஞானவா னந்தமே
வடிவதா வொளிரவேதந்
தருளுதே சிகனைவந் தடைவதே கருமநல்
லம்புலீ யாடவாவே
யனுபவத் தன்றிவே றறியொணு விறைய
னம்புலீயாடவாவே

உணவினிற் சுவைகள்போ லுரைகளிற் பொருள்கள்
லுடல்களுக் குயிர்கள்போ லு [போ
முயிரினுக் குயிருமா யுணர்வினுக் குணர்வுமா
யொளியினுக் கொளியுமாயே
யிணையறத் திகழ்வன் றேசினே ரேகதே
சத்தைநா ருயிரங்கூ
றிட்டமட் டில்லைகா ணிரவிநீ தியுடுத்
தொகையினென் றெண்ணு மெல்லாங்
குணதிசைக் கண்ணெழூந் திரவினீ குடதிசைக்
கண்மறைந் திடுதி யெங்கோன்
கூறுபத் துத்திசைக் கண்ணுமப் புறமுமெட்
டுத்துவிட்டகல்வுறுதே
யணுவினுக் கணுவுமாய் நின்றதன் மைமையறிந்
தம்புலீ யாடவாவே
யனுபவத் தன்றிவே றறியொணு விறையுட
னம்புலீ யாடவாவே. (நி)

வேறு,

அண்டமியா வையுமுலா விடினுமா நின்னைநீ
யறியலா யெங்கள் பெருமா
னகிலமியா வையினுமுள் ளொடுபுறம் பறநிறைந்
தறிவர்கா ணறியு மதுநீ
கண்டதே காணெணு வறிவுறுய் முழுதையுங்

கண்டுபோய் விஞ்சிய பெருங்
கண்ணர்கா ணொன்றுமெக் காலமுஞ் சுடர்வி
கடவுள்கா ணிந்த விறைகாண்
டுண்டமா முடலெடுத் துழல்வைகா ணின்னை
தொழில்கொள்வா ரிவர்தமக் கோர்
தொழிலிலார் தொழிலியா வையும்விதித்
சொருபவா ரமுத ரிவர்கா
ணண்டநா யகனதா ளடைவதே கருமமல்
லம்புலீ யாடவாவே.
யறிவதா னந்தமா வழகுறீ பெறுதிகல்
லம்புலீ யாடவாவே.

வேறு.

கோணுருவு கொண்டுகுறை கூடிநிறை வெய்து
குறைந்தற மறைந்துள குரம்பையெனு மிந்த
காணுமள வாவிடுவ தின்றிநில நீர்தீக்
கால்வெளி வரற்குரிய காரணனு மாகித்
தாணுவெனு மோர்திகழ லாமடி யவர்க்குத்
தன்னையருள் கற்பகத ருத்தகவில் பெண்பே
டாணுமல ஞாய்முழுது மானபெரு மானோ
டம்புலி பணிந்துவிளை யாடவரு வாயே.

அம்புலிப்பருவம் முற்றிற்று. ஆக-ருக.

# சிற்றிற்பருவம்.

வேறு.

நெஞ்சநின தாலய முடம்பக லெனைய
நெய்திரி மனன்சுடர் நிறைந்தபர ஞான
மஞ்சனம் விடாதுனை நினைந்துருகு கண்ணீர்
மந்திரநி னன்பர்திரு வாசகம் வணங்குங்
குஞ்சிமல ராதரவு சந்தமணி யாடை
கோலமணி வாயமுது கொள்வதுமென் வாணாள்
செஞ்சொன்மணி மாலைதிரு மாலையிவை கொண்டென்
சேவடிக ளாலெமது சிற்றில்சிதை யேலே. (௧)

மாதினை வழங்கிநில நீதிகெட வாழே
மடைப்பளியின் மைந்தனை யறுத்திடவு மாட்டேந்
தாதைதநு வேதிய னவன்றனை வெகுண்டே
தாளையற வெட்டிலமா ளுவது நீயிந்
நீதியுடை யார்சிலரை யென்றுனையு நின்னுண்
ணெக்கவடி யார்தமையு மிக்கபிழை தேடித்
தீதுமொழி யேமெமது சிற்றில்சிதை யேலே
சேவடிக ளாலெமது சிற்றில்சிதை யேலே. (௨)

வேறு.

வஞ்சக்கள் வன்மா மாயன்னிவ னிங்கோர்
மாயக்கவி யாய்வந் தடியேனுயி ருள்ளு

நெஞ்சத்துள் ளூம்புக் கவையொன்றொழி யாமே
நின்றுசறி யாமே யுண்டே நிறைவுற்று
ணஞ்சிக்கெடு வீர்நும் முயிர்காத் தாட் செய்பின்
ணருகேசெவி னும்மைப் பருகாவிடு மென்றான்
செஞ்சொற்கவி கட்கிங் குன்னைப்பழி கூறேந்
சிறியேமென வெஞ்சிற் றில்லஞ்சிதை யேலே. (௧)

வேறு.

பேசக்கரு தப்பட் டவனன்றென்னை யாளும்
பித்தன்குறி கேடன் பெண்ணுணலி யல்லான்
நேசத்திறை யொன்றிற் றட்டானுற வற்றான்
சென்மப்பகை யன்றற் சேர்வாருயி ருண்பான்
கூசப்படு வானுன் மறையன்குண னில்லான்
குருவற்றவ னிங்கோ ருருவற்றவ னென்றே
யேசித்தில மெஞ்சிற் றில்லஞ்சிதை யேலே
யெமையாளுடை யாய்சிற் றில்லஞ்சிதை யேலே. (௨)

வேறு.

தம்பத்துளை நிந்தித் தொருவேள்வி தொடங்குந்
தக்கன்றலை யோகீ தானங்குரி கொள்ளுங்
கம்பக்களி றேவெங் காலனுயி ரோவக்
கஞ்சன்வர வேவும் வஞ்சச்சக டோதின்

கும்பக்கரி யோமா மருதோ திரு முன்கைக்
குவியும்மடி யார்தம் பவமோவிவை யன்றே
செம்பொற்கழ லிட்டுச் சிதைவிப்ப துநின்சிற்
றடியேமென வெஞ்சிற் றில்லஞ்சிதை யேலே (ரு)

சிற்றிற்பருவ முற்றிற்று. ஆக-ருசு.

# சிறுதேர்ப்பருவம்.

வேறு.

அண்ட கோடிக ளனைத்தினுங் கப்புறத்
தப்புற மாய்நின்றே
யணுவி னுக்கணு வாகிநின் றயன்முத
லகிலசெந் துவுமாகும்
பிண்ட கோடிநா லுயிர கோடியாய்ப்
பிறங்கொரு பிறப்பின்றிப்
பேதமற்றள வற்றபே தங்களாய்ப் •
பிறழ்ந்துள பெருமானே!
பண்டை நான்மறைக் கரியநின் றன்னையு
மென்னையும் பாராதே
பரவும் வானவர் நிற்பவென் புன்றலைப்
பாதபங் கயஞ்சூடித்
தெண்டம் யானிடத் தந்திடுஞ் சேவக
னுருட்டுக சிறுதேரே
சிவப்பிர காசனென் பவப்பிணி மருத்துவ
னுருட்டுக சிறுதேரே.

வையம் யாவையும் வகுக்கவுங் காக்கவு
மறைக்கவுந் தாம்பெற்ற
வசிசை* வானவர் மூவருந் தேவரு-
மற்றவர் தங்கோவு

மையுமாகியிப் பொருளென வறியொணு
வப்பொரு ளடியேனை
யாண்டு கொண்டன ளிறந்தபே ரின்பமா
மமிர்தசா கரந்தன்னைக்
கையி னமல கக்கனி யென்னவே
கண்டுகண் களிகூரக்
காசி னிக்கணோர் தேசிக னகியெக்
கடவுளுந் தொழுதேத்துந்
செய்ய தாமரைப் பதந்தருஞ் சேவக
னருட்டுக சிறுதேரே
சிவப்பிர காசனென் பவப்பிணி மருந்துவ
னருட்டுக சிறுதேரே.　　　　　　　　　　　　　　(உ)

வேறு.

நாவிற் படாதசுவை செவியிற் படாதவொலி
நண்ணப் படாதபரிச
நயனப் படாதவொளி நாசிப்ப டாதமண
நாவிற் படாதகரணம்
பூவிற் படாதகணம் வெளியிற் படாதபுரை
வளியிற் படாதவொலிதோய்
புனலிற் படாதநெகிழ் வனலிற் படாதநெரு
வினனிற் படாதவொளிவந்
தோவிற் படாதுபடி மதியிற் படாதகுளி
ருணர்விற் படாதவுணர்வா

யொன்றிற் படாதொருவ ருள்ளப் படாதுமனை
யோதப் படாமலொளிருந்
தேவிற் படாதமிகு தேவர்க்கெ லாமிறைவ
சிறுதே ருருட்டியருளே
தேனித்து நான்மகிழ வாழ்வித்த மாமுனிவ
சிறுதே ருருட்டியருளே.

வேறு.

மண்ணாத ரத்தினரர் மாருத வாழ்வுலகின்
மட்கப்ப டாதவொளிநீர்
வாடப்ப டாதமலர் வீடப்ப டாதநிதி
கோடுற்ற யாழினிசையிற்
பண்ணாத வோசையொரு பாவிற்ப டாதவியல்
கர்விற்ப டாதகனியோர்
பாகத்த டாதநறவு போகத்து றாவினிமை
மோகித்த பண்டை யிமையோ
ருண்ணாத பேரமுத மொளியாத பேரொளி
யோதாத வேதமொழியா
யுரையற்ற செம்பொனொரு கறையற்ற பேருரு
யுருகுற்ற பத்திவலையிற்
றிண்ணாக வந்துவளை யண்ணாவி ருக்குமிறை
சிறுதே ருருட்டியருளே
தேவாதி தேவர்தொழு தேவாமு தற்கடவுள்
சிறுதே ருருட்டியருளே.

வேறு.

வரைசானு மார்கரியின் முரசார வாரமிக
வருவார்ப தத்தைமதியே
மடவார்க ளாயிரவர் நடனாட வானவர்கள்
மணிவாயில் கொற்றமகவா
னரசாளு மாசையில மயனார ணாதிபத
மணிமாதி சித்தியணுகே
மறிவாள ரேனுநின தடியார லாதவரை
யணுவா நினைத்துமறியே
முரையார வாரமிடு மூலகாய தாதிகல
ருடனான தர்க்கமுரையே
முனதாளி னோதுபுக ழுரையாடு தோறுமுரா
னுருகாவி யக்கவிருகண்
டிரையார வாரமிட வுரையாடு மர்முனிவ
சிறுதே ருருட்டியருளே
திருவாதவூர்முனிவர் திருவாசகாபரண
சிறுதே ருருட்டியருளே. (௫)

சிறுதேர்ப்பருவ முற்றிற்று. ஆக—௬௧.

# சிறுகீரைப்பருவம்.

வேறு.

நீயருவெ னும்பத மதற்கெளிய நேதி
நேதியென வோதிநிலை நின்றருண னாதே
போயுமவ ரங்கையுறு மாமலக மாக்க
வோடிவரு வீர்கமென வறைகசிறு பறையே
மாயுமுட லைந்துபுல னுற்கரண மிமை
வாயுவுயிர் மாயைபய மற்றுமுள வெல்லா
மாயினறி வாருமென வறைகசிறு பறையே
யருளியெனை யாண்டவிறை யறைகசிறு பறையே

புண்டருமு டம்பினள வாயுதிய வுற்றுய்
போருதுயர் நீரநின் பொலன்னடிபொ ருந்தத்
தொண்டர்களைம் வருகவென வறைகசிறு பறை
சொருப! தூய சகலவென வறைகசிறு பறையே
புண்டரிக நயனனறி வரியதினை தடியிற்
புவியினவ ரறியும்வகை புகுந்தபடி யெல்லா
மண்டருல கமுமறிய வறைகசிறு பறையே
யருளியெனை யாண்டவிறை யறைகசிறு பறையே
சடைபுனைய நீறணிய வென்பதுவும் வேண்டா
தண்டியுடை செந்துகிலின் முண்டியென வேண்டா
வுண்டபுனைய வுடைகளைய வென்பதுவும் வேண்டா
வுடம்புதனின் மற்றுமுறு மெக்குறியும் வேண்டா
விடையிலொரு பொருளுமுள தன்றியுமி லெலா

வின்பவறி வானவடி விவ்விடலொ டிங்கே
யடையுமவர் வருகவென வறைகசிறு பறையே
யருளினெனை யாண்டவிறை யறைகசிறு பறையே. (௪

வேறு.

விக்கிவிடு மளவே விட்டதெனு முயிர்வா
ழக்கிவெளி புவிகா லப்புடல மதுநான்
றுக்கிசுகி யெனுமா துக்கவிரு வினையாங்
கொக்கிவிடு திறவே கொட்டுசிறு பறையே (௫).
நீடுதிரு நினையே னித்தபத நினையேன்
வீடுபுக நினையேன் மிக்குளது நினையேன்
பாடியுன தடியேன் பத்தியுட னுருகக்
கூடவருள் சொருபா கொட்டுசிறு பறையே. (௬)

சிறுபறைப்பருவ முற்றிற்று.

ஆக பருவம் ௯-க்கு-கவி-௬௬.

வெண்பா.

காப்பு வருகைதால் சப்பாணி செங்கீரை
மூப்பிலார் முத்த முளைமதியங்-கூப்பிய
சிற்றில் சிறுதேர்ச் சிறுபறை யென்றிவை
பத்துத் துறைப்பிள்ளைப் பாட்டு.

பிள்ளைத்திருநாமம் முற்றிற்று.

செங்கீரைப்பருவவிபரம்.

ஒருகாலை மடக்கி ஒரு காலை நீட்டி இருகைகளையும் நிலத்திலூன்றிக்கொண்டு தலைநிமிர்ந்து முகமசையவாடுதல்.

மூன்றாவது.

# வெண்பாவந்தாதி.

( தத்துவவிளக்கம். )

போதா லயத்தோனும் புள்ளூர் கொடியோனு
மேதாதி யேதந்த மென்றறியார்—நாதா!
சொருபானந் தாகடையேன் றுண்டுகந்து செய்
விருபாதந் தந்தவா றென்.

தந்தா யெனவேத்தித் தன்னைத் தாவல்ல
சிந்தா மணியென் சிரமிசையே—தந்தபத
நண்ணுங்க ளெல்லீரு மப்பொழுதே மெய்ஞ்ஞான
கண்ணுங்க ளங்கைக் கனி.

கனியே! தெளிதேனே! கன்னலே! பாலே!
முனியே! தனியேன் மொழிதோ—றினியாயென்
றப்பொழுதைக் கப்பொழுது மாமயிர்க்கை நெஞ்சே
யெப்பொழுது மெப்பொழுது மேத்து.

ஏத்தாய் மடநெஞ்சே யெல்லா வினையுமறப்
பார்த்தாள வல்ல பரஞ்சுடரை—பார்த்தவுடற்
புண்ணாலே பட்டதுயர் போகும்போ தாருமவன்
கண்ணாலே காணவாங் காண்.

காணும் பொருளாகிக் கண்ணாகிக் காண்பவனா
யாணு மலியு மரிவையுமாய்த்—தாணுவுமா
யல்லவா மென்பார்க் கதுவதுவாய் நின்றானைச்
சொல்லாட வந்தான் றுணிந்து. (௫)

துணியுடையா ரோட்ட சோறுடையார் சோம்பே
பணியுடையார் பல்லோர் பழிப்பா—மணியுடையா
ரெம்மை யுடையா ரிருகமலத் தாளுடையார்
தம்மை யுடையார் தமர். (௬)

தமக்குருவ மேதென்று தாமுணரார் காயச்
சுமைக்குருவைச் சோறுண்ணித் துன்புற்—றிமைப்பொழுது
மாவநல னின்றி யழிவரே யந்தோநந்
தேவை வணங்கார் சிலர். (எ)

சிலரர னேயென்க சிலரயன் மாலென்க
சிலர்பரமஞ் சத்தி சிவமென்க—சிலர்பரம
மிங்குருவே யென்க வருவென்க வெவ்வுருவு
மெங்குருவே யென்றறிந்தோம் யாம். (அ)

யாமா ரறிய விசையு மிசையாவுங்
கோமா னிவையறிந்து கொள்ளுவா—னோமோநீ
வல்லவா நெஞ்சே மலரடிதந் தாண்டவரு
ணல்லவா சொல்லவா நாம். (௯)

# வெண்பா வந்தாதி.

நாமம் புகழ்ந்துரையாய் நன்னெஞ்சே நாய்விருப்ப
தாமம் புனைகுழலார் சார்ந்துடல்—ஏம
மிடும்போதென் செய்வா யிறையடியார் சென்னி
நடும்போதை நாவா னயந்து.

நயந்தீர்சிற் றின்பமே நல்லன்பா னென்னைப்
பயந்தீர வாளும் பரனை—யயர்ந்திருக்கு
நெஞ்சினீர்! வாரீர் நிகழ்த்தீ ரெமக்குறியத்
துஞ்சினீர் போங்காற் றுணை.

காற்றை நிறுத்தவர்ங் கல்வளைக்க வாகந்து
சீற்றமன னென்செயலாந் தீரவதை—மாற்றித்தா
னேவே யளித்தபிரா னுண்மை யிருந்தவா
னாவே! மறவா நவில்.

நவிலாதே வேறொன்று நாவன்ற னாமந்
தவிராதே யெப்பொழுதுஞ் சாற்று—பவநோவு
விள்ளவடி யேற்கார்க வேதியவே டங்கொண்டாற்
குள்ளவரு ளுள்ளமே யுள்ளு.

உள்ளத் திருவுரு முள்ள பொருளெல்லாந்
தெள்ளத் தெளிந்து சிவமாகு—முள்ள
பொருணைக்கு மெக்கலையும் பூங்கழறந் தாண்டா
னருணைக்கி னற்பார்த்த வன்று.

அன்றுமென் றேதே னறுசமய வாதிகளோ
டொன்று வுணரே னுலகத்தை—யின்றின்ப
மாருடையா ரென்னொழிய வன்பா லலர்கழுநீர்த்
தாருடையார் தந்தார் தமை. (௰௫)

தமைமாற்ற மொன்றிற் றருவானைக் காயச்
சுமைமாற்ற வேண்டுமெனச் சொல்லா—ரெமையாளிக்
காரார் கழிகாதல் செய்யா ரறிவற்றார்
தூராக் குழியென்றுந் தூர்த்து. (௰௬)

தூர்த்தர் துறவர் தொழும்பர் தொழுகுலத்தோ
ரோத்துடையோ ரில்லோரென் றொன்றில்லை—யார்த்தராய்ச்
சொல்லார் சொருபன்றாள் சூடினார் பீடுடையா
ரல்லாதா ரல்லா தவர். (௰௭)

அல்லாதா ரல்லா தவரா ரவரவர்க
ளெல்லா மெமக்கெம் பிரானவா—ரெல்லாக்
கரணங் கடந்தான் கடையேனைக் கண்டு
சரணங் கடந்தான் றமர். (௰௮)

தமர மிருசமயச் சங்கேதஞ் சாரே
நமரும் பிறரு மெனநாடே—மமருறை
நாடா தரிக்கிலே நீதன் பணியொழிய
வீடா தரிக்கிலேம் வேறு. (௰௯)

## வெண்பா வந்தாதி

வேறொன்று மொன்றென்று மேவினர்க டம்பிற
சீறும் பெருமானஞ் சென்னிமிசை—யேறுங்
கழறுழு மன்புடையார் காதினரோ டேறுங்
கழறுரே தம்மையே கண்டு.

தம்மை யிரந்தாலுந் தாரார்பின் சென்றவரைப்
பொய்ம்மைப் புலவீர் புகழாதே—வம்மின்!
வினைமாற்று மெம்பெருமான் வேண்டியதே நல்
தனைமாற்ற மொன்றிற் றரும்.

தருமணி தாமரை சங்குநின் செங்கை
கருமுகி லென்று கவிக—ளொருமணமு
மியார்பின் செல்வரே யெல்லாந் தருவானை
வாயார வாழ்த்தாதே வந்து.

வந்தெனக்கு நல்குவதே மானுடவே டங்கொண்
னெந்தை பெருமா னிருபதங்க—ளந்தோவிங்
கென்னை நினையாதே யாவர்க்கு மெய்தரிய
தன்னை நினையாதே தான்.

தானந்த மில்லாத தம்பிரான் றானென்னை
யானந்த வெள்ளத் தழுத்தியபி—னூனந்து
துக்க விடன்போலுந் தொல்பிறவிச் சூழலெலாம்
புக்கவிடங் கண்டிலேன் போய்.

போக்கும் வரவுமிலாப் பூரணபோ தப்புரண
மாக்கவெனை நினைந்தே யாரருளான்—மாக்குமறை
வந்தா யெனைத்தேடி மாமறையும் வானவரு
மெந்தா யுனைத்தேட லிங்கு. (உரு)

இங்கோர் குறைவற் றெழின்முனிவ ராயிடினு
மெங்கோனைப் போற்றா ரெமக்கார்தா—னெங்கோ
ளழித்தாண்ட கண்ட னடியார்தங் கூட்ட
மொழித்தன்றோ நாயேற் குறவு. (உசு)

உறவா யிறையடியா ருட்பட் டுலகத்
திறவா ததுமிறப்பு மெண்ணி—மறைகோடி
யொன்றொழிய வில்லையெனு முண்மை யுளத்துணர்ந்தா
லன்றொழியு மிக்குரம்பை யச்சு. (உஎ)

அச்சந் தவிர்த்தா னடியாரி ராதவிட
முச்சங்க மேயெனினு மூடமா—மிச்சிலா
முண்ணு விடமே யமிழ்தேனு முற்றவர்க
ணண்ணு விடமே நரகு. (உஅ)

நரகுஞ் சுவர்க்கமு நானிலனுஞ் சென்று
வரவுந் திரியவும்யான் மாட்டேன்—மருவியெனைக்
கன்னு ருரித்தாண்ட கற்பகத்தி னற்பதத்தை
யுன்னு ருரியா ருற. (உகூ)

# வெண்பா வந்தாதி

உற்ற தவங்க ளொருகோடி யுண்டெனினு
மற்ற தவமிறையை வாழ்த்தாமே—மற்றைத்
துரிதங்க ளோடு மவன்றொண்டர் தொண்டர்
சரிதங்க ளெல்லாந் தவம்.

தவப்பிரகா சங்களெல்லாஞ் சாதித்தார் கிற்கச்
சிவப்பிரகா சா! நினது செய்கை—புவியினுட
னங்குமரை வந்தருளி யப்பொற் பதமளித்தா
யிங்குமரை யன்னேனுக் கின்று.

இன்றடைந்தா ரெய்தா நலனே தடையாதார்
சென்றடைவ தெந்தநலந் தேருங்கால்—பொன்றாத
தேவிற்குந் தேவாஞ் சிவப்பிரகா சன்கமலப்
பூவொக்கும் பொற்றாள் புகழ்ந்து.

புகழுங் குலனும் பொறியின் செறிவு
நிகழு மறிவு நிறைவு—மகிழ்வுதரு
மும்ப ருலகு முயர்முத் தியுமடியேற்
கெம்பெருமா னல்லதுவே றேது.

ஏது மறியே னிவனுற்ற தெம்பெருமான்
பாத மடியேற்குப் பற்றென்று—நாதனே!
யெவ்வுயிர்க்கு மேமமே! யென்று மெழும்வீழும்
லெவ்வுயிர்க்கு நீராய் விழி.

விழித்திருந்து தூங்குவார் மெய்யுள்ளத் துள்ளே
மழித்திருந்த ஞானமுனியே!—யொழிப்பறநீ
பாட்டியருள் கூத்தை யாற்று யருளாலே
நாட்டியருண் மெய்ஞ்ஞானக் கண். (௩௫)

கண்டுற் றுயிர்த்துண்டு கேட்குங் கருவியுமாய்த்
தொண்டுற்ற யானுகிச் சொற்கடந்து—பண்டுற்ற
நீதானே யாய்நிற்றி நின்மலனே! நிற்குணனே!
நாதா! நீ வல்ல நடன். (௩௬)

நடனுடி நானனந்த நாளாக நல்லாய்
நடனு வதுதவிர்க்கை கண்டா-யுடனுகி
யில்லா யருட்சொருபா! மேதினியின் யாவர்க்குங்
கொள்ளாத கோலமெலாங் கொண்டு. (௩௭)

கொண்டாடுஞ் செல்வங் குலனும் பொருடானும்
வண்டார் குழலாரும் வாழ்மனையுங்—விண்டா
கழலளவே யானு லருட்சொருபா! வுந்தன்
கழலளவே யென்றன் கருத்து. (௩௮)

கருதப் படாதநீ கண்காண வந்த
தொருதப்பே கண்டா யுடையாய்—சுருதிக்குஞ்
சொற்ற வரிதாகுந் தாளிணையென் புன்றலைமே
லேற்ற வென்றினைந்தே யிங்கு. (௩௯)

# வெண்பா வந்தாதி.

அடியு முடியு மறிவான் விசும்பும்
படியு மிடந்தும் பறந்து-நெடிய
கருந்தாதை யும்மகனுங் காதலித்தெவ் வொன்றாத்
திருந்தானைக் காணுமா றென்.

என்னிய மானிடரை யேத்துவீ ரின்புலவீர்
தன்னிய வல்லான் சரணிற்க-மன்னும்
பொருளை யுமோர் பொழுதே யருள்வான்
கருணை லயனே கலந்து.

கலந்திலே னுன்னடியார் கண்ணுறுங் கூட்ட
மலந்திலேன் யாக்கைத்தீ வாழ்க்கை-துலைந்திலே
உன்பாதங் காண்பா னுடையாய் கடையானே
னன்பாக யானுனக்கிங் கார்.

ஆரா னுமெய்த வரிய மலர்ப்பாதமென்
றோராதே யுண்மை யுணராதீ-வாராத்
தாமன் றியவென் றலைதந்தான் பாரீர்
பிரமன் றிருவுள்ளப் பாங்கு.

பாங்கா யிருவர் பறவையு மேனமுமாய்த்
தாங்கார மென்ப தறிந்தாயே-யோங்காரத்
தண்ண லுளவா றருளொழிய வாய்மையோமென்
றெண்ண லுளமே யினி.

பாங்கா யிருவர் பறவையு மேனமுமாய்த்
தாங்கார மென்ப தறிந்தாயே—யோங்காரத்
தன்னை ஞானவா றருளொழிய வாய்மையென்
றெண்ண ஞாமே யினி. (௫௪)

இனியார்தம் முள்ளத்தே யெப்பொழுதும் வாழுந்
தனியான தத்துவனார் தாமே—தனியாமென்
னுள்ளங் கரைத்தா ரொழியாப் பெருங்கருணை
வெள்ளங் கரைபுரள விட்டு. (௫௫)

விட்டிடமுந் தொட்டிடமுங் காணு வெறுங்குருட்டுப்
பெட்ட சறுசமயப் பித்தேறித்—தட்டுப்
படாதே பரனவன்றன் பங்கேருகத்தாள்
விடாதே மனமே விளம்பு. (௫௬)

விளம்புகின்ற மாமறையின் மெய்ப்பொருளே வந்தென்
னுளம்புகுந்த சோதி யுருவே—தளர்ந்தனையா
னுன்மாயங் காண்டோறு முன்னடியே யென்னளவும்
பன்மாய நீதவிரப் பார். (௫௭)

பார்க்கினுமாம் பாரா தொழியினுமாம் பண்டைவினை
தீர்க்கினுமாந் தீராமற் செய்யினுமாம்—யார்க்கு

## வெண்பா வந்தாதி.

மறிவரிய பாதமே யன்பாலென் னுள்ளாந்
செறிவது நீ செய்தவா செய்.

செங்மை கரிமை வெளிமை திருமேனி
மைமை பெரிமையென வாழ்விலா - மெய்யமாக
வம்ப ருணரா ருணையடியேன் கண்டுரைய
தெம்பெருமான் யாராகி யான்.

ஆராயு நெஞ்சு மடியேனுங் காலெங்கே
சோர் பிரானுன் றிருவருட்கட் - பாராதீத
நன்றாய ஞாலமாய் ஞானமாய் நாளுமா
யொன்றாகி நின்ற வொளிக்கு.

ஒளியேயென் னுள்ளத்தை யோவா துறுக்குங்
களியே கருத்திறந்து கண்ட - வெளியேயென்
றோராத பேரமுதே யத்தா வடியேற்குத்
தாராத தில்லைநீ தான்.

தானிருக்கும் வண்ணத்தைக் காட்டித்தன் றானிவனை
யானிருக்கும் வண்ண மெனக்களித்த - தானிருக்கு
முன்னரிய தோர்சொரூப முள்ளிருக்க நெஞ்சமே
பென்னரிய தெல்லா மெளிது.

எளிவந்த கோலெடுவா யெல்லாந் துறந்து
களிவந் திலைநினைந்துன் கண்ணீர்—துளிவந்த
தில்லைகாண் சிந்தையுனக் கெங்கேனுங் காணெஞ்சே
யல்லைகா ணாளுடையார்க் கன்பு. (கூங)

அன்பா லொருகா லருட்சொருபா! வென்னிலவன்
றன்பாத மெய்திச் சனனமறு—மின்ப
மதிநமக்கு நல்குங்காண் வாராய் மனமே
யிதுநமக்கு நல்லதுவே றேது. (கூச)

ஏதுசெய்தா லென்றாமென் றேமாக்கு நெஞ்சமே
நீதுசெய்யா தெப்பொழுதுஞ் சிந்தியாய்—போதுசெய்யா
தண்ணலுநம் பால்வருங்கா ணங்கவன்றன் பூங்கழற்கே
நண்ணலு மாங்கா ணமக்கு. (கூரு)

நமக்குடைய நாயகனார் செய்கையென் றெல்லாந்
தெமக்கியைப்ப வாகு மியல்போ-தமக்கன்
படித்தா ரடியா ரடியாரைப் போற்றக்
கொடுத்தா ரெம்மையடிமை கொண்டு. (கூசா)

கொண்டுகொண் டேத்திக் குவலயத்தே நாயேனைத்
தொண்டுகொண் டாண்டவியல் சொல்லியே-கண்டுகொண்
டோவா துருக வுளமே டுரைகடந்த
தேவா! திருவுள்ளஞ் செய். (கூஎ)

செய்யார்மை யுஞ்செயலுஞ் செய்யானைப் பெற்றயான்
செய்யே னுளகாலஞ் செய்வதினி—வையத்
தடியேன் றரமறியா தாண்டென்னைப் பார்த்த
படியே புகழ்வதுவே பார்த்து. (௬௮

பார்த்தா யெனையொழியப் பாரா தொருபார்வை
பேர்த்தாயா னென்னதெனும் பேதைமையைத்—தீர்த்தா
கொடியேன் வருபிறப்பைக் கோவேநீ செய்த
தடியேன் றரமே யருள். (௬௯

அருளே நிறைவடிவே யாரணங்க டேடும்
பொருளேயென் போதத்தே நின்ற—தெருளே
சிவனேநின் பொற்பாதஞ் சேராமல் யான்போ
யவமே கழியாம லாள். (௭௦

ஆளும் படியே யலமாக்கு மென்னெஞ்ச
மீளும் படியே வினையெல்லா—மாள
வுருக்கும் படியே யுடையா னருடா
னிருக்கும் படியே யெனக்கு. (௭௧

எனக்கிருந்த வாறேபோ லெல்லாருங் காண
வுனக்கிருந்தாற் குன்றுவதொன் றுண்டோ—மனக்கவலை
நீத்தாட் கொளவந்த நின்மலநீ யாவரையுங்
கூத்தாட்டு வாயென்றே கூறு. (௭௨

ங் கராணாநீ கூறரிய கொள்கைநீ
ங் கொடிய மயக்குநீ—தேறும்
நீ யானாற் பரனெனநின் பண்பிங்
செய்வார் யாரே யுரை. (௭௩)

க்குந்தோ ருவியைநின் றுன்கருணை வெள்ளங்
க்குந் திறனொழியக் காணேன்-றிரைக்கொண்ட
ரனே ரென்ன வருவிவரு மந்தோகண்
ம்பரனே ருண்டோ வெனக்கு. (௭௪)

ங்குநினை வுன்பதத்தை யெய்துவதே யெந்தாய்!
ங்கு நினைவே துரையாய்-மனத்திறொடு
ற முணரா வடிவாக்க வோவென்னைக்
ற முணவோ குறித்து. (௭௫)

ந்தா யெனையாளக் கோலமாய் வந்தாய்
ந்தாயென் வல்வினைநின் கண்ணேன்—மறுத்தெனது
லைய வன்குரங்கு போலுமனன் போக்கினை
றலையி னின்பதங்க ளிட்டு. (௭௬)

ம் பெருமாற்கி யாதோ விவள்காதன்
ன் றனையாள வாவென் னு—மிட்ட
நீர்த்தா ரென்னுந்தன் கைகழுவா நிற்கு
நீர்த்தா ரைக்கே யணங்கு. (௭௭)

## வெண்பா வந்தாதி

அணங்குற் றெருகோடி யாட லுகந்தாற் கேவிர
னுணங்குற்ற தேவ பொறிப—வணங்குற்ற
நான்கண்டு கொள்ள நடக்கா வழிப்பிரா யுமே
மான்கொண்ட நோய்க்கு மருந்து.

மருந்தாய் நிதியாய் மதியாய்க் கதியாய்ப்
பொருந்துநுகர் போகமாய்ப் போற்று—மருந்தவனைத்
தந்தையாய்த் தாயாய்த் தலைவனுமாய்த் தாடக்கே
னெந்தையாய் நின்ற விறை.

இறைநெஞ் சருளே யெனவிளங்கு மானக்
கறைநெஞ் சறியாதே கண்டேன்—மறையோ னு
மோதரியான் செய்தவிர கொன்றுமைப்ப மாட்டேனே
னேதறியே னென்னுயி ருண்டு.

உண்டோ விலதோ வருவேன் வருவேனென்
றெண்டாறு மற்றிமையோ ரேமாப்பக்—கண்டே
னிடியே னெனவென்னை யாண்டானை யாற்றேன்
முடியேன் முறையோ முறை.

முறையோ தரியேன் முழுதுலகு மோடி
யறையோவமரர்க் கறையோ—மறையோடு
திங்க ளுளத்தொளிக்க தக்கவனோர் தாமேவந்
தெங்க ளுளத்திருந்தா ரென்று.

என்று மொருவர்க் கியல்பின்ன தென்னும்வகை
பொன்று முணர்வரியை யுத்தமனே—யென்றால்வந்
தெய்தவார் வல்லா ரிரங்கா யெனவிரந்து
செய்தவா காணுமை தேர்ந்து. (௮௩)

தேரே னுடையாய் திருமேனி யின்னருமை
பாரே னொருகாலும் பாவியே—னேரேனீ
யாண்டவா சொல்லி யகிலமெலா நின்பாதந்
தீண்டவா தீவினையென் செப்பு. (௮௪)

செப்புற்ற கொங்கை திறத்தென்செய் தாயறியே
னப்புற்ற கண்ணருவி யாருகு—மொப்புற்ற
தேவா திபர்வணங்குந் தேவே சிவனேயென்
றவா விவளான வா. (௮௫)

வானவா நின்பாதம் வைத்தவா நீயேக
ஞானவா வென்னவா வற்றவா—கானில்
வருந்தவா னோர்முனிவர் வல்வினையே னெஞ்சத்
திருந்தவா வென்செய்த வா. (௮௬)

என்செய் பிழையறியே னெங்கோ னெனத்தொழுதேன்
பொன்செய் கலைவீழும் பூண்வீழு—மென்செய்கே
னப்போத மாறு தருவிவரு மந்தோக
ணெப்போதுங் கூடா விமை. (௮௭)

இமைக்குள்ளே நம்பிறவி யெல்லை யிருங்கூற்றைக்
குமைக்குங் குரைகழல்க ளல்கி-நமக்குள்ள
வஞ்சமே கண்டாண்ட மாமணிக்குக் கைம்மாறு
நெஞ்சமே கண்டனையோ நீ.

நீயென்று முண்டாய் நிகழ்வெல்லா மேயாக
வாயன்றி நின்றானென் றாணஞ்சொல்-தூயகனுங்
காமுறவே செய்யா மனமேமற் றல்லதுநீ
காமுறுவ தெல்லாங் கறை

கனவினுந் தேவர் கருதற் கரியா
னனவிலே நாமாக நம்மை-வினவிவந்
தஞ்சேலென் றாண்ட வருட்சே வடியருமை
நெஞ்சே நினைக்கிலை யே நீ.

நீயே யெழுந்தருளி வந்து நெடுங்கால
நாயேன் வருபிறவி நாமமறக்-காயுமத
வாரணமே யெந்தன் வலியேமற் றெப்பொருட்குங்
காரணமே நீயேயென் கண்.

கண்ணென்கோ நாயேன் கருத்தென்கோ காதல்செய்
பண்ணென்கோ தேனென்கோ பாலென்கோ-விண்ணா
டங்கோவே யென்கோ தனிநா யகனென்கோ
வெங்கோவே யென்சொல்கோ யான் (க

யானே யென்னையுடையோ னென்னெஞ்சே நன்னெஞ்சும்
யானே பிறப்பறுக்க வெண்ணினேன்—யானே
பிறந்தேனு மெந்தை பெருமானென் றீமை
மறந்தே புகுந்தான் மனத்து. (சுங)

மனத்துணையே யென்பிறவி மாமருந்தே வாழ்வே
தனித்துணையே சார்வே தவமே—இனைத்துணையு
மாற்றே னுனைப்பிரிந்தே யாராமுதே யாராத
கோற்றேனே யென்செய்கேன் கூறு. (சுச)

கூறு மளவே குருமலர்த்தா ளன்றியே
வேறு முளவா விளங்குமது—ஈறு
மிடையானே யேழ்பிறவி பாறுவது மென்னை
யுடையான் றிருவார்த்தை யொன்று. (சுரு)

ஒன்றோ மனனே யுயர்ந்தோர் திருவுள்ள
மன்றோ வறுதியிட வாருமோ—வின்று
முழங்குந் திருவாய் மொழியொன்றுன் முத்தி
வழங்கும் பெருமான் வரின் (சுசு)

வருமாகி னிப்பிறவி வாய்த்ததே யன்றோ
திருமேனி கண்ணுற் றிளைப்பப்—பெருமாற்குத்
தாமஞ்சாத் தக்கரங்க டாழ்க்கத் தலைசெவிக
ளுமங்கேட் பத்துதிப்ப நா. (சுள)

நாவே நினைப்பிரங்கே ரைந்தார் பிறிதொன்று
கூவேலருள் வடிவு கொண்டருளிட்—டூவே
யிருபாதந் தந்தென் னெஞ்சிற் கொண்ட
சொருபானந் தன்புகழே சொல்.

சொல்ல முடியாவாம் வேதந் தனையடைக்கு
நல்லமுடியான ஞானனார்—வெல்ல
முடியாப் புலனுடைமையன் மூலமா முத்திக்
கடியா னெனநிற்ப தாம்.

ஆமே பிரமனுக்கு மாயனுக்கு நாயனார்
தாமே புகுந்தென் றலையினை மேல்—மாமுறை
வேற்றுதற்கு நோற்றேற் கொழிய வெளிவந்து
போற்றுதற்குச் செம்பொனடிப் போது.

வெண்பாவந்தாதி—முற்றிற்று.

# கலித்துறைப்பந்தாதி.

## தத்துவசாரம்.

சொல்லன சொல்லின் பொருளன சொல்லு மனமுஞ்
செல்ல, வில்லன வுள்ளன பாவையு மவன வென்னுடைய,
கல்லன நெஞ்சுங் கரைப்பன வன்பொ டுரைப்பவர்க்கு,
நல்லன நற்சொரு பானந்தர் பாத நளினங்களே. (௧)

நளினங் கணைபொக்க நற்றவஞ் செய்ய நலன்மருவும், புளி
னஞ்செறி தடம் புக்கிதன் றேகணைப் போற்செய்கின்று,
ளளிநந் தமக்களிக் குஞ்சொரு பானந்த னாண்டபிரான், களி
நந்து சேவடி யப்படி யேசெய்யக் கண்டிருந்தே. (௨)

கண்டிருக் குங்கதி நல்கா தொழியினிக் காயந்தன்னைக்,
கொண்டிருக் கும்படி யென்னடி யேன்கு ரவர்வணக்கே,
தொண்டிருக் கும்படி யாண்டவ னேசொரு பானந்தனின்
பண்டிருக் கும்மறி யாப்பர மானபொற் பாதங்களே. (௩)

பாதங்க ளேபர மென்றிருக் கும்பர மர்க்குடம்பு, போதங்க
ளேபர மல்லவெனுங் கோனடி போற்றலின்றி, வாதங்க ளே
பர மென்றிருப் பார்க்கு வரவுபஞ்ச, பூதங்க ளேபரந் தோ
ன்றுத வர்க்கொரு போதினுமே. (௪)

போதி னுடம்பெடுக் குந்நெறி போகுத லந்நெறியாம்
போதி னெடுங்கிப் புகில்விரி கின்றமெய்ப் போதங்கண்ட
போதி னடங்கத் தருந்தம் பிரான்புவி மேனடந்த
போதி னிடங்கொண் டிருப்பதிப் போதம் புனிதமதே (௫)

அறவே தனைப்பட் டழுந்துகின் றேனடி யேனுனை
வுறவே யுனக்கன்றி யார்க்குரைப் பேனினி யாண்
மறவே னெனவென்னை வாழ்வித்த பாதத்தை வந்
பெறவே யருண்மற்று வேண்டே னெனக்குப் பிறி
[தே.

ஒன்றும் பலவு முருவு மருவு முடம்பெடுப்பும்
பொன்றுந் திறனும் புதிதும் பழைதும் பொல்லா
னன்று முதலு நடுவு முடிவுநா னாவிதமா
யென்று மொருபடி யாயிருப் பானிருக் கும்படியே.

இருக்கும் படியிது வாகினெம் மானிப்பொய் வாழ்க்
யொருக்கும் படியொன் றுரைத்தருளா யுதிக் குட
சுருக்கும் பொழுதுமி லாச்சுட ரேசொரு பானந்
றிருக்கு மறுக்கத் திருமேனி சாத்திய தேசிகனே.

தேசிகன் பாதங்கள் சிந்திக்க வேசிந்தை செய்திருக்
வாசிகண் டாலு மறக்குமென் னேயிந்த மாயவாழ்
பாசிகண் டானந்த வாரிகண் டாரப் பருகப்பெறு
நாசிகண் டாலுச் செவிதுவக் கோடு நயந்துநின்றே

நயவா விடயத்து நையுநெஞ் சேநம்மை நன்னெறியே
துயவா தரிக்கி னுரைக்கவுற் றேனுரை யர்டுதொறுப
வியவா வுருகா விழிபனி யாநின்ற மெய்யடியார்
கயவா மணப்பங் கயத்தாளை யேத்துதல் காரியமே.

காரியங் கேட்கிற்செங் கையாழி கண்டிலன் செய்யபச்சை
நாரியின் பாகமு நான்கண்டி லேனென் முகமுமில்லை
வாரியுண் டாவியும் யாக்கையும் வையமு மற்றுமுற்று
மாரியன் காணும் பிறப்பறுத் தானென்னை யாண்டுகொண்
டே. (௰௧)

ஆண்டுகொண் டானு மமரா திபரையு மாக்குந் தன்மை,
பூண்டுகொண் டானும்புரங்கள்சுட் டானும் புவனமுட்ட
நீண்டுகொண் டானுந்தன் னேர்மைகண் டானு நினைந்துரு
கேன், மீண்டுகொண் டாடும் படிவிழித் தானொரு வேதி
யனே. (௰௨)

வேதிய னார்சொரு பானந்தர் மெய்யடி யாரடிக்கீழ்ப், பூதி
யி னாற்பிற விக்கொடு நோய்விட்டுப் போகுமென்றால்,
வாதியர் நாவலங் காட்டி வடிக்கின்ற வார்த்தைகளா,
லூதிய? நாமறி கின்றிலங் காணு முலகத்திலே. (௰௩)

உலகத்தி லேசில கற்றூற் பிறப்பிறப் போவுமென்பார், கல
கத்தி லேநெஞ்சங் கன்றுத வண்ணங் கரதலத்தா, மலகத்
தி னேரிந்த வையமெல் லாமுண்ட வண்ணமெம்பா, வில
கத்தன் னேர்மலர்ப் பாதந்தந் தானுக்கிங் கென்செய்வனே.
(௰௪)

வனனே மருவினென் வார்குழல் வாணகை மான்விழியார்
கனனே மருவினென் னென்செய்வ தோதம்பி ரானைத்தன்

கண், மனனே மருவி யிருக்கவைப் பானை வணங்கியவ, வின
னே மருவ விருப்பமுண் டாகி னிதயத்திலே. (௰௫)

இதயா லயத்தி னிருப்பா ரறிய விரந்துருகிப்,
பதையா திருப்பதென் பாவிநெஞ் சேபர னாருளாற்,
சிதையா தொழிபிற் சிறுகாய் விடுமிச் சிலைசெயக்,
கதையான் மனக்கணக் காய்விடு மோவிக் கடும்பிறப்பே. ()

பிறந்தும் பிறவாத பெம்மானெனைச்செய்த பெற்றிதன்னை,
மறந்து மறவா வகையளித் தானின்ப வானுலகிற், சிறந்தே
னரகிற் செறிந்தேன்பல் லூழிகள் சென்றுநின்றே, பிறந்
தேனினன் செய்தே னெனக்கின்ப துன்ப மினியில்லையே ()

இல்லாத வொன்றை யுளதா நினைந்திங்ங னேசுழியும்,
பொல்லாத வென்னைப் பொருளா நினைந்திப பொறிகுலைக்க
வல்லானை வாக்கு மனனு மொன்றாகி வழுத்தினர்க்கு, நல்லா
னை யேத்துவன் யானின் றெனக்கே நகைவருமே. (௰௮)

வருமா தரவறி வாநெறி வான்வலிந் தாண்டுகொண்ட,
பெருமானை யல்லது பேசுவ னோபிற வாதவனை, யொருமா
னுடங்கொண் டுருகாத வென்னை யுருக்கித் தன்னைத்; தருமா
று வந்தசெந் தாமரைத் தாளென் றலைவைக்கவே. (௰௯)

வைக்கப் பழவினை மாண்டறும் ஞான மயவடிவாம், பொக்
கப்பிறவியும் போய்விடு மிந்தப்புவனத்துளீர், துக்கப் பட

வகைசொல்லுகின் றேன்பொரு பானந்தர்தஞ், செக்கர்ப்
பதுமத்தை வென்றபொற் பாதஞ் சிரத்தெடுத்தே. (௨௰)

எடுத்தாய் வினைக்கட லின்றென்னை முன்னை யெழுபிறப்புங்
கெடுத்தாய் கெடாத பதமளித் தாய்கிளை ருர்ப்புலன்கட், டடுத்
தாய் தடுக்கத் தடுக்கரி தாதலை யின்னமென்னைப், படுத்தா
வகையுன் னடிப்படுத் தாயெம் பரம்பரனே. (௨௧)

பரம்பர விடயக் கொர்றம்பதைத யாவித யத்தினின்னை,
நிரம்ப கவரொத்து நில்லாத வண்ண நிரந்தரமென்
சிரம்பாதம் வைத்துன் றிருமேனி யைக்கண்டிருக்கக்காய்
வரம்பாச வேரறுத் தாயடி யேனுக்கு மற்றில்லையே. (௨௨)

மற்றிலைப் பற்றென்று வாழ்வித்த நாதன் மலரடியைப்
பற்றிலை மற்றொன்றைப் பற்று தொழிந்திலை பற்றியொன்று
ம், பெற்றிலை யாயினும் பேய்த்தேரை நீரெனும் பின்றொ
டர்ச்சி, யற்றிலை யென்செய்கின் றாய்நெஞ்ச மேயழிந் தற்
றனையே, (௨௩)

அற்றார் தமக்கன்பு செய்வா ரருட்சொரு பானந்தரூர்
நற்றா யினுநல்கி நற்றா ளிணைதந்து நாடரிய
வற்றாத வானந்த வாரியுள் ளேநம்மை வைக்கநெஞ்சே
பெற்றாலு மொன்றைப் பெறுதாரையொக்குநின் பெற்றி
களே. (௨௪)

நின்பெற்றி தன்னை நினைக்கவுண் டோநெஞ்ச மேநிறையப்,
பொன்பெற்று வைத்துப் பொதிந்துகொள் ளாய்புன் குரம்
பையிலே, தன்பெற்றி தன்னைத் தருந்தம்பி ரான்வந்து சார்
ந்திருக்க, வென்பெற்று நீயிந்தி யஞ்சொன்ன வாசெய்தி
லைக்கின்றதே. (உரு)

இனையேன் பிறந்திறந் திந்திப் பந்தனைத் தொந்தனைப்பட்
டனையே னினக்கன்றி யன்புசெய் யேனுகி லாண்டத்துக்கு
முனையே முதலு முடிவுமி லாவின்ப மூழ்கியெனைத்
தினையே யெனச்செய் சிவப்பிர காசச் செழுஞ்சுடரே. (உசு

செழுமலர்ச் சேவடி சேர்த்தகி லேனன்பிற் சேர்த்தினைக்
கெழுமியும் யானறி யேனன்பர் நீதிகள் கேட்டுமிலேன்
புழுமல யாக்கை பொறேனுடை யாயென்றுன் பொன்னடி
க்கே, யழுமது வன்றி யறிகின்றிலே னென்னை யாண்ட
வனே. (உஎ)

ஆண்டவ னிக்கரு ளாசல்வந்த வாறு மவனடிக
ளண்டவென் னெஞ்சு திரிந்தற்ற வாறுஞ்செவ்வாய்மலர
நீண்ட வனந்தம் பிறப்பற்ற வாறுநே ரேயறிந்து
மீண்டவ னென்று நினையா திருப்பதென் வெவ்வினையே. ()

வினைவேறு சொல்லுப வேறுமென் னெஞ்சத்தை மீட்டெம்
பி, னென்னைவேற்று செய்தனை பித்தையு மென்னையும் யானி

ஊயா, நினைவே நினைவிந்து நின்னடிக் கேதிலே கொள்ளத் தந்த, பினைவேறு நானறி யேனெம்பி ரானன்றிப் பேசு தற்கே. (உக)

பேசுதற் காவன வோதுதற் கார்பிறப் போடிறப்பைக்
கூசுதற் காரிக் குவலயத் தாருட் குலவலக்கொண்
டேசுதற் கார்பா ரீசனுக் காளுற்ற யாரென் றென்மேற்
பூசுதற் காயவன் பொன்மலர்ப் பாதப் பொடிபொழிந்தே. ()

ஒழிந்தன வேறொன்று காண்கின்றி லேனுண்டு போல முன்னங், கழிந்தன வாகின்ற காயமுஞ் சீவனுங் காட்சி யெல்லா, மழிந்தபோய்ம் மாயையு மைந்தா மவத்தைக ளு ம்மறிவா, மொழிந்தவன் பாத முளரியம் போதென்கண் முன்னிற்பதே. (௬க)

நிற்பன வாயு நடப்பன வாயு நிகழுநின்னைச்
சொற்பன மாமென்று சொல்லுற் றேன்சொல்ல லாவ துளக், கற்பனை யாவுங் கடந்தாய் திறத்தொன்றைக் காண் கின்றிலே,னற்பன வா!வறி யேனின்று நீசெய்தநாடகமே,

நாடக மாய்முடிந் தற்றது போனம்மை யாளுடையா
னாடக மார்கழற் கன்புற்ற வாறு மழுகுபுழுக்
கூடக மாக்குறித் திதற் காகக் குயின்மொழியார்
மாடக மாள வருந்துமென் னேயிந்த வன்மனனே. (௬௬)

பொன்னரும் பாதமென் புன்றலை மேல்வைத் துப்புன் குரம்
பைப், பின்னரும் பாமற் பிரித்தனை யேபிறி தற்றிருக்கப்
பின்னரும் பாவம் பிறிதுள வோபெரு மானிரங்கித், துன்
னரும் பாவந் துடைத்தருள் வாய்மெய்த் துறவுதந்தே.(௩௯

துறவின மேத்திலை தொண்டிற் பணிந்திலைத் தொல்கழற்கே
யுறவி னெடுத்தொரு மாமல ரிட்டிலை யுள்புகுந்தென்
பிறவி கெடுத்த பெருமானை யைம்புல னாற்பெற்று, மறவி
கொடுத்தநெஞ் சேயென்செய் தாயென்னை மாயத்திலே.(௪௰

மாயத்தி லேயெனை வைக்கினும் வையொரு மாசுமிலாத்
தேயத்தி லேயருள் செய்கினுஞ் செய்யின்பச் சேவடியைக்
காயத்தி லேகண்டு கொள்ளென் றுதந்தவென் கற்பகமே!
நேயத்தி லேயென்னை நீங்காத வண்ணா நினைந்தருளே.(௪௧)

அருளே! யமையாத வானந்த வெள்ள மளித்தருளுந்
தெருளே! மதுரச் செழுங்கனி யே! சிந்தைக் கப்புறமாம்
பொருளே! புகல வரியவ னே! புக ழார்மனத்து
மருளே! மறையவ னே!மலர்த் தாள்மற வாமனனே.(௪௨)

மனனே முதல்வரு மிந்திரி யப்பகை மாய்த்தடியா
ரினனே யெனைவைத்த வின்னமிர் தே!யிலங் குஞ்சுடர்ச்சிற்
கனனே! கருதரு காட்சிய னே! கடை யேற்கிருந்த
தனனே! தரிக்கின் றிலேன்றலை வா!சரண் டந்தருளே.(௪௩)

கொட்டாவி கொண்டனர் விட்டா ருயிரென்று கூடநின்று
நட்டார்கள் சுட்டு நடக்கும் வகையிது கண்டு கண்டு [பார்க்
மொட்டாகெ னெஞ்ச மொருகா லிதென்னொன் றுணரவும்
கெட்டா தவனென்னை யாளுடை யானரு ளில்லவர்க்கே. (௪௯

இல்லாத தில்லை யெனக்கினி யாவரின் கென்னை யொப்பார்
நல்லா னிகக்கொரு மாறுட னாகியிந் நானிலத்தே
யெல்லாரு நிற்கவென் புன்றலை மேலிரு பாதம்வைத்துக்
கல்லா மனமென் கனியாகும் வண்ணங் கரைத்தனனே. ௫௰

கரையே னெனைவந்து நீசெய்த வாறது கண்டுகண்டே
யுரையே னுருகிநின் றேலுமி டேனுடை யாயடியேன்
றிரையே மருவு கடலென வேங்கிச் சிலிர்த்தலறேன்
விரையேன் றொழுவிங்ங னேயெளி தோவென்றன் வெவ்
வினையே. (௫௧)

வினையே னையும்பொரு ளென்றிந்த மேதினி வந்தநன்மை
நினையே னெனைநாகண் ணீர்சொரி யேனெடு மாலொடு
புனையேன் மகிழ்ந்துனைப் போற்றிலேன் புவி தன்னினெ
ன்னே, மனையேன் றிறத்திங்ங னெவ்வாறு கண்டிவந்
தாண்டதுவே. (௫௨)

ஆண்டவ னே! நின் னடியிணை தந்தபின் னைவகையா
மீண்ட வினைக ளுலகங்கள் காலங்க ளெல்லினைசூ

தீ, புலா யிருக்க வவமே யுழன்றெங்க ளூர்தமர்க்கிங்
கயலா யிருப்பதென் னேகெடு வீர்நின் றயர்ந்துகொண்டே. (

கொண்டாடி முன்வந்த கோள்களும் வீடுங் குடிப்பிறப்பும்
வண்டார் குழன்மட மாதரும் வாழ்வும் வலிந்துவந்து
தண்டாத வின்பந் தமியேனை யாட்கொண்டு தந்தவரைக்
கண்டா லவைமுழு தும்மெங்ஙனேவல்ல கைவிடவே. (௬௪

கைப்ப தொழுவது மன்றியென் னெஞ்சுங் கனியும்வண்ண
மைய திருவுள்ள மாயரு ளாயறி யாதமுன்னைப்
பொய்யே யதுயினைப் போனது வாகப் புகுந்துநின்று
மெய்யே யினியடி யேனிது வேநின்னை வேண்டுவனே. (௬௫

வேண்டிய வாசெய் தியாமிங்ங னேவினை யாடவென்றே
யாண்டிடு நாதரை யாரென் றுரைப்பி னருட்படையா
னீண்டிய மாயங் கெடுத்தெனை முன்னை யியல்புதந்து
தூண்டிய காரணச் சோதியருட்சொரு பானந்தரே. (௬௬)

சொரூபா வெனவுமென் றேழா வெனவுந் துளக்கமிலா
நிருபா நிகவென்று நின்றே யாற்றி நெடிதுழைந்தே
யுருகா வுவவவ வவன்புக ழாமுண்மை வெள்ளமுள்ளும்
பருகா தொழியினுன் டோபவ நாச முறும்பரிசே. (௬௭)

உறவே யலமந் துழல்கின்ற யானுண்மை கண்டுகொண்ட
திறவே மென் முன்வந்த தேசிக னேநின் னருளின்கின்ற

நறவே நவையறு மன்பர்தம் பால்வரு நல்லமிர்தே
மறவே னினையென்னை வாளானினிச்சிலர் வாட்டினுமே. சுஅ

வாடேன் மகிழேன் மனமுத லாம்புலன் றன்வழியே
யோடே னொருகா லுளந்தள ரேனினை யன்றி யொன்றுந்
தேடேன் சிறந்தநின் சீரடி யார்திருப் பாதமல்லாற்
கூடே னினிக்குறை வாவெனக் கேதுங் குறையில்லையே (சுகூ).

இல்லையுண் டென்னு மிரண்டுமல் லாதவனின்றென்பொல்
லாச், சொல்லையுங் கொண்ட சுகசொரு பானந்தன் றாய்
மறைக, ளெல்லைகண் டோதற் கரிதா மிறைபுக ழேத்து
நெஞ்சே, வல்லைகண் டாயிங் கிதற்கென்ன மாதவம் வாய்த்
ததுவே. (எ0).

வாயார நின்று மலரடி வாழ்த்துவன் வண்ணமிலா
மாயா குணமொன்று மில்லா வெனவைவன் மன்னுமன்பிற்
றூயாகி வந்தென் றலைமிசைத் தாணல்கி முன்னைமறை
யாயா வறிவளித் திங்கென்னை யாட்கொண்ட வத்தனையே. (எக

அத்தனை யாதியை யேதுவின் றிப்புருந் தாண்டுகொண்ட
பித்தனைப் பத்தர் பிணிமருந் தைப்பிற விப்பகையை
நித்தனை யெத்தனை யும்மறி யானை நினைநெஞ்சமே
கத்தனைத் தும்மொழித் திட்டினு மேலுள்ள காலங்களே. எஉ

காலமென் கோகடல் ஞாலமென் கோகருத் தின்னதென்கோ
வாலமுண் டான்மற்றை யாயமென் கோவறிந் தாயறிந்த
கோலமென் கோவருட் கொண்டலென் கோகுறை யாநிறை
வாநந், சீலமென் கோசம்ப னேவந்த தேசிகச் சிந்த
னையே. (௧௩)

சிந்தா குலங்களைச் சேதித்து மாறுத செல்வத்தந்த
வெந்தா யினிநின்னை யானென் னியம்ப னெழுந்தருளி
வந்தாய் பரிந்தொரு வார்த்தைசொன் னாயுன் மலரடியா
மந்தா மரையளித் தாயளித் தாயென் னயர்வழித்தே. (௧௪)

அழிந்தன வையைந்து மற்றன வாசைக ளெல்லாமுடன்
கழிந்தன காரண காரிய முற்றுங் கருத்துடனே
யொழிந்தன மாயை யுலகத் தியற்கைக ளுத்தமனா
மொழிந்தனர் முத்தி யிதற்கென்ன காரண முன்னு
ளதே. (௧௫)

முன்னே தொடங்கி வருகின்ற மாயப் பிறவிமுற்றுங்
கொன்னே கழித்து விடுகின்ற கண்டு மகக்குறித்த
வன்னே யெனவந் தடியினை தந்தெனை யாண்டுகொண்ட
மன்னே யினியுந்தன் வார்த்தைய லாலில்லை மாற்றங்களே.

மாற்றங் களுமன மும்வினை யாவையு மற்றதவான்
காற்றங்கி நீர்நில முற்று மவற்றுட் கலந்துநின்ற

நாற்றஞ் சுவையொளி யூறோசை யுணர்ணு மிவ்வுலகிற்
றோற்றங் களுஞ்சொரு பானந்த நாதர் சுடர்வடிவே. (எஎ)

வடிவேது மின்றிய மாயவ னேதொல்லை மாமறையின்
முடிவே! முடியா முழுப்பொரு ளேமுத்தையொத்தநகைக்
கொடியே ரிடையவ டங்குபங் கா! வெங்கள் கொற்றவனே
யடியே னினைப்பா வும்படி யேதென் றறிகிலனே. (எஅ)

இலனென் றினிச்சென் றிரக்கின் றிலனிங் கியாவரையுங்
குலனென்று கோத்திர சாத்திரக் கத்துகள் கூறகிலே
னலன்வந்து மற்றை யறுசம யச்சிலு காயகிலேன்
றலன்வந்த தத்துவ ஞரெம்மை யேயின்று சார்ந்தனரே. ()

சாராம னின்ற வொளிநின்ற வாநிற்கத் தாரணியின்
வாராது வந்தவர் போல்வந்த தெங்ஙன் மனனுங்கண்ணு
நீரா வுருகு நினைதொறு மிங்கிது நின்மலனே
யாராத வின்னமிர் தேயறி யேனின் னருள்வகையே. (அ0)

வகையான பல்பிற விக்கடன் மாய்த்து வருமவற்றைத்
தகையா வெனைத்தனி தாங்குதற் கேயருட் சட்டைசாத்தி
மிகையா வருகலி வென்றிடு வேதிய ராகுதியின்
புகையான் மகிழ்தர ணிக்கெம் பிரானின் றுபோந்ததுவே.

போதான கொண்டுமன் பொன்னடி நண்ணு புலன்கடந்த
நாதா! வெனநின்னை நாக்கமும் பப்புக ணண்ணுமின்புர்க்

# கலித்துறை யந்தாதி

கர்தார மேயென் றரற்று நெஞ்சே யது கானமக்குப்
பேதாதி பேதப் பிணிதீர் மருந்து பெருகவுமே. (அஉ)

பெருகா சிறுகா பிறழா பிரியா பெயர்த்துயரா
வொருகா லொழியா வழியாத வுண்மை புகுந்துகொண்டு
பருகா வருகா பழியா விழியா பணிசொரியா
வுருகா மகிழ்பவர் காற்பொடி யேதுயர்க் குண்மருந்தே. ()

உண்மைய னேயென துள்ளம் வளர்ந்தன தாக்கவல்ல
திண்மைய னேசெய்யுஞ் செய்கையெல் லாஞ்சிவ மாக்குவி
த்த, வொண்மைய னேயொன் றறியா வெனக்குவந் துன்
னைத்தந்த, வண்மைய னேநின்னை வாழ்த்தா தவர்நிற்பர்
மாயத்திலே. (அச)

மாயாக் கருணைப் பெருவெள்ள மேமதி யாதவர்க்குச்
சேயா யமுதச் செழுஞ்சுட ரேநின்றன் செய்கையெலாம்
வாயார வோத வறியாது வானமு மண்மிசையோன்
றாயாத யாண்டு வேயெங்ஙன் வாழ்த்த வமைந்தனையே. ()

அண்மையு மினிமுன்னை யாசையெல் லாமிவ் வவனியுந்தே
யெண்மையும் பணிகொண் டுளனே புகுந்தவ ரிங்ஙனெம்
மைச், சுமையும் விழிகொண்டு தம்மேனி செய்த தலைவர்
தந்தார், இனிமையுங் கொள்ளின்றிக் கண்டே யிருக்கை யினியு
ளதே.
(அரு)

தேவாதி தேவர் திகைப்பவென் சிந்தைவந் தென்சிறிய
பாவான் மகிழும் பரம்பர னேபத்தர் கூட்டத்தொடே
யோவாது வைத்த லொழித்தல் குரம்பையை யொன்றருள்
வா, யாவா வெனவளித் தற்கன்பர் பால்வரு மாதியனே. ()

ஆதிய னேநின் னளவிது வென்ன வறிவரிதா
நீதிய னேநில நீரெரி காலொடு வானமதாஞ்
சோதிய னேசொரு பானந்த நாத சுருதியெல்லா
மோதிய நேர்மை கடந்தவுன் பாதமென் னுள்ளத்ததே. ()

உள்ளங் கரைவித் தொழியா வுணர்வா முலப்பிலின்ப
வெள்ளந் தனைத்தந்த வேதிய னேநின்றன் மெய்யடியார்
தெள்ளென்ற சிந்தையின் வீற்றிருக் குந்திருப் பாதந்தந்து
கள்ளம் புகுநெஞ்ச னுமடி யேனையுங் காத்தருளே. (அக)

காக்கிலெ னென்னைக் கடைக்கணி யாவினிக் கைவிடினென்
றாக்கற நின்றவெ றுந்தனி யேநின் சரணிரண்டு
நீக்கவொ ணாதுகண் டாய்நிம லாவென்ற னெஞ்சினின்று
ம், போக்கதிலாய்வர வின்றிநின் றுய்பரி பூரணனே. (கூடு)

பூரண னேயுல கெல்லாம் படைத்துப் புரந்தழிக்குங்
காரண னேகம லாசனன் வானவர் கண்ணுதலோ
ஞாரண னேத முறநடு வேயென்னை நாடிவரு
மாரண னேநின்னை யானக லாவண் பணித்தருளே. (கூக

அருளை யருளே வடிவுகொண் டிந்த வவனியிலே
மருளைவடிவாகு மென்னைவந் தாண்டதென் வஞ்சநெஞ்ச
விருளை வெளியா வெறிக்கச்செய் தாயெப் பொருள்களுமாம், பொருளை பொருளே புழுவார் குரம்பையைப்
போக்குதலே. (கஉ)

போக்குதல் பொல்லா வுடம்பையல் லாதைம் புலநெறியை
நீக்குத னெஞ்சி னினைத்தடுவ லாநீ நினைத்ததுவே
யாக்குதன் மெய்ச்சொரு பானந்த நாத வருள்விழியா
னோக்குதல்செய்கைகண் டாயடியேன்றன்னை நோக்குதலே.

நோக்குகண் டாயென்று நுண்டுளி சோரக்க ணின்றுசொல்லும், வாக்குகண் டான்மறுப் பான்வல்லனோவன் பிறப்பை
நேரே, போக்குகண் டார்பொருந் தார்மா ணம்பிறப் பிற்புகுது, மேக்குகண் டான்பரிந் திங்கெனை யாள விசைந்தவனே. (கச)

இசையா னல்லென்னை யர்ளுடை யானிந் தியங்களுட
னசையாத நெஞ்சுகொண் டன்பா னினைந்தழி யும்முடம்பி
னசையான தின்றி நலஞ்செய்வ ராயினற் றுடலையின்
மிசைப்பார வைத்தென்று மெய்யான தன்னை வெளிப்படவே

வெளிபடு மாறு சமயப் பொருள்களு மெய்யுணர்வா
மொளிபடு மாறு பிறப்பிறப் பானது முள்ளந்தெள்ளித்

தெளிபடு மாறுஞ் சிவப்பிர காசன் றிருக்கண்வைக்கிற்
களிபடு மாறுங் கவர்வு மிலாத களிவருமே. (௯௬)

களிவர் வைப்பன கண்ணு வனமண் புனலெரிகால்
வெளிவர வைப்பன மீண்டுமொன் றுவன மெய்யுருகித்
துளிவருங் கண்ணுடைத் தொண்டரைத் துன்பப் பிறவி
யென்னு, மிளிவர வைத்தவிர்ப் பான்மண்ணின் வந்த
விணையடியே. (௯௭)

அடியே னெனவென்னை யாண்டவ னேயம்பு காலெரிவான்
படியே யெனப்பல பேதங்க ளாவுன்னைப் பாவிக்கின்றே
னடியே யினியிந்த நாளென்ன தற்றென்று நீயிருக்கும்
படியே யிருக்கும் படியரு ளாயெம் பரஞ்சுடரே. (௯௮)

பரஞ்சுட ரேசொரு பானந்த நாதவிப் பார்முதலா
மொரைஞ்சுடனேநின் றுழலாத வண்ணமென் னுள்ளுரு
கிக், கரைஞ்சுட னேருறக் கண்ணொளி யேயுறத் தண்ணிய
வென், சிரஞ்சுட ரேதரு சேவடி சேருந் திருக்கண்வைத்
தே. (௯௯)

வைத்தாய் மலரடி வாங்கிக்கொண் டாயென்னை யுன்னைத்தந்த
பித்தா பிறவிப் பிணிமருந் தேபெத்த முத்தியிலாச்
சித்தா சிவப்பிர காசாவென் சிந்தையு ளேசெறிந்துஞ்
சுத்தா தொழுவதல் லாலறி யேனென்று சொல்லுவதே (௱

கலித்துறையந்தாதி-முற்றிற்று.

ஐந்தாவது.

# சின்னப்பூ வெண்பா.

## தத்துவசரிதை.

## தசாங்கம்.

### பேர்.

ஏழு பிறப்பு மகல வெனைவந்து
சூழுஞ் சொருபானந் தச்சுடரே—வாழ்வெலா
மித்தை யெனக்களிப்பார் மென்கமலச் சேவடிக்கே
பித்தை யெனக்களிப்பார் பேர். (க)

அல்லும் பகலு மறியா வகையொன்று
சொல்லுஞ் சொருபானந் தச்சுடரே—புல்லிமையால்
வெற்றியறி தற்கரியா ராங்கவரான் மெய்யாந்தம்
பெற்றியறி தற்கரியார் பேர். (உ)

மன்னு மிதமகங்கண் மாற வடிவெங்குந்
துன்னுஞ் சொருபானந் தச்சுடரே—யென்னையொரு
வாசா திருத்தினான் வாக்கு மனங்காயம்
பேசா திருத்தினான் பேர். (ங)

ஓதி யுணர்பவர்கட் கொன்றுந் தெரியாத
சோதி சொருபானந் தச்சுடரே—வாதிகடந்
தத்தமுக்தி மாற்றவல்லார் தப்புவார் சார்ந்தவரைப்
பெத்தமுத்தி மாற்றவல்லார் பேர் (ச)

எத்தன்மை யுந்தானா வித்தன்மை யென்னவொணாச்
சுத்தன் சொரூபானந் தச்சுடரே—பெத்தியெனை
யேத மறமொழிவா னின்பமளித் தொன்றோடும்
பேத மறமொழிவான் பேர். (௫)

வையம் புனறீ வளிவா னெனநிகழ்ந்துந்
துய்ய சொரூபானந் தச்சுடரே—ஐயமறச்
சீராகந் தத்தன் றிசைமுகனீ சன்றேரும்
பேராகந் தத்தன் பெயர். (௬)

தீய வினை யேன் மனத்தே செறிந்திருந்தும்
தூய சொரூபானந் தச்சுடரே—நாயேனை
வாதைப் பெருமான் மருவாமன் மானுடங்கொள்
பேதைப் பெருமான் பெயர். (௭)

இன்னதெனா தேதன்னை யன்றி யிலதாகச்
சொன்ன சொரூபானந் தச்சுடரே—தன்னடியின்
மெத்தன் பிறப்பிலிதன் வேறா வெனையாண்ட
பித்தன் பிறப்பிலிதன் பேர். (௮)

ஊன்று மடியவர்தம் முள்ளத்தே யுள்ளபடி
தோன்றுஞ் சொரூபானந்தச் சுடரே—யான்றமைந்த
விண்ணா ணலியலார் வேதாகமத்தாரும்
பெண்ணா ணலியலார் பேர். (௯)

ஒன்றும் பலவு முருவு மருவுமாய்த்
துன்றுஞ் சொரூபானந் தச்சுடரே—யென்றும்
பிறவா னிறவான்றன் பேரருளா னன்றிப்
பிறவா னிறவான் பெயர். (௰)

நாடு.

துதிபாடுந் தொண்டர் குதிபாயுங் கண்ணீர்
நதிபாயு மானந்த நாடே—கதியாவி
னாடும் பரம்பரத்தார் நாகத்தார் நாண்மலரார்
நாடும் பரம்பரத்தார் நாடு. (௰௧)

துளிபாய்கண் டொண்டர் தொலையா நறவுண்
டளிபாடு மானந்த நாடே-யொளிவேதத்
தானாகத் திற்கரியா ரென்பார் சமயத்தார்
நானாகத் திற்கரியார் நாடு. (௰௨)

பெரிதாயும் பேரன்பர்க் கன்றிப் பிறர்சேர
வரிதாகு மானந்த நாடே—விரிவேத
ஞான மயமானா னண்ணும லென்னெஞ்சின்
ஞான மயமானா னாடு. (௰௩)

எதுவெதுவர் கக்கொண்டார் யாரேனுங் கொண்ட
வதுவதுவர் மானந்த நாடே-கதியதுவன்
றாமே யெனவல்லார் போலயரா மேயடைய
நாமே யெனவல்லார் நாடு. (௰௪)

# சின்னப்பூ வெண்பா.

அறிவு வடிவா யயர்ந்து மயரா
நறவுதரு மானந்த நாடே—மறவியினு
னோனா தவஞ்செய்தார் நோக்கமிலே னேக்குறவே
ஞானா தவஞ்செய்தார் நாடு. (௰௫)

கனவு நனவுறக்கங் காணுந் துரிய
நனவின்வரு மானந்த நாடே—தனதுகழல்
றாடுநற் கண்டந்தான் றேன்றுமே தான்றேன்ற
நாடுநற் கண்டந்தா னாடு. (௰௬)

உடலா யுயிரா யுணர்வா யொருதா
னடனாடு மானந்த நாடே—யுடனாயு
மூன்பாடு மாசெய்தா ரோரா வெனையாண்டு
நான்பாடு மாசெய்தார் நாடு. (௰௭)

புலனாலும் வேறார் பொருளின்மை கண்டு
நலனாரு மானந்த நாடே—சொலவாலே
யென்னாக வேதந்தா னேத்த வெனத்திகைப்ப
னாண்ணாக வேதந்தா னாடு. (௰௮)

பிறிவா னவையும் பெருங்கண் ணுடையார்க்
கறிவாகு மானந்த நாடே—செறிவார்க்குக்
கேடிலது தாமொழிவார் கேடிலா நிதென்னு
நாடிலது தாமொழிவார் நாடு. (௰௯)

௱.                    # சின்னப்பூ வெண்பா.

நயனுற்ற ஞான நறவுண்டு நல்லோ
ரயர்வுற்ற வானந்த நாடே—யுயர்வுற்ற
வானநாட் டந்தந்தான் மண்மேலென் னுண்மேவ
ஞானநாட் டந்தந்தா னூடு. (உ௰)

உளர்.

அடியா ரடியா ரடியேவல் செய்ய
மடியாத நல்ல மனனே—மிடியரைப்போய்ச்
சங்கந் தருவா னெனுமே தனைப்பெறவோ
ரங்கந் தருவா னகம். (உக)

தன்மை யறிவரிய தம்பிரான் றன்செய்த
நன்மை மறவாத நன்மனனே-யென்மனனு
மாகந் துடைப்பான் வடிவுகொடு வந்தென்ற
னாகந் துடைப்பா னகம். (உஉ)

அல்லாக் கலரை யருவருத்திங் கன்பர்க்கு
நல்லார்க்கு நல்லதா நன்மனனே—யெல்லார்க்கு
நெஞ்சிற் கரியார் கரியார் நிறஞ்செறிந்த
வஞ்சிற் கரியா ரகம். (உ௩)

பிறியா வொர்ழியா பெயரா வுயரா
மறவா நினையா மனனே-பொறிவாயின்
மாந்தா மிதியார் மதிபுகுந்து மாறுவாத்
தாந்தரி மதியார் தலம். (உ௪)

தெண்ணீர்மை தந்தாண்ட செம்பொற் றிருவடிக்கே
யுண்ணீர்மை வந்துருகு மொண்மனனே—கண்ணீர்வந்
தீரஞ்செய் யாதார்பா லில்லா னெழின்மதனம்
போரஞ்செய் யாதான்ற னூர். (௨௫)

பூதமாய்ப் பேதமாய்ப் போதமா யானினைந்த
தேதுமாய் நிற்கு மெழின்மனனே—யேதமா
மாயை தனையனையான் மாட்டும் வகைமூட்டுந்
தீய தனையனையான் சேர்வு. (௨௬)

விடம்போன் றுடம்போடு மேவா வுடம்பைக்
கடம்போலக் காணு மனனே—மடஞ்சேரு
மானம் பலகண்டான் மாதர்க் கெனுமேதர்க்
கூனம் பலகண்டா னூர். (௨௭)

நெக்கருவி கண்சோர நின்மலனூர் கோலங்கண்
டெக்கருவி யும்போ மெழின்மனனே—நக்கனயன்
னைகச்சங் கெடுத்தான் கருதரியான் கைதொழுவா
ரச்சங் கெடுத்தா னகம். (௨௮)

உழறி விடயத்தே யோடாதே மீளக்
கழறுகின்ற கற்றோர் மனனே—குழறியபுன்
வாக்கினா னம்மான் மனத்தா னினைந்தேத்த
வாக்கினா னம்மா னாகம். (௨௯)

வினைக்கு மறிவிற்கும் வேறின்மை கண்டு
நினைப்பயர்வு நீத்த மனனே—தனக்கொன்று
முன்னாக வில்லான் முடிவா கவுமில்லா
னென்னாக வில்லா னிடம். (௧௰)

யாறு.

கழற்பதுமந் தந்த கருணைநினைந் தோவா
தழற்பெருகி யின்பமா மன்பே-யெழிற்சுருதி
யோது மருவினா னென்றிற் றுவக்கின்றி
யேது மருவினான் யாறு. (௧௧)

எதுவெதுவா கக்கொண்டா ரெங்கோ னியல்போ
லதுவதுவா கப்பயக்கு மன்பே—முதுமறைக
ளோது மொழியாதா னொள்ளொளியா னன்றிவே
றேது மொழியாதான் யாறு. (௧௨)

எமையா ளுடையா னெனுந்தோறு முள்ள
மமையா துருகிவரு மன்பே—நமையாண்டு
தாமா தரஞ்செய்தார் தம்மடியே மென்றிருக்க
யாமா தரஞ்செய்தார் யாறு. (௧௩)

பரவு தொழிலுடையார் பரவகத்தி னுண்மை
யருவிசொரி கண்காட்டு மன்பே-மருவுமவர்க்
கொன்று மிருத்துவா ராமே யொழித்தவரை
யென்று மிருத்துவார் யாறு. (௧௪)

பாசந் தெறுவெந்த பங்கயத்தாள் பாராட்டிப்
பேசுந் தொறும்பெருகும் பேரன்பே—யாசையெலா
மாற விருத்தினான் வந்தவா காணவென்னை
யாற விருத்தினான் யாறு. (௧௫)

சகலமு மாய்நின்ற தம்பிரான் றன்போன்
றகல மளப்பரிய வன்பே—யகில
லுலகு முருகினே னொராலே யான
விலகு முருகினான் யாறு. (௧௬)

தொழுகையுந் தூய்மலருந் தோத்திரமுந் தொண்டு
மழுகையுங் கூடிவரு மன்பே—பழகிவரும்
புல்லாந் தரவல்லார் போக்கினார் பொன்னடிநந்
தொல்லாந் தரவல்லார் யாறு. (௧௭)

பொறியிற் சுவையுணரும் புல்லறிவா ளா
றறியப் படாதபே ரன்பே—மறைமுடிவெப்
போதுமோ தத்தந்தா ஞானற் போதங்கொண்
டோதுமோ தத்தந்தான் யாறு. (௧௮)

ஏதங் களைந்திங் கெனையாண்ட வன்கழற்கே
பேதங் கெடப்பெருகும் பேரன்பே—காதையுடை
னன்னையு மாற்றினா னாதலமாக்கு
மென்னையு மாற்றினான் யாறு.

துதிசெய லுந் தொண்டர் தொழில்செய லு நெஞ்சி
னதிசயமும் கூடியரு வன்பே—யெதுவுந்தா
ஞானந் தத்தான் முதலா னருமறைதேர்
ஞானந் தத்தா னதி. (சுO

மலை.

பொன்றாத தேவர்களும் பொன்றும் பொழுதினுந்தான்
குன்றாது நின்ற குணக்குன்றே—யென்றுந்தா
னீறிலாச் சித்தாந்த னேருருவங் கண்டவர்க்கு
வேறிலாச் சித்தாந்தன் வெற்பு. (சுக)

ஒருவடிவ மில்லா வொளியே வெளியே
குருவடிவாய் வந்தகுணக் குன்றே—திருவடிதந்
தாலால மாற்றினு னாரா வமுதளித்தான்
கோலால மாற்றினான் குன்று. (சுஉ)

தேடி யரனுந் திருமாலு நான்முகனுங்
கூடி முடியாக் குணக்குன்றே—நாடியெனுட்
போராது வந்தார் பெருந்தன்மை யிற்பிறழ்ந்து
வாராது வந்தார் மலை. (சுங)

பூமே லயன்மால் புராரியுடன் புத்தேளிர்
கோமேவு நோக்குணக் குன்றே—நாமம்
படியா வணங்கொள்வான் பையாக்க மெய்யென்
குடியா வணங்கொள்வான் குன்று. (சுச)

வலயங்க ளின்றிப் பாவைதீக் கால்வான்
நவலயங்கள் பூத்தகுணக் குன்றே-கவலையாம்
பாதாந்தத் திற்கெட்டார் மன்னரியர் மன்னுபுகழ்
வேதாந்தத் திற்கெட்டார் வெற்பு. (௪௫)

சனியாமற் செய்த பதமலரென் சென்னி
தனியாமற் செய்தகுணக் குன்றே-துனியான
சோதாக மஞ்சொன்னார் கூடா வகைகூட
வேதாக மஞ்சொன்னார் வெற்

## சின்னப்பூ வெண்பா.

மலையாழி விண்டிக்கு மண்டலமாண் டாலுங்
குலையாது நின்ற குணக்குன்றே—தலையா
யடிவாய் வருவா ரடியா ரவர்பால்
வடிவாய் வருவார் மலை. (௫௰)

உன்னும் வகையறியா மாலுமனேன் றன்மனனுங்
கன்னெகிழ வந்த கருணையே—பின்னடா
மாறாத வாதந்தான் மாற்றி யறிவுருவை
மாறாத வாதந்தான் மா. (௫௧)

நீயஞ்ச லென்றென்முன் னிற்பார்போ னின்றடியேன்
காயஞ்சேர் வுற்ற கருணையே—மாயஞ்செய்
தந்தித் திடவுரியான் றன்னைத் தருமென்று
வந்தித் திடவுரியான் மா. (௫௨)

தாக்குமா றென்றின்றி நின்றேயுந் தானென்னைக்
காக்குமா வந்த கருணையே—நோக்குவார்
முன்னாக வந்திப்பார் காப்பார் முதன்மூவர்
மன்னாக வந்திப்பார் மா. (௫௩)

ஆதலா காதை யறிவிங் கடியேன்பாற்
காதலால் வந்த கருணையே—யோத
வொருவா தரவுடையா னொள்ளொளியான் வேதா
மருவா தரவுடையான் மா. (௫௪)

தம்மேற் பாரங்கெட்டுச் சார்ந்தவர்க்குந் தம்பரத்தைக்
கைம்மேற் கொடுக்குங் கருணையே—யெம்மை
நலமூன்று மாறினார் நன்னெஞ் சிருப்பார்
மலமூன்று மாறினார் மா. (௫௫)

செய்தவமொன் றில்லேன் சிலையன்பு பாவிக்குங்
கைதவங் காணாக் கருணையே—மெய்தவிர்ந்து
மாறா வரும்பெருமான் மாறத்தா னென்மனத்தே
மாறா வரும்பெருமான் மா. (௫௬)

புண்ணா முடம்பாகிப் போகாமே யாகமெலாங்
கண்ணாக வந்த கருணையே—யண்ணோனு
மீறா மதிதந்தா னீறாக வெவ்விடத்து
மாறா மதிதந்தான் மா. (௫௭)

மாண்டகைய தேவரெலா மையுற வையத்தே
காண்டகைய வந்த கருணையே—பாண்ட
பனவா சகங்கடந்தா னென்றுன்னப் பாட
மனவா சகங்கடந்தான் மா. (௫௮)

எண்காதல் செய்ய விமையோரும் வேதமுமென்
கண்காண வந்த கருணையே—புண்காயஞ்
சேரா வழிபயந்தான் தீரச் செறிந்தவர்க்கு
வாரா வழிபயந்தான் மா. (௫௯)

பண்டா மிமையோர் படரெய்தப் பாரினெனைக்
கண்டாள வந்த கருணையே—கொண்டாடி
நாவார வாரத்தா னல்லடியார் போற்றிசைக்கு
மாவார வாரத்தான் மா. (௬0)

கொடி.

கன்மதிமுன் னீரான தன்மைபோற் கல்லாவென்
றன்மனனு நீராந் தருமமே—துன்மதியான்
மாறும் பெருமான் மருவா வகையொன்று
கூறும் பெருமான் கொடி. (௬௧)

என்பரமோ வன்றி யினிப்பிறவா மேகாக்கத்
தன்பரமாக் கொள்ளுந் தருமமே—வன்பிறவி
மாற வினியான் மறவா வரந்தருவான்
கூற வினியான் கொடி. (௬௨)

என்னை யளியென் றிரந்தார்கட் கந்நிலையே
தன்னை யளிக்குந் தருமமே—மின்னைநிகர்
சால முடையா ருடம்பொழிக்கச் சாத்தியதோர்
கோல முடையார் கொடி. (௬௩)

ஊனுக மானுரை யோர்மொழியா லேயுணர்வு
தானுகப் பார்க்குந் தருமமே—வானின்று
னேற வரியா னினிப்பிறவா மேகாப்பான்
கூற வரியான் கொடி. (௬௪)

ஊனிறா னென்றுள்ளு முள்ள முடையார்க்குத்
தானிறா தாகுந் தருமமே—மேனி
யலைகாற் றெறிவா னவனிதோன் றாமற்
றலைகாற் றெறிவான் கொடி. (௬௫)

கட்டறுத்தென் சிந்தைக் கருவறுத்தென் னெஞ்சறியக்
கட்டறுத்து விட்ட தருமமே-கட்ட
முளவா தரித்தா னுவந்தடிமை யென்னைக்
கொளவா தரித்தான் கொடி. (௬௬)

வன்மை யுடைய மனக்கணக்கர்ற் றன்னுடைய
தன்மை தெரியாத் தருமமே—முன்மேவு
சுற்ற மறுப்பான் றுடைப்பான் றொலையாவென்
குற்ற மறுப்பான் கொடி. (௬௭)

சாலத் தனக்கன்பு செய்வார்க்குத் தன்னையே
சாலக் கொடுக்குந் தருமமே—ஞாலத்தோ
டொன்றாவா னந்த னகத்தடக்கு முள்ளத்துக்
குன்றாவா னந்தன் கொடி. (௬௮)

ஆராத வன்புடையார்க் கன்றி யனுபவத்திற்
சாரா திழுக்குந் தருமமே—யோராமற்
றிண்டாட வந்தான் சிதைத்தவா தேயமெலாங்
கொண்டாட வந்தான் கொடி. (௬௯)

அப்பார்கண் மாறா தமுவார்கட் கானந்தந்
தப்பா தளிக்குந் தருமமே-தப்பான
வாதாட வைப்பான் மருவாம லன்பருடன்
கோதாட வைப்பான் கொடி. (௭௰)

முரசு.

பஞ்சேந் திரியப் பயனுண்பா ருண்பலெலா
நஞ்சே யெனவறையு நான்மறையே—தஞ்சே
வடியா வருளா ரவர்பா லருளார்
முடியா வருளார் முரசு. (௭௧)

பயமா னதுநீரப் பார்த்தெலா ஞான
மயமா வறையு மறையே—நயவாத
வென்று னடுவா னிறுதியா னெப்பொருட்கு
முன்று னடுவான் முரசு. (௭௨)

காலந் திசைகடந்த காரணத்தை வேறுசெய்தன்
மாலென் றறைகின்ற மாமறையே—நாலொன்று
மோதாதை யானொழித்தா னுலகிற்கு
மூதாதை யானுன் முரசு. (௭௩)

தத்துவா முத்தி யருளென்று சாருவதே
யத்துவா வென்னு மருமறையே-கத்துவார்
கண்டகத்தார்க் கெட்டார் கருதா வரனயன்மான்
முண்டகத்தார்க் கெட்டார் முரசு. (௭௪)

வீடு தெளிவார்கட் கன்றி விளம்புபொரு
ளூட வரிதாகு நான்மறையே-யோடுபுலன்
காவா திருப்பார் கருத்தாளை தைத்திருப்பார்
மூவா திருப்பார் முரசு. (எரு)

ஆன்பதனைக் கேட்டா ரறியா வரும்பொருளை
யொன்பதுகாற் சாற்று மொளிமறையே-வன்புலன்கள்
காப்பா னிளையான் கருத்தா னுலகிற்கு
மூப்பா னிளையான் முரசு. (எசு)

கதியொன் றுணரார்க்குக் கன்மனமே யாகு
மதியென்ற நல்ல மறையே-துதியன்றி
மற்று மொழியார்தம் மாட்ட லதுமொழியார்
முற்று மொழியார் முரசு. (எஎ)

எஞ்சா திறைவ னுருவேயி தெல்லாமென்
றஞ்சா தறையு மருமறையே-நஞ்சாய
போக மறுத்தாரென் புந்தியா ரென்சிந்தை
மோக மறுத்தார் முரசு. (எஅ)

கோலா கலமாங் குதர்க்க நெறிகளெலா
மாலாகு மென்றறையு மாமறையே-மேலாகச்
சொன்னமே தந்தானுந் தொல்பிறப்பென் றுன்னுமதி
முன்னமே தந்தான் முரசு. (எகூ)

நல்லவர்க்கு ஞானமே சாற்றி நலனல்லா
தல்லவர்க்குச் சாற்று மருமறையே—பல்லுயிர்க்குத்
தான்றுருவ ஞானன் சதுர்முகத்தான் மாலென்னு
மூன்றுருவ மானான் முரசு. (௮0)

படை.

திட்டாந்தத் தெட்டாதே தேசிகன்றுள் சென்னிமே
னட்டாற் றெரிவதா ஞானமே-முட்டான
வத்தர்க் கினியா னனுகா வகையருள்வான்
பத்தர்க் கினியான் படை. (௮௧)

வாசஞ் சுவையொளியூ றோசையெனும் வன்பேத
நாசஞ் செயவல்ல ஞானமே—நேச
ரணியாக வில்லா னனைத்துலகுஞ் செய்து
பணியாக வில்லான் படை. (௮௨)

காலந் திசைதேசங் கற்பித் திடுகாண
நாளுங் கடந்தொளிரு ஞானமே—மாலான
சுற்றங் கறுத்தான் றொடர்ந்தடிமை கொண்டெனது
பற்றங் கறுத்தான் படை. (௮௩)

வேதங்க ளேமுதலா வெவ்வே றுரைக்கின்ற
நீதங் களையொடுக்கு ஞானமே-மாதங்கந்
தீர்க்க வுரியான் றிருமா லயன்றேடிப்
பார்க்க வுரியான் படை. (௮

ஆரணமும் பண்டை யரனு மலரோனு
நாரணனும் போற்றிசெய் ஞானமே—கோரணியாம்
வாதங்க டந்தான் மனவா சகங்கடந்தான்
பாதங்க டந்தான் படை. (அரு)

அந்த முதலற் றகம்புறமற் றெவ்விடத்து
நந்து மொளியுடைய ஞானமே—பிந்தவுடம்
போடுமா செய்தா ருளத்தா ருணர்விலேன்
பாடுமா செய்தார் படை. (அசு)

ஒக்க வுருகியுட னென்று தவர்தம்மை
நக்க வருகுபடு ஞானமே-யக்கோ
டரவாமை பூண்டா னயனெடுமா லுள்ளும்
பரவாமை பூண்டான் படை. (அஎ)

உண்ணெக் குருகாதே யோர்தி யுணர்பவர்க்கு
நண்ணற் கரிதாகு ஞானமே—யெண்ணுற்ற
கோசங் களைந்தார் குரம்பைக் குலங்களைந்தார்
பாசங் களைந்தார் படை. (அஅ)

ஓட்டந் தவிர வொருக்கி யொழியாத
நாட்டந் தரவல்ல ஞானமே-தாட்டந்த

பின்னும் பரமன் றெனத்தனது பேரருளாற்
பன்னும் பரமன் படை. (அகக)

ஊனேனா னென்றிங் குழலா வகையுணர்வா
ஞேனா ருக்கியமெய்ஞ் ஞானமே—மானேயர்
தேடி மருவார் தெளியுந் திறனில்லார்
பாடு மருவார் படை. (கூ0)

தார்.

நாயனை வென்னை நயந்தாண்ட வாசொல்லி
வாயார வேத்தும்பா மாலையே—காய
நிலைமை யெனக்களித்தார் நெஞ்சகல்வார் தாமந்
தலைமை யெனக்களித்தார் தார். (கூக)

கண்டுகேட் டுண்டுயிர்த் துற்றுக் களித்தன்பாம்
வண்டு முரலும்பா மாலையே-தொண்டர்க்கா
ளாத லறவையா னக்கிற னண்டரையுஞ்
சாத லறவையான் றார். (கூஉ)

அந்தவா னோர்களையர வடியேன்பால்
வந்தவா சொல்லுஞ்சொன் மாலையே—பந்தமா
மூனக் காட்டினா னட்காமே யுள்ளவெலாந்
தானக் காட்டினான் றார். (கூ௩)

ஆறுவது

# தசாங்கம்-வெண்பா.

## தத்துவபோதம்.

### பேர்.

சாம மணிநிறத்துத் தத்தாய்! தனைத்தருவா
னும மறிய நயந்துரையாய்-நாமஞ்
சொருபா அனந்தனென்று தூமறைகள் சொல்லும்
பெருமானுக் கிட்டதெல்லாம் பேர். (க)

### ஊர்.

பண்ணார் மொழிக்கிள்ளாய்! பார்மிசைமேல் வந்தண்ட
வுண்ணா ரமுதுவந்தா னூருரையாய்-கண்ணூறு
வெள்ளம் பரக்க வெறுமின்ப மேவிளையு
முள்ளம் பரம்பரனுக் கூர். (உ)

### நாடு.

வண்ணப் பசுங்கிளியே! வாழ்வித்த நாயனார்
நண்ணப் படுகின்ற நாடுரையாய்-யெண்ணுற்ற
வானந்த மாக வருநாடா மேனாடு
மானந்த நாடென் றறி. (ங)

### யாறு.

செஞ்சொற் பசுங்கிளியே! செம்மேனி கொண்டெம்மை
யஞ்சற்க வென்றாண்டா னாறுரையாய்-வஞ்சக்

கருக்கெடுக்கு ஞானக் கனம்பொழியக் கண்ணீர்
பெருக்கெடுக்கும் பேரன்பு பேசு. (௪)

மலை.

மலையேது சொல்லாய் மரகதமே! வந்தென்
றலையேறு தாளுடையான் சாரச்—சிலையக்
கணமே கனியாகக் கண்ணளிக்க வல்ல
குணமே யெனையுடையான் குன்று. (௫)

வாகனம்.

பாகனைய செஞ்சொற் பசுங்கிளியே! பாரில்வரும்
வாகனமேது தாண்ட மறையவனுக்-காகம்
வருங்கருவை மாற்ற மனுடரைப்போல் வந்த
பெருங்கருணை யென்றுநீ பேசு. (௬)

கொடி.

பண்டோற்கு மின்சொற் பசுங்கிளியே! தொண்டனெனக்
கொண்டாற் குரிய கொடிகூறாய்-மண்டிக்
கெடுக்கு மனங்கெடுத்துக் கேடிலா வின்பங்
கொடுக்குந் தருமக் கொடி. (௭)

முரசு.

இன்பா லொலிப்பே னிளங்கிளியே! யெங்கோமான்
முன்பாய் முழங்கு முரசுரையாய்-யன்பர்

லறையு மறையே யவனியுளோர் துன்பம்
பறைய வறையும் பறை. (௮)

படை.

நறவு கனியொடுபா னல்கக் கிளியே!
யிறைவர் படையே நியம்பாய்—பிறவித்
தொகைதுணிக்குந் தெய்வச் சுடர்ஞான வாளே
பகைதுணிக்க வேந்தும் படை. (௯)

தார்.

செங்கனிவாய்ப் பைங்கிளியே! தேசிகன்ற ணாதரஞ்செய்
கொங்கலர்தார் யானறியக் கூறிக்கா—ணிங்கெனுட
லாமா லையனுக் ககமாலை மாற்றினர்தம்
பாமாலை யென்றே பகர். (௰)

தசாங்கம்—முற்றிற்று.

ஏழாவது

# இரட்டைமணிமாலை.

தத்துவதீபம்.

நேரிசைவெண்பா.

கருணை யிருந்தவா காணீர்தங் கண்ணு
மருணிலைய வஞ்சுவதா மண்டர்—வெருளாதே
யேத்துவதா நாயேனு மென்னே! திருமேனி
சாத்துவதாந் தம்பிரான் றன். (க)

கட்டளைக்கலித்துறை.

தானெனக் குச்செய்த நன்றிக்கென் னாவிதந் தோனென
யானினைக் கிற்றன தாரும்பண் டேயஃதி யானெனவோ[வே
றேனினைக் கற்பித் துயிர்வைத்து மீள வொளித்துக்கொண்ட
தேனினைக் குந்தொறுஞ் சொல்லுந்தொ றுநின்று தித்திக்கு
[மே. (உ)

நேரிசைவெண்பா.

திக்கால தேசங் கடந்த செழுஞ்சுடரே!
யிக்காலத் தேயிங் கெழுந்தருளித்—துக்கமெலா
நீக்கியவா கண்டாயே நெஞ்சமே நீயறியப்
பாக்கியம்யா மென்செய்தேம் பண்டு. (ங)

கட்டளைக்கலித்துறை.

பண்டைப் படியே நமக்களிக் கின்ற பரஞ்சுடரைக்
கண்டைக் கனியின் சுவையைக்கை விட்டுக் கவலைநெஞ்சே

தொண்டைக்கு மேலுறுஞ் சோற்றுச் சுவடுந் துடியிடை
யார், கெண்டைக் கிளர்விழியு முன்னி யென்னைக் கெடுத்
[தனையே. (௪)

நேரிசை வெண்பா.

கெடுத்தனைநீ வஞ்சத்தே கீழ்ப்படுத்தி னாலு
மடுத்தனவே செய்தாலு மன்பா—லெடுத்தென்னை
யாண்டான்வி டானெஞ்சே யார்தலா லென்னளவில்
வேண்டாநீ செய்யும் வினை. (௫)

கட்டளைக்கலித்துறை.

வினையின் செயலும் விதியின் வலியும் விடற்கரிய
மனையும் புதல்வரு மண்ணு மயக்கமு மானுடங்கொண்
டெனையும் பொருட்படுத் தாண்டா னிருகழற் போதுநெஞ்
சா, வினையு மளவி னிவையொன்று மென்முன்பு நின்றில
[வே. (௬)

நேரிசை வெண்பா.

நின்றன போன்று நிலையாத வாழ்க்கையை
யொன்றென வுன்ன லொழிநெஞ்சே-யின்றென்னை
யாண்டா னடிக்குருகு மன்பலான் மற்றொன்றும்
வேண்டா மெனநீ விடு. (௭)

கட்டளைக்கலித்துறை.

விடுமாறென் விட்டபின் மேலுறு மாறென் னெனநினைந்து
தடுமாறி நிற்குஞ் சுளர்வம்பி னே! சகத் தானென்றுங்

கெடுமாறு கண்டு கெடாவாறு வேண்டினங் கேள்வனுக்கா
ட், படுமா நினையப் படுமாகி னெஞ்சிற் பயங்கெடுமே. (அ)

நேரிசை வெண்பா.

பயங்கெடுமா வேண்டுதியேற் பந்தித்த நெஞ்சே
யியங்கிடுவாய் வாளா விருப்பாய்-நயங்கொடெனை
தொண்டாகக் கொண்ட சொருபானந் தச்சுடரைக்
கொண்டாடு தன்மறவாக் கொள். (௬)

கட்டளைக்கலித்துறை.

மறவா வரம்பெற்ற மெய்யடி யார்கண் மறந்துமினிப்
பிறவார் வினையிற் பிணிக்கப்ப டார்பிறி தொன்றுகண்டு
துறவா ரருட்சொரு பானந்த நாதன் றுணையடியே
யுறவா யுடைய வவரென்னை யாள வுரியவரே. (௰

நேரிசைவெண்பா.

உரிய வடியா ருடன்கூடி டாதே
திரியவெனை யிங்ஙனே செய்தாற் -பெரிய
வருளுக் கழிவென்றே யஞ்சுகே னஞ்சா
மருளுக் கழிவென்னே மற்று. (௰௧)

கட்டளைக்கலித்துறை,

மற்று ரிணியென்னைக் காப்பவ ரென்று முனுடர்தொழுஞ்
சற்றுண தேவரைச் சாருவனோ தன்னைத் தள்ளத்தள்ளப்

பெற்றானை யன்றி யறியாத் தழும்பிள்ளை போலுனையே
பற்று விருப்பன் பவமா நரகிற் படுத்தினுமே. (௪௨)

நேரிசைவெண்பா.

படுத்துவமா கத்தனையும் பாவுந் தெரிந்து
தொடுத்தறியா தைப்புகழ்ந்து சொன்னாற்-சடத்துவமே
தந்தாரா கிற்றருவார் தத்துவனைப் போற்றன்னை
யிந்தாபா ரென்றீவார் யார். (௪௩)

கட்டளைக்கலித்துறை.

யாரே பெறுபவ ரென்னையல் லாலிப் பிறப்பிலினி
வாரே னெனவென்னை வாழ்விக்கு மாறு வடிவினொடும்
பேரேது மற்ற பிறப்பிலி பேரரு ளேவடிவாய்
நேரே புகுந்திந்த நெஞ்சே யறிய நிகழ்ந்திடவே. (௪௪)

நேரிசை வெண்பா.

நிகழ்கின்ற தெல்லாமு நின்மேலனே யானு
மிகழ்கின்ற வேறுதா னேதோ-புகழ்வின்றி
நாடப்ப டாவெங்க ணாயகனார் சீர்பாதஞ்
சூடப்ப டாதார்தாஞ் சொல். (௪௫)

கட்டளைக்கலித்துறை.

சொல்லா யருட்சொரு பானந்த நாத துணையடிக்கு
நல்லார் பழுதற்ற நாவலர் நிற்ப நலமொன்றிலேன்
புல்லா வெழுத்திற் பொருளின் வறுமொழி யாற்புகழக்
கல்லா மனனைக் கனிசெய்த காரணங் காதலித்தே. (௪௬)

நேரிசை வெண்பா.

கர்தலித்த வெல்லாந் தரவல்ல கற்பகத்தை
முதலித்த நூலே மொழியாதே-யோதொலித்த
புத்தி யொருங்கவரும் பொன்னூர் திருவடியை
யெத்தி னடைகிற்பே மியாம். (௰எ)

கட்டளைக்கலித்துறை.

யாமா தரியர் விருக்கநெஞ் சேநம்மை யிம்மையிலே
சீமான் சிவப்பிர காசன் றிருவடி தீண்டப்பெறு
மாமாகர் நிற்ப வலிந்துவந் தாண்டதென் மாமறைநூ
லாமா மவனுக் கருளே வடிவென் றறைந்ததுவே. (௰அ)

நேரிசைவெண்பா.

அறைகின்றே னெஞ்சே யறம்பொருள்வீட் டின்ப
முறையும் பதியொழுக்க மோத-நிறையொளிசேர்
தந்தைதாய் சுற்றங்கண் முற்றுந் தனைத்தந்த
வெந்தைதா னென்றே யிரு. (௰௯)

கட்டளைக்கலித்துறை.

இருத்தே சிகனடி யைப்பிரி யாதெம் பிரானிங்ஙனே
யுருத்தே வருந்திரு மேனியைக் காணுடை யான்புகழே
துருத்தேது மின்றித் துதியவை கேடொண்டர் தொண்
டதுசெய், கருத்தே கருது கழல்சூட வைத்த கருணை
யையே. (௨௰)

இரட்டைமணிமாலை முற்றிற்று.

எட்டாவது.

# மும்மணிக்கோவை.

## தத்துவரூபம்.

### அகவற்பா.

பூங்கழ னிணைந்து புலம்பி யோங்கிய
மலரோன் மாலான் மகேசன் சிவனெனப்
புலவோர் புகழு மலகில் கீர்த்தி
யைந்தொழிற் கடவுளுஞ் சிந்தனைக் கரிதென
விந்திரன் முதல்வரு மிமையவர் முற்று
மந்தரத் துள்ளோ ரனைவரு மலமர
மந்திர மறையுந் தந்திர மனைத்துங்
கற்றவர் காமங் கடிந்தவர் கோபஞ்
செற்றவ ராசை தீர்ந்த நற்றவர்
யாவரு நிற்ப மேவருந் தன்மைப்
படிமிசைப் பாவம் வடிவுகொண் டதுபோற்
செடிபடு முடல்கொடு வெடிவதன் முன்னம்
வினைக்கடன் மூழ்கி யனைத்துஞ் சிந்தித்
தற்பமும் பயனில் செற்பமும் பயிற்றி
வாழுதற் கெண்ணித் தாழுநர்த் தாழ்ந்து
மருந்து மின்பமும் பொருந்து மின்பமுந்
திருந்தா வாழ்க்கைப் பொருந்துதலை வருந்தி
யறுதொழி லாருஞ் சிறுதொழில் வழுவா

விரத மொன்று மில்லா வியற்கை
விரதம் பூண்டு வீடே னாகி
வழுக்கிடை யில்லா விழுக்குடை யொழுக்கு
மழுக்குடை யுளனும் புழுக்குடை யுடலு
மிறைநல வெல்லை யின்மை போலவென்
குறைசொல வெல்லை கூடா தாகினும்
யானுறு துயரம் யானறி யாமையிற்
றானறிந் தருளிச் சகலபல் லுயிர்க்கும்
யோனி யாகியோர் மேனி யின்றிய
சுத்தன் முத்தன் சொருபா னந்த
னித்தன் கருணை யனென நிகழ்தரு
நற்றிரு நாமப் பித்த னாகி
யுளத்தக ளோர்க்கு வெளிப்பட வரிய
வென்று முள்ள தன்றிரு மேனி
நின்ற வண்ண நிற்க வின்றென்
ஞானக்கண் காண யான்பண் டறிந்த
புலைமதி யிரியல் போயென் றலைகொடு
யானடி வணங்கு மாறு
மானுட னாகி வந்துதோன் றினனே. (௧)

நேரிசைவெண்பா.

தோன்றல்சொரு பானந்தன் றோன்றிலனேற் றோன்றிய
போன்ற தனுகரண போகவுல--கூன்று [மொய்,

கனவு நிலையெனவே கண்டியா மெய்ம்மை
வினவ நினைவுறுமோ வேறு. (௨)

கட்டளைக்கலித்துறை.

வேறுசெய் தானரு ளேக்கத்தி னாலென் வினையடைய
நீறுசெய் தானிரு பாதிக மேனியென் னெஞ்சறியப்
பேறுசெய் தான்பண்டி யானென்று பேணும்பிண்டத்தை
ஊறுசெய் யாம லொருவிர காலிந்த வூனுயிரே [யொன்று

அகவற்பா.

ஊனு முடம்பு தானுந் தன்மையிற்
பூத மைந்தின் பொலிவே யாகெனி
னென்பு தோனரம் பிறைச்சி மயிரிவை
வன்புறு மண்ணே நெகிழுந் தண்புன
னீர்நிண மூளை சோரிசுக் கிலமே
யுறக்கமுஞ் சோம்பு மறப்பும் பசியுங்
கடுகிய விழைவுஞ் சுடுதீ யதுவே
யிருத்தலு மெழலுஞ் சரித்தலுங் கடத்தலும்
வலித்தலுஞ் சலிக்கும் வாயு வாமே
யாசையு முனிவு மானதம் பங்களும்
வரையா லோபமும் புரைவா னியல்பே
புறநிலை யையைந் திவையே யகநிலை
புவிமுதற் பொருளிற் புரிந்த கந்தஞ்

சுவையொளி யூறொலி யுண்டே செவிமெய்
கண்வாய் மூக்குப் பண்மொழி நடைகொடை
போக்கின் பந்தரும் வாக்கொடு பதங்கை
பாயு ருபத்தமென் றுயுன ரறைந்த
வறிதொழிற் கருவியுஞ் செறிதொழிற் கருவி,
முணர்ந்தங் காய்ந்து துணிந்துசெய் கரணமு
மித்தன்மை பிறவுஞ் சித்தன்மை தெரிய
பன்மொழி கூறாது சின்மொழி யருளி
யென்னோ நின்னுரு வென்ன வென்னை
யறியே னாதலி னஞ்சலென் றருளி
நெறியாற் றன்னை நிகழ்த்தக் குறைவறப்
பண்டே தன்ன தாயினு மென்பாற்
கொண்டா னாகக் கொண்டுதண் டித்தோய்
முன்னா கத்தொகுத் தென்ன துடைமையுங்
காயமுஞ் சீவனுங் கவர்ந்து நாயேற்
கந்தமில் சொருபா னந்தன்
சிந்துர மலரடி தந்தனன் றலைக்கே.

நேரிசைவெண்பா.

தலைதருபோ துள்ளஞ் சமிக்குந் தவிர்ந்தா
லலைதருபே ராழிபோ லாகுஞ்—சலமெரிகான்
மண்மாகம் வைத்தழிக்க வல்லவா நிற்போனுங்
கண்மாய் முணடோர் கழற்கு.

கட்டளைக்கலித்துறை.

கழலா ரணங்கள் பரவுஞ் சிவப்பிர காசன்றன்னைத்
தொழலா மதிதந்து துன்மதி தீர்த்திந்தத் தொன்னெடுநா
ளழலார் பிறவிபுற் றுங்கொடுங் கெய்தி யலமருமிச்
சுழலா ரொழியச் சுகவாழி மூழ்கத் துனைத்தனனே (௯)

அகவற்பா.

துனைத்தென் சென்னியிற் சுந்தெதன்று விளங்கிய
மண்முதற் சென்ற கண்முதல் வாங்கி
முன்னைவர் தனையா ருன்னிய கருத்தி
னேட்ட மெல்லா மீட்டுத்தேட் டறுத்துத்
தெரிவின்மை தெரிதலைத் தெரீஇத் தெரிபுகொண்டு
தெரிவின்மை யழித்துத் தெரிவே யாக்கித்
தெரிவொழித் தின்மை திகழ்த்தித் தெரிவையுந்
தெரிவானி னெரீஇத் தெரிபு தெரியாமை
யென்ப தின்றி யிருந்தமை போந்த
பின்பு தெரிவ தன்றி யங்கு
காயமு முயிருங் காலமுந் திசையுந்
தேயமும் யாதுந் திகழாது பாவிக்கும்
பாவனை யற்ற பரமிது வென்ன
மேவா விருத்தி யோவியம் போல
விருந்த வென்னை யெழுப்பிப் புரிந்து
போதலும் வீதலும் பொருந்தலிற் பிறத்தலுஞ்

சாதலுந் தவிராமை காட்டிப் பேதமற்
றப்படி யிருந்து மிப்படி விரிந்து
கப்புறும் வண்ணந் தப்ப விப்படி
கருத்தற விருத்திக் கண்ணளித் தொடுக்கமும்
விரித்தலுந் தீர விழிப்பித் திருட்டு
பகலவன் முன்னர்ப் படாஅ தொப்ப
வகிலமுந் தோன்று தறிவொளி திகழக்
கண்டு களிகூர்ந்த வென்னைத் தண்டிப்
பண்டை நிலையிற் பதித்தது கண்ட
ஞான நாடக! நான்முகன் முதலா
வான நாடரு மாதவத் தவருங்
காணு தலன்வர நாணும லடியே
னொருவாது பரவ நிருபா திகனுஞ்
சொருபா னந்த னுருவாய் வந்து
நேயமொன் றில்லா நாயேன்
காயமே புகுந்து கோயில்கொண் டனனே (௭)

நேரிசைவெண்பா.

கொண்டவிடன் கொள்ளா விடனென் றிவையிரண்டுங்
கண்டவிடன் காணு விடன்கடந்த—கண்டானே
தானுகி நின்றசொரு பானந்தன் றுள்கண்டே
னுனவி தங்களே னுன். (௮)

### கட்டளைக்கலித்துறை.

நாறுவி தஞ்செய்து ஞாறுதி தஞ்செய்து நாடரிய
மாறுடை தஞ்செய்ய வல்லவை னேயந்த வானவர்க்குந்
தேறார் பதகல்கிச் செம்பவ ளத்திரு வாய்மலரா
யாறு லவவென்செய் வார்சொல்லு மாறென்கொ லாரணமே

### அகவற்பா.

ஆரண மறிதற் கரிய காரணன்
முன்னு விடத்தைச் சொன்னு டருமையி
னென்று நின்ற தென்றே தன்னை
யறியும் பரிசே தென்னி லிறைவ
னருளா லாகு மின்றே யிருளெறி
யிந்து முன்னீர் தந்த கல்லென
வருட்கதி யெறிக்கு முருக்கொண் மேனிமுற்
றிலவொழுஞ் சுருக்கிக் கண்ணீ ருகுமே
னோக்கா னிகழ்ந்த வாறு கோத்த
புனல்வாய் மீன்சொரி சினையுயிர்த் தற்றே
மன்பா லென்னைத் தன்பா னினைய
வென்பால் யானிலங் கிடுதற் கன்பா.
வின்ற வாமை முட்டையுஞ் சான்றே
தலந்தெ றுவி நலங்கொ ணீர்மை
விலங்குண் விளவின் கனியொக் கும்மே
கருவி யெல்லா மொரீஇச் சொருக

வழியின்றிக் கழியு மாறு குழீஇய
வாயில் குடத்திற் றேயநிறைந் தற்றே
நாதன் செய்த செயலிற் கேது
வெல்லா மூண்டு போது மில்லை.
விண்ணிற் றேவர் நண்ணுதற் கரிதெனக்
கண்ணிற் காண மண்ணிற் றோன்றிச்
சொருபா னந்தச் சோதி குருவாய்த்
தாயினும் பரிந்து வந்து நாயேன்
மூண்ட வெம்பிறவியின் மூழ்கி
மாண்டுபோ காம லாண்ட காரணமே. (௭)

நேரிசைவெண்பா.

காரணமென் கண்ணளிக்கக் கண்மூன் றுடையானு
நாரணனு நான்முகனு நான்மறையும்—பூரணமாஞ்
சோதியுண ராநிற்கத் துய்யசொரு பானந்த
நீதியுண ராவெனக்கு நீ. (௭௧)

கட்டளைக்கலித்துறை.

நீயே பரிந்துவந் தாண்டிலை யாயி னிரயந்தன்னி
னாயேன் கிடந்தென் படக்கடவேனல னென்றுமில்லாப்
பேயே னுலகி னினிப்பிற வாவகை பெற்றெடுத்த
தாயே மன்னே யுறைதன மேயென் றனிமைகண்டே (௭௨)

## அகவற்பா.

கண்டுங் கண்டிலன் மேனி காணப்
பண்டுங் கண்டில னடியேன் முண்டகத்
தாளிணை தரினு மாளுவன் யானே
தாராக் காலு மாளுவன் யானே
கூடினுங் கண்ணீர் வருமே கூடாது
வாடினுங் கண்ணீர் வருமே நாடி
நினையினு நினையநெஞ் சிலனே நினையா
வினையினு நினையநெஞ் சிலனே யினைய
தன்மை யானிற் சார்தலுந் தவிர்தலு
மென்ன வயலொன் றின்றே நின்வயிற்
கண்டன னென்றல் காட்சியிற் படா
வண்டநின் றன்மை யன்றே கண்டில
னென்னின் முன்ன ரீசற் காண
வன்னிய னெனில்வே றன்றே நின்னிற்
பொன்றின னென்னிற் புகன்ற வாக்கே
யின்றெனக் கழறு மன்றே யன்றி
வேறெனில் வீடுகூ டாதே யொன்றெனிற்
கூட வேண்டா வாமே நாடிச்
சொருபா னந்த னுருபா யிங்குக்
குருவாய் வந்து தோன்றி யருளாம்
விழியி னன்றி மொழியிற் படாதெனி
னெழிவற நிறைந்த வழியில் சோதிக்கு

வரவுஞ் செலவு மில்லை யருவினுக்
குருவு மிலனென் பவர்க்குத் தெரிவுறக்
கண்டன னெனவோ கண்டில னெனவோ
வொன்றின னெனவோ வொன்றில னெனவோ
வந்தனை யெனவோ வந்திலை யெனவோ
வருவினை யெனவோ வருவினை யெனவோ
கருவினை யறக் கடைக்கணித்த
வொருமொழி யாளா வுரைத்திசி னெமக்கே. (௪௩)

நேரிசைவெண்பா.

கேட்டற் கரிய மறைப்பொருளிங் கேகிடைக்கு
நாட்டப் படுமென்றி யானுரைத்தா—னாட்டினவர்க்
கேறுமே யென்னை யுடையா னருளிலதேற்
றேறுமே சிந்தை சிலர்க்கு. (௪௪)

கட்டளைக்கலித்துறை.

சிலவா சகங்கொண்டு சிந்தைசெல் லாத விடத்தையொன்று
பலவாகு மென்னப் படுவது வோபத்தி யால்வணங்க
மலவா சறுத்தென்னை வாழ்வித்த நாதன் வடிவின்வந்
தோர், சொல்வா லுணர்வுஞ் சொலவு மொண்ணாத தனைச்
சொலுமே. (௪௫)

அகவற்பா.

சொல்லும்வர்க்கு நீயே யாயினுஞ்
சொல்லாற் சொல்லப் படாஅய் நீயே

யுள்ளு முள்ள நீயே யாயினு
முள்ளத் துணர்ச்சியிற் கொள்ளவும் படாஅய்
கண்ட வெல்லா நீயே யாயினுங்
காட்சியிற் படாஅ மாட்சிமை நினதே
யெல்லாப் பொருளு நீயே யாயினு
மல்லா திருத்தி யமல நீயே
யெல்லா விடனு நீயே யாயினு
முள்ளா தவர்பா லில்லை நீயே
யஃதான், றரியதி னரியை யெளியதி னெளியை
பெரியதிற் பெரியை சிறியதிற் சிறியை
நொய்யதி னொய்யை யையதி னையை
வெய்யதின் வெய்யை தணியதிற் றணியை
யணிமையி னணியை சேயதிற் சேயை
குறுமையிற் குறியை நெடுமையி னெடியை
பருமையிற் பரியை நேர்மையி னேரியை
யின்ன தன்மை யாயநின் னியல்பு
வான நாடரு மறையுமியானு
மறிந்த வளவி னாற்றுது நின்னை
விறந்த பெருமைக் கெங்கே யறிந்த
திலத்தள வல்லது நிலத்தள வுருமை
யிலக்கது சிறுமை யன்றே சலத்துறு
மதியென நடுங்குமென் மதியை வாங்கிப்
பதிவயிற் படுத்தப் பார்மிசை யுருவாய்

வந்தருள் சொருப! வானோர்
சிந்தனைக் கரிய தெய்வ நற்சுடரே.

நேரிசைவெண்பா.

சுடர்க்குச் சுடராஞ் சொருபானந் தன்று
ளிடர்க்குப் படையா விருக்க—வுடற்குச்
சிலகோலஞ் செய்தவமே செத்துப்போ வாரே
யுலகோரி தென்ன வுணர்வு.

கட்டளைக்கலித்துறை.

உணரீருடம்பி னிலைமை யுடம்புயி ருள்ளதெல்லாங்
கொணரீ ரினிய குறைகழ னல்கக் கொண் டாடிக்கொட
புணரீ ரருட்சொரு பானந்த நாதர் புகழ்வல்லவா
திணரீ ருளம்பர மானந்த மாம்படி நித்தலுமே.

அகவற்பா.

நித்தலு மலர்தூஉய்க் கைத்தலங் குவித்துப்
பணியுந் தொண்டர் பிணியுறும் பிறவியிற்
போர்கா வண்ண நீகாத் தருளத்
திருவரு ளதுவே யொருவடி வாகித்
தோன்றிய சொருபா னந்த வான்ற
வாறு சமயத் தவரு நாடிக்
கூறவுந் நின்னை யன்றே வேறறப்

பொல்லாக் காயமு நில்லாத் தன்மையு
மிடும்பைத் தொழிலுங் குடும்பச் சுமையுந்
தாரா திகளும் போகப் பிணியும்
பிறப்பிற் றுன்பமு மிறப்பிற் கேடுங்
கேட்டறு கின்ற வீடுறு நினைவுந்
தவத்துறு முயல்வு மவத்துறை யிகழ்பு
மெல்லா மொக்கச் சொல்லா நின்று
மொவ்வா வியற்கையின் வெவ்வே றுண
விவ்வா றென்னே விறைவ செவ்வே
யற்பல வழியோர் பதிக்கு பதியோர்
கற்பித் தனரெனக் காணுர் சொற்பித்
தாமன் றெனநின் றேமுறு மாக்க
டாமன் றொப்பிவர் தமக்கே காமுறத்
தம்மா னறியுந் தன்மையிற் றடவிக்
கைம்மாக் கண்ட கண்ணி லாளரு
முறிகாய் சாக மூலந் தனித்தனி
யறியா தோர்க்கு மரமா மாறு
மொக்கு மன்றே மெய்க்க ணாளர்க்
காயா விடினு மாயினு நீயாய்
ஞானக் கண்ணி னிகழ்தி
யூனக் கண்ணி னுலகா யினையே. (௰௬)

நேரிசை வெண்பா.

உலகமாந் தோற்றம்போ யோருருவாய் நேமே
யிலகிறு மென்கண்ணி னிற்கட் புலமொழித்துக்

கையாற் றடவினர்க்குக் காண்கின்ற வோவியங்கள்
பொய்யாய்ச் சுவராமாபோல்.

கட்டளைக்கலித்துறை.

போலா வுரைகொண்டு போற்றினு மென்றலை யிற்பெ
காலா தரஞ்செய்து கண்ணீர் ததும்பிக் கசிந்துருகி
மாலா குவநல்ல வார்த்தைகண் டீர்வடித் துப்படிக்கு
கோலா கலவுரை கூகையும் பேயுங் குழறுவவே.

அகவற்பா.

குழறு சிறுவர் மழலை மென்சொற்
கேட்டு மகிழ்த லல்லது மீட்டுக்
கழறு ரவரை விழுமி யோரே
யன்ன தன்மைநீ முந்நீர்ப் பிறந்த
புற்புத நிகழ்ந்த பொருளொரு பொருளாக்
கற்பனை செய்பு மற்ப மாக்கண்
மலவுடன் மன்னு வந்தன வுணவின்
பலமெனப் புலவர் பகரவு நிலையி
னுற்பவ மினத்திற் கற்பித மெல்லாச்
சொற்களு மென்னச் சொல்லியு நற்பொரு
ளெம்மதென்னவெம்மதென்று
மம்மர்மாந்தர்மயங்கித்தம்மிற்
கலகஞ்செய்யக்காமுற்றவர்பா

விலகாவிருந்தும்விலகாநீயே
வன்பாவியனுமென்பாலன்பா
யவ்வழிமாற்றிச்செவ்வழிப்படுத்தப்
புரணமேனிபெர்லிந்தினி திலங்கத்
தாணிவாழத்திருவவதரித்த
சொருபானந்தகுருபரமுனிவ
வருளேபொருளெனநினையுந்தெருளுடை
மெய்யுணர்வாளர்மெய்யிற்றோன்றி
யையுணர்விற்குமமிர்தாயினையே
பலவெனிற்பலவாயொன்றெனினொன்று
யிலதெனினிலதாவுளதெனினுளதாய்
நன்றெனினன்றாய்த்தீதெனிற்றீதா
யன்றெனினன்றாயாமெனினுமா
யீதிதுவென்னுநீதியின்றி
யாதேயாகநினைந்தனரஃதே
யாகிநின்றவேகநாயக!
நீகண்டிருக்கினல்லதாகத்
தொழிவறநிறைந்தநின்னுரு
வழியிலைகாணமதியினோர்க்கே. (உஉ)

நேரிசைவெண்பா.

மதியானு நானு மறையானு மற்றோர்
கதியானுங் காண்பரோ காலான்—மிதியாக்கொண்

மீட்டாசறுத்தாண்டவீரன்விழியாலே
காட்டாதபோதந்தக்கண்.

கட்டளைக்கலித்துறை.

கண்ணா ளனையன்றிக் காணாது கண்ணவன்கண் டெ
வெண்ணாது சிந்தைகொண் டேத்தாது நாவிறை
நண்ணாது சென்னி நயவாது நாசிநற் சீரொழிய
வுண்ணா செவியவ் வொளியொடல் லாதுரு காவுடட

அகவற்பா.

உடம்பே, மலநிணமூளை வழுவென்பிறைச்சிப்
புலவுநாறிப்புழுச்சொரியும்மே
தலையே, நில்லாப்பொருளைநிலையெனநினைந்து
பொல்லாதவரைப் போய்ப்பணியும்மே
கண்ணே, மலப்பொதிந்தியற்றிய வடிவினைமறைய
கலன்புனைமாதர் கவின்காணும்மே
மூக்கே, உடன்மணமுணரா தொருமணங்கொண்டு
முடைமணமாறி மொத்துண்ணும்மே
வாக்கே, அறம்பொருளின்பம் வீடெனநான்கின்
றிறங்கெடவுரியுந்தீச்சொரியும்மே
செவியே, பிறனில்வாழும் பெண்மைகேட்கும்
னுரை யன்றி யறனுரை பெருவே
கையே, மடக்கொடி மாதர் வயிற்பணி செய்யும்புல
னடக்கிடு சொருபற் காம்பணி செயாதே
மனமே, ஏது செய்தாலேதா மென்று

காதற கடலின் கரைகா ணுவே
யானே, குடும்ப மென்னு மடங்கற் காட்டி
னிடும்பைக் கெல்லா மிடனு யின்னே
யின்ன தன்மைய னென் றென்னை
யாரண மறியாக் காரணக் கடவுளென்
றுரைகளங் கடுத்த பூரண புராணன்
சொருபா னந்த னிருபா தங்கள்
புலைய னேனுக் களிக்கத், தலையே
பற்று வளித்த பொற்று ளல்லது
மற்றோர் தெய்வம் வணங்கறி யாவே
கண்ணே, அருவி பாய வருளா ணண்ட
வுருவ மன்றி யொன்றுங்கா ணுவே
மூக்கே, மெய்கழல் புறவுளன் மெய்புகுந் தருளிய
மொய்கழன் முளரி மணமுர னும்மே
வாக்கே, கருவினை யறுத்த கழலிணை கனவினு
மருவ லன்றி மற்றறி யாவே
செவியே, கூறு மன்பர் குரைகழற் றொடுத்த
வாரமிர் தருந்தி யாரா வாமே
கையே, என்பணி யுடம்பாம் வன்பிணி மருத்துவன்
றன் பணி யன்றித் தானறி யாதே
மெய்யே, விகிர்தன் வந்து மெய்யே தன்னுட்
புகுத வுரோமம் புளகஞ் செயுமே
உளனே, நெக்கு நெக்கு நீரா வுருகி

யுக்கு நாத ெனுளிபுக் கதுவே
யானே, யானென தின்றி யெல்லா மான
தேனினை யருந்திச் சிவமா யினனே
யோதின னெல்லாப் பேதமும் போக்கு
வாதனை யன்றி மற்று
நாதனை யொழிய நான்கா ணேனே.

நேரிசைவெண்பா.

காணும் பொருளெல்லாங் கண்ணுகக் காண்பவர்க்
கோணுஞ் சமயிகடங் கொண்டாட்டம்—வேறுமே
சூழ்ந்திருக்கு நாடுஞ் சொருபானந் தன்பதத்தே
வாழ்ந்திருப்ப தல்லாது மற்று.

கட்டளைக்கலித்துறை.

மற்றுக் கொளவொன்றும் வேண்டா மனனே! வெ
பெற்றுக்கொ ளெந்தை பெருமானை யுன்னப்பெ
கற்றுக்கொ ளாண்ட கருணைக் கழல்களை விடாதி
விற்றுக்கொ ளொற்றிவை யென்னினு வேறின்னை
[வே

அகவற்பா.

வேண்டலன் விண்ணு மண்ணு நீண்ட
ழு மறனும் பொருளு மின்பமுந்
திகழும் வீடுஞ் சிறப்புந் தொகையி
லெல்லாப் பொருளு மில்லா வாகி

யொழியினு மொழிகப் பொழியினும் பொழிக
வெனையா ளுடைய சொருபானந்த!
நினையா னிரப்ப துண்டு மனனே
மன்னு நின்னடி மறவாது நினையமற்
றுன்றுதல் கனவினு மொழிய வர்க்குன்
னுமை மொன்று நவிற்ற மற்றவற்
றாம னுகி யொழிய மூக்குன்
முற்றுத் தளிரடி முரல முன்னே
மற்றை நாற்ற மாற்றக் கண்ணுந்
திருவுரு வதுவே நினைக்க மற்றே
ருருவுங் காணு தொழிகச் செவியுன்
கீர்த்தி யொன்றுங் கேட்க மற்றொரு
வார்த்தையுங் கேளா வாகக் கையுன்
காற்றலை யேவல் செய்யக் கவலைச்
சோற்றலை யேவ றுறக்க நாய்த்தலை
மற்றோர் தெய்வம் வணங்கா வுன்றன்
பொற்று ளிணையே பொலிய மற்றை
யவயவ மெல்லா மவயவத் தடுத்த
வினை யிவை செய்ய யானுஞ் சிவமா
வாவா வென்றன் றருளு மருணினைந்
தோவா துருக வீவு வுடம்புகு மளவே. (உ௮)

# மும்மணிக்கோவை

நேரிசைவெண்பா.

அளவா யிருப்பதே யையோ வரனுந்
துளவார் முடியோனுஞ் சோதித்—துளவாறு
தன்னையா யாநிற்பத் தம்பிரான் றனைவந்
தென்னையாள் கின்ற விது.

கட்டளைக்கலித்துறை

இதுவா மதுவெனி லன்றிநின் றேயெப் பொருள்
மதுவா கினுந்திரு மேனியன் பாலமு வார்க்கரு
மதுவார் பதநல்கு மல்லது [illegible]னவர்க் கும்பிறர்க்
பொதுவா விருந்தது வோசொரு பானந்தன் பூங்க

மும்மணிக்கோவை முற்றிற்று

ஒன்பதாவது.

# நான்மணிமாலை.

## தத்துவானுபவம்.

### அகவற்பா.

பூவை வண்ணனும் பொன்னொளி வண்ணனுந்
தீவண் ணனுமெனச் சிறந்த மூவரு
முண்ணிகழ் ஞானக் கண்ணாற் காணும்
வண்ண மில்லா வண்ணல் வண்ணங்
காணப் படாஅன் காண்பவ னாகுங்
கேட்கப் படாஅன் கேட்பவ னாகுஞ்
சொல்லப் படாஅன் சொல்பவ னாகு
முயிர்க்கப் படாஅ னுயிர்ப்பவ னாகு
மியக்கப் படாஅ னியக்குவ னாகும்
புணரப் படாஅன் புணர்பவ னாகும்
உணரப் படாஅ னுணர்பவ னாகுஞ்
செய்யப் படாஅன் செய்பவ னாகு
மையப் படாஅ வறிவா மெய்யன்
புவியிற் றிண்மை புனலி னெகிழ்பு
தீயின் வெம்மை வாயுவிற் சலனம்
வானிற் புரைத்தல் பானுவிற் றேசு
மதியிற் றண்மை மன்னுயிர்க் குணர்ச்சி
திதியுற முன்னே செய்த முதியோ
னவையுந் தன்னிற் றோன்றி நின்றிறக்க
வவைதனக் கில்லா தாம விகார

மாகி நின்ற வேகன் சொருபன்
யோக மெட்டு முணர்ந்த பாகத்
தெருள் புரி சிந்தைப் பெருமா தவர்க
ளருள்விருப் புறுவா னஞ்சி நிற்க
மறுளா மெனையோர் பொருளா நினைந்தென்
னிருளார் யாக்கை நீக்க வருளா
மின்னொடும் புகுந்துதன் பொன்னடி பணித்தென்
கன்னெஞ் சுருக்கிக் கண்மா ரூமன்
மஞ்சனஞ் சொரியவே நெஞ்சினை நடுக்கி
யஞ்ச லஞ்சலென்று தஞ்சமில்
யாக்கையும் பொருளு மாவியும் வாங்கி
நோக்கினென் வினை நூறிப் பூக்கமழ்
பாதந் தலைமிசைப் பதித்துப் பழமறை
யோது முபாதி யான பேதப்
பந்தமுஞ் சீவனும் பரனு மாகி
வந்த மாயா பேதம் வந்த
விடந்தொறுங் காட்டி யிரண்டு பாதியுங்
கடந்து நின்ற கண்ணே யாக்கி
யுலவு முடற்குயிர் மலரி னாற்றஞ்
சொலவினிற் பொருடேய்மணிச்சோதி
திலத்தினெண்ணெய் பலத்தினின்சுவை
விறகினிற் செந்தீ பாலி னறுநெய்
யென்ன நின்ற விப்பொரு ளியா
னென்ன னென்னிற் காட்டிப் பின்னர்ச்

செய்தருள் விரகு செப்பும் வகை யறியேன்
கைதவ மின்றிக் கண்டும் பொய்தவ
மெய்யோ வுருகி வீழா
வையோ கண்க ளருவிபாய் கிலவே.

### நேரிசைவெண்பா

அருவமாய் நின்ற வொளியப் படிநிற்க
வுருவமாய் வந்த வொருவன்-சொருபன்றுள்
வாழ்த்தி மகிழ்ந்திருக்க மாட்டாதே மாஞாலம்
பாழ்த்த வுடம்பைப் பரிந்து. (உ)

### கட்டளைக்கலித்துறை.

பருதிகள் பல்லா யிரங்கதி ரும்மிரு ளப்பகலா
வொருதிசை கால முலகமொழிவற் றெளிருந்தன்மை
சுருதிக ளாயிரஞ் சொல்லவு நஞ்சொரு பன்பதங்கள்
பொருதிகன் மார்க்கிகள் காண்கிலர் கத்திக்கண்பூத்தலினே.

### விருத்தம்.

பூத் திருக்கையால் வைத்துநஞ் சென்னியில்
பொன்னடி பொறித்துள்ள
மாத் திருக்கையோர் மாத்திரை யதனிலே
மாற்றிவா சகமொன்று

...ார்த் திருக்கெலா முறைப்பரும் பொருளின்வே
 றின்றியே யொன்றாகப்
...ர்த் திருக்கவாம் படியருள் சொருபனைப்
 பாவிகள் பணியாரே. (௪)

அகவற்பா.

பணிக்க வேண்டுநின் பழவடி யார்க்குக்
கணிப்பி னேவலென் கையாற் செய்க
கரந்தொழு தேத்தக் கடிமலர் தேடிப்
பரந்தெழ வென்றன் பதங்க ணிரந்தரம்
பூக்கழ லென்றும் புகழ்ந்து போற்றியென்
வாக்கு நின்னை வாழ்த்த நோக்க
நீக்க மின்றி நின்றன் மேனி
நோக்கி நுண்டுளி சொரிய மூக்கு
மதமண முண்ண மதியா தென்றன்
பதமண முண்டு பருகத் துதியெனு
மாறி லன்பர் வாச்கெழு மதுரத்
தேற லுண்ணவென் செவிக ளாறி
யச்ச மற்ற வடியவர் வைத்த
மிச்சி லுண்ண வென்ற நிச்சலும்
...ாவிடை நாவிற் பரந்தெழ வறுத்த
சேவடி சூடவென் சென்னி மேலிட
வுற்ற தலைதோ றுறுதுய ரெய்த

நற்றவ மிலேனை நாடிப்பெற்ற
தாயி லாகி யாண்டநின் றனக்கே
கோயி லாகவென் குரம்பை யோயா
தொளிவந் துள்ள மொழியா வின்பக்
களிவந் துருகிக் கரைய வெளியா
வீட்டிய விருக்கு மாறு
காட்டிய சொருபநின் கருணை கண்டே. (௫)

நேரிசைவெண்பா.

கண்டு குழைவர் கணையென்றும் வேலென்றுந்
தொண்டர் குழையுஞ் சொருபன்கண்—கண்டு
மனங்குழையா ரையோவிம் மானிடவர் மாயக்
கனங்குழையார் காவியங்கண் கள். (௬)

கட்டளைக்கலித்துறை.

காவியங் கண்கள் பனிப்பவந் தாய்கடி மாமலர்க
ளேவியந் தோகை தொழுதனை யோசொரு பன்பதங்கண்
மேவியங் கார்தொழு வாரவர் மெய்யும் பொருளுமன்றி
யாவியங் கொள்ளுமென் றேமறை நான்கு மறையுநின்றே.

விருத்தம்.

நின்ற வொன்றைநினை யாது நெஞ்சினிலை
யாத விவ்வுடல நித்தமா

மென்று கொண்டுநினை வார்கள் செய்ததும
னென்ன பாவமிவ ரிந்நிலத்
தோன்ற வந்தவொரு பன்ப' தங்கடலை
புச்சி வைக்கிலர்கொ ளூழிநா
ளொன்று திங்கள்புவி யம்பு தீயனில
மெஞ்ச நின்றவெளி துஞ்சவே.

அகவற்பா.

துஞ்சல் பிறந்த ஞேயம் விஞ்சிய
பெருமிதம் பெருமை பேரவா வாழும்
வருமிட் ரின்ப மறிதிரை விரவு
குற்றம் வெண்ணுரை சுற்றந் துராஅன்
மம்மர் நோய்கள் மறுக்கும் புலவு
கொம்மை முலையார் கொடுஞ்சுழி வெம்மை
கோபம் வடவை தாப மமிர்தம்
போக நஞ்சு நாகங் காம
மழுக்கு முதலை புழுக்கண் மைந்தர்
மீனம் புலன்கண் மான மகர
முணர்வில் கல்வி யொலியா மேழ்பவப்
புணரி தன்னுட் பிணி யுடற்கலத்
தரந்தைப் பொருள்பெறும் பெரும்பொய்ச் சரச்
நிரம்ப வேற்றித் திரம்பெறு கூம்பு
யானென வோட்டி யெனதெனும் பாச

மானவிட் டத்து வலியுறக் கட்டி
நேய மென்னும் பாயது விரித்து
மேலை வல்வினை மாலுமி யாகி
யீரா றாரு யிர்வே ழியோனிப்
போது பெற்ற வூர்தோ றுஞ்சென்
றேற்றிய சரக்கி னிரட்டியு முற்றிப்
முறுதி யின்றி யோடுங் காலை
யிறுதி யெய்த வெண்ண மொன்றறக்
கருத்தது கலங்க மிருத்தியு வென்னும்
வரைபட் டுடைந்துறு வங்க நிரய
வளற்றின் வீழா முன்ன மொளித்தகு
மறிவு மரக்கல னமைத்துத் துறவி
னுமக் கூம்பு நாட்டி யேம
வருளாங் கயிற்றிற் புரள்பறக் கட்டிப்
பத்தி யென்னும் பாய்பூ ரித்து
முத்தி யூரிற் றம்மை யுய்த்தருள்
சொரூப னென்னு மொருமீ காம
னருந்தவர்க் கரசின் பாதந்
திருந்தவைக் கிலர்தஞ் சென்னியின் மிசையே. (௯)

நேரிசைவெண்பா.

சென்னிமி சைப்பதங்கள் சேர்த்திக் திகழ்சொரூப
னுன்ன வரிய வுணர்வாகுந்—தன்னை

யருளும்விரகேதா னுடைப் புறத்தி
னுருளு மளவி னுழுந்து. (௧0)

கட்டளைக் கலித்துறை.

உழுந்துரு ளுந்துணைப் போதி னுணர்வுரு வாகவொன்று
மொழிந்தரு ளத்திரு வுள்ளத் தடைத்து முதுமறையோன்
செழுந்தா ணிக்கண் டிருமேனி சாத்திநஞ் சிற்சொரூப
னெழுந்தரு ளிற்றில னேலெங்ங னேபிறப்பேறுவதே. (௧௧

விருத்தம்.

ஏறுவ திழிவ தாவரு மியல்ப தேறுவ திலர்க ளாறினோர்
கூறிடு சொருபர் தாளிணை மலர்கள் கூடிட நினைவு ருது
போய், வேறொரு தரும மேவுறு மவர்கள் வீடதுபெறுகை
கூடுமோ, மாறியிவ் வுலகி லாவது திரிய வானுலகுறுவ
தாகியே. (௧௨)

அகவற்பா.

ஆகியு மழிந்தும் போகு முற்பவத்
துன்பந் துடைத்திங் கின்பங் கொடுக்கத்
திருவுருப் புனைந்த குரவன் சொருபன்
பொற்பதஞ் சூடிச் சிற்பத வீடு
கையிற் கனியெனக் காணு ரையோ
தர்க்க நெறியிற் சார்வுர் தர்க்கஞ்

சொல்லவ தில்லை யாருஞ் சொலவு
மன்னல தில்லை யாரு மனனுங்
கனவுஞ் ஞானக் காரிய மாகு
மஞ்ஞா னத்தா லாகிய விருநெறி
மெய்ஞ்ஞா னத்தை விளக்கு மாறென்
னிலதுள தேக மனேக மென்ப
தலதிலை தர்க்க மறைவ திலதெனி
விலது முத்தி யெய்துத லின்ப
மலடி மைந்த னெய்துத லிலையா
யுள்ளது முன்னே யுள்ள தாதலி
னெள்ளறு முத்தி யென்செய வுள்ள
தன்னின் மாசு தானொழித் திடுதே
லென்னி லேறிய மாசோ முன்னே
யுள்ள மாசோ வொழிப்ப தென்னின்
னிள்ளா முன்னே யுள்ள தாகி
னிடையோர் காலத் தென்னின் முத்தி
யடைவார் திறத்தி னடையும் பின்னு
மொழிவறு பரம்பொரு ளொன்றே யாகி
னிழவு பேற தில்லை விழைய
வேறே யொருவ னுண்டெனில் வேறு
கூறின் முத்தியிற் கூடா னாகு
மிங்ஙன மான பின்ன
ரெங்ஙனஞ் சொல்வா ரிகற்சம யிகளே (௪௩)

நேரிசைவெண்பா.

சமயிகடம் பாலே தம்மைச் சொருப
னிமையி னருள்செய்ய வெய்தி-யிமையவர்க்குந்
தேவுதா மாயிருக்க வாகச் சிலர்சீசீ
போவதாம் பூசற் பொா.

கட்டளைக் கலித்துறை.

பூசனுற் றுடுஞ் சமயிக ளோடு புகுந்துதர்க்கம்
பேசனுற் றுறி யிருந்தன ரேபிணி சேர்பிறவி
யூசனுற் றுட வொழிக்குஞ் சொருபன்ற ணேங்குவே
வாசனுற் றுரை மருவனுற் றுர்கொலிம் மர்தவரே.

விருத்தம்.

மாதாக மணந்திட வென்று கொளு
மாதாக மறந்திடு நஞ்சொருபன்
போதாரர விந்தம லர்ப்பதநம்
போல்வார்கள் பெறுந்தர மன்னதுவே
வேதாக நினைந்தனை யண்டர்களு
மீசானனு மாயனு மிந்திரனும்
வேதாவு மறிந்தில ரென்றலவோ
வேதாகம நிதைவி ளம்புவதே.

குருத்தோடு தீர்ப்பான் குழைக்காதிற் செம்பொற்
றிருத்தோடு சாத்திமறுச் சேரா-திருக்குமதிச் [டும்

செவ்வித் திருமுகனைச் சேர்ந்தடியேன் கண்ணிரண்
வெளவிப் பெரிய மயறீர்ந்து - மெய்விளைப்பா

னாகத் திருக்கோல மாங்கொன்று கொள்ளாதே
மேகத் தணைகின்ற வெண்மதியின் - பாகமே

யொத்த நுதன்மீ தொளிர்நீற்றுக் காப்புத்தன்
பத்தர் வினைநீறும் படிசாத்திப்- பித்தனே

னிட்டவொரு பட்டத்திற் கெல்லா மிசைந்திருப்பான்
பட்ட மழகு படச்சாத்திக் - கட்டவுடல்

காட்ட மணிந்தழலிற் காட்டாமுன் றானெனக்குச்
சூட்ட மணிமகுடஞ் சூடித்தா - னாட்டமிலாப்

பேயான நாயேன் பிதற்றுந் தமிழ்மாலை
யாயாமற் சாத்து மருளினா - னையாவென்

வாண்மாலை மெய்யென்று மங்காமே செங்கழுநீர்த்
தோண்மாலை சாத்தித் துயரகலக்- கோண்மாற்றும்

வேதகத்தி னன்னம் புள்ளும் விடைதவிரப்
போதகத்தின் மீதே புகுந்தருளி - னேயதுவற்ற

தஞ்சந் தனமென்றி யானிருக்கத் தானருள்வா
னஞ்சந் தனமே லணிந்தருளி — நெஞ்சமது

செஞ்சாந்த மாகச் சிறியேற் கருள்செய்வான்
செஞ்சாந்து சாத்திச் சிறந்திடவே — பெஞ்சவரு

நாண்மலரா வண்ண மடியேற்கு நல்குவா
ஞண்மலர்தான் சாத்தி நறுங்குழன்மே — னீண்மா

மறைகழுறு நின்ற மலர்த்தா டருவா
னறைகழுறுன் சாத்தி யழகா — வல்நெறிவந்

தெந்திரா னவர்பிறவி யெல்லா மெறிவான்
கதிர்ஞான மாங்கடகஞ் சாத்தி — முதுபிறவிப்

பேரா ழியினின்று மேற்றுவான் பேரொளிசேர்
சீராழி சாத்தித் திருவிரற்க — ணோரருஞ்

சொற்கடக நாயேனை வந்து தொழச்சொல்வா
னற்கடகஞ் சாத்தி நலஞ்சிறப்பப் — பொற்கொடியா

ராகு வலையங் கழுந்தாம லாட்கொள்வான்
வாகு வலையம் வலஞ்சாத்தி — மாகவலை

தீராஞ் சாத்தவினை தீரா ரெனவருள்வான்
பேராரஞ் சாத்திப் பிறவியெலா — நேராக்

குருத்தோடு தீர்ப்பான் குழைக்காதிற் செம்பொற்
றிருத்தோடு சாத்திமறுச் சேரா-திருக்குமதிச் [டும்

செவ்வித் திருமுகனைச் சேர்ந்தடியேன் கண்ணிரண்
வெளவிப் பெரிய மயறீர்ந்து - மெய்விளைப்பா

ளுகத் திருக்கோல மாங்கொன்று கொள்ளாதே
மேகத் தணைகின்ற வெண்மதியின் — பாகமே

யொத்த நுதன்மீ தொளிர்நீற்றுக் காப்புத்தன்
பத்தர் வினைநீறும் படிசாத்திப்- பித்தனை

னிட்டவொரு பட்டத்திற் கெல்லா மிசைந்திருப்பான்
பட்ட மழகு படச்சாத்திக் - கட்டவுடல்

காட்ட மணிந்தழலிற் காட்டாமுன் றனெனக்குச்
சூட்ட மணிமகுடஞ் சூடித்தா - ளுட்டமிலாப்

பேயான நாயேன் பிதற்றுந் தமிழ்மாலை
யாயாமற் சாத்து மருளினு — னுயாவென்

வாண்மாலை மெய்யென்று மங்காமே செங்கழுநீர்த்
தோண்மாலை சாத்தித் துயாகலக்— கோண்மாற்றும்

வேதகத்தி னன்னம் புள்ளும் விடைதவிரப்
போதகத்தின் மீதே புகுந்தருளி — யேதுவற்ற

முத்திலகு நன்குடையோ ருள்ளத்தே முற்றுமெமை
முத்திலகு நன்குடைகண் மொய்த்துவர - மற்றக்

கொடிய பிறவிக் குலேவோரை யம்பொற்
கொடிக ளெழுந்தழைத்துக் கொள்ள - விடுசகடு

போலவட்ட மாகவரு பொய்ச்செல்வ மென்றேயட்
டாலவட்ட மெங்கு மசைந்துவரக் - கோலமுற்ற

மூர்த்திகளு முப்பத்து முக்கோடி தேவர்களு
மேத்தி யெழுந்துவிழுந் தென்புருகிக் - கூத்தாட

விண்ணோர்க ளேற்றும் விரைத்தூப முமொழிய
மண்ணோர் நறுந்தூப வான்புகைதா - னண்ணரிய

மெய்த்தேவ தேவன்றன் மேதினியு ளானென்று
புத்தே ளுலகிற்குப் போயுரைப்பச் - சித்தமுறுஞ்

சல்லியங்க ளெல்லாந் தவிரச் சதிரான
பல்லியங்க ளெங்கும் பரந்தொலிப்பத் - தூல்லியங்க

டாவொன்று மில்லாத் தனிச்சுடரான் றன்வந்தா
னூவொன்று மில்லாவொளிவந்தான் - றானென்று

மென்னையாட் கொள்ளு மிறைவந்தான் யாவர்க்கு
முன்னையாய் நின்ற முதல்வந்தான் - பன்னுமறைச்

சீரோத வொண்ணுத் திருமேனி தன்னையுமிப்
பாரோ ரறியும் படிவந்தா - ஞோத

வென்னைத் திரித்தென்னைக் காட்டி யெனைமாற்றித்
தன்னைத் தருந்தம்பி ரான்வந்தா - னென்னுந்

திருச்சின்ன மெங்குஞ் செவிகளெல்லா மார
விருத்தின்னஞ் சேவித்து மேவத் - தெரிப்பரிய

சுத்த நெறியார்ந் துறவி னெறியறியுஞ்
சித்த ரிருமருங்குஞ் சேவிப்ப - நித்தமொழி

வில்லாம லோது மெழின்மறைகள் கண்டறியா
நல்லான் மணிமலர்த்தா ளுத்தழும்ப - வல்லவர்தம்

பாமாலை கொண்டு பணிந்தெழநன் பத்தர்கணம்
பூமாலை கொண்டு புகழ்ந்தேத்தக் - கோமா

னெழுந்தருளுங் காலை யெழிலடியார் கண்ணீர்
கொழுந்தாளம் போலே குதிப்பச் - செழுந்தரணி

யூரா ருவந்தருளி யோங்கு மணிமாட்சி
சீரார் திருவீதி சேர்ந்தருள - வோரரும்

வான மதிதயங்கு கோபுரங்கண் மண்டபங்க
ளோனை மணிமா ளிகையிடங்க - ளானடைய

நாணு மடனு நலனு மினவளையும்
பூணுங் கலனும் புனைகலையும் — பேணாது

முள்ளமு மாவியு மொன்றொழியா மேதம்மை
விள்ள விசைந்தீண்டி மெல்லியரால் — வள்ளலார்

தாளிணையை வந்தித்துத் தம்முடைய மெய்மறந்து
கோளில் பொறிபோற் குழறுவார் — மீளா

வுணருவா ருண்ணு ரமிர்தைத்தங் கண்ணாற்
புணருவார் புண்ணியனே! யென்பா — ரிணையிலாத்

தோற்ற மிருந்தபடி யாரச் சுருதிகண்முன்
சாற்ற வரியபொரு டானென்பார் — போற்றவரும்

பண்டி தருமறையும் பாரோரும் வானோருங்
கண்டு தொழவரிய காரணனார் - தொண்டர்க்குக்

காட்சி கொடுத்தருளக் காசினிமேல் வந்ததொரு
மாட்சிமைகா ணென்று வனப்புறுவா - ராட்சிசெய்தார்

தம்மை மயக்கந் தவிர்க்குமே தானேதா
னெம்மை மயக்குவா னென்றிசைப்பார் - தம்மை

முனியா வருந்தவத்தை மூண்டிவனைச் சேர்ந்துந்
துனியாம றேமென்று சொல்வர் - ரினியானெம்

றுள்ளமே மேவ வொழியா திருக்கருணை
வெள்ளமே யென்று விளம்புவா — ருள்ளவி

னோமகனேப் செய்பு மிவனொழிய நுண்ணிடையீர்
காமனும் வேறே கருதுமோர் — யாமறியப்

பற்றற்றோர் தங்கள் பரம்பொருளாய்ப் பல்சமய
முற்றுற்றோர் வேண்டு முருவமுமாய் - மற்றுற்றோ

ரெல்லார்க்கு மெல்லாப் பொருளா யிருக்கத்தான்
வல்லா னிவனென்று மாமறைகள் - சொல்லுவதில்

வீரனையே யானுமிம் மெல்லியலார் தம்மனமு
மாரனே யாகை வருத்தமோ — சேரிழையீர்

பூண்ட வனைகலைநான் போனாலு நம்மைநா
மீண்டு கொடுபோக வேண்டாவோ - வாண்டகையே

வேண்டேரோ வென்பார் விரையீ றுரையெல்லா
மாண்டேரோ வென்று மறுகுவார் - மீண்டும்

விழுவார் தொழுதெழுவார் வேர்ப்பார்தாம் விம்மா
வழுவார்நீ யாளாயோ வென்பார் - வழுவாத

பேரருட்க ணில்லையோ வென்பார் பெரியோனுக்
காரருட்க ணென்பாலே யாமென்பா —சீரருட்சேர்

பொன்னடிகள் வந்து பொருந்தப் புவிமடந்தை
யென்னதவஞ் செய்தாளோ வின்றென்பா – ருன்னரிய

சீமான் மணிமார்பிற் சீர்மாலை தான்சாத்தும்
பாமாது பெற்ற பதமென்பார் – பூமாதின்

புண்ணியமே யென்பாரிப் பொன்னார் திருமேனிக்
கண்ணியளே சால வவளென்பா – ரண்ணல்

வசையில் புகழ்மாதை வாழ்த்துவார் மன்றும்
விசையையே வீறுடையா ளென்பா – ரிசைபெரிய

ஞானக் கொழுந்துற்ற நன்கென்பார் நற்சுருதித்
தேனப் பதமிரக்குஞ் சென்றென்பார் – மேனி

யருளோகா ணோர்க வாள்கின்றா னென்பார்
வெருளேது மின்றிப்போய் வேண்டிற் – றருளேசெய்

யானந்த வெள்ளக் கலவி யடியேன்பாற்
றானந்த வாராளே தானென்பார் – தேனே

புலன்களினா லுள்ளபயன் பொய்யன்றி மெய்யே
நலன்களிகூ ரப்பெற்றே னாமென் – றலம்புனைவா

ராதரமு மாராமை தானு மதிசயமுந்
தீதரநீக மேன்மேலுஞ் சென்றின்னே – யோதியவர்

சிந்து மலர்க்கணைக டான்றெரிந்து சீராய
வெந்தையளி நாணுக்கி யின்பவேள் — பைந்தொடியார்
சொல்லு மனனு முடையவொரு சொற்கரும்பு
வில்லினழிக்க விரைவுற்றான் — சொல்லே.

# பேதை.

வடிக்குங் கிளிப்பிறப்பு மாற்றறியாப் பாலன்
பிடித்தது வேபிடிக்கும் பேதை — யடுத்த
தறியாப் பருவ மறியாமை தாயைப்
பிறியாச்சிறுகுழந்தைப் பிள்ளை — கிறியாய
மாயைக் குலக்கொழுந்து மாஞால மர்ணகருத்
தீயை மதியாதே சென்றணைவாள் — வாயாத்
தணக்குந் திருவேண்டித் தாழ்ந்தோரை யுந்தான்
வணக்கஞ் செயாநின்ற வல்லி — கணக்காயர்
பாடமே யோதிப் பயனென் றறியாத
மூடமே யான முகத்தினை — னீடு
கடற்புவன மீரேழுங் காமனுற் செங்கோ
னடக்கு முறையே நடப்பாண் — மடக்குதலைத்

தப்பா வினைத்தளையைப் பூண்பா டணையொருகான்
மெய்ப்பால் வினவ வினைவறியான் - மெய்ப்பாலாங்

கந்தஞ் சுவையொளியூ றோசைக் கடுவிடஞ்சே
ரைந்தலை நாகத்தை யாங்கெடுத்துச் - சிந்தை

சுழல வுடலைச் சுழலச் சுழலக்
கழல வுதறும்வகை காணு - ணிழல்போலப்

பொய்யேயாய்க் காணும் பொருளெல்லாம் பொன்றாது
மெய்யேபோற் காணும் விழியினுள் - வையகத்தோ

வாதைப் படுகின்ற மாமோகக் கையாலே
போதப் பெருங்கண் புதைத்தொளிப்பா - டூற்ற

மையல்சிற் றில்வாழ்க்கை வாழாதே லாம்வாழ்ந்து
செய்யக் கடவதெலாஞ் செய்தாலும் - பொய்யாகி

யின்று பிறந்தார் கணக்காயு மின்னுமிது
நின்று நிலையா தெனவின்றிப் - பின்றையு

மூனிழைத்த வில்வாழ்க்கை யுண்மை யெனநினைந்து
தானிழக்க நின்று தளர்வளவில் - வானிழக்க

முன்னை மறையாற்ற மூவாத மூர்த்திகளு
மின்னு மறிவின்றி யீடழிய - வென்னைத்

தாமறியக் தேயாண்ட தம்பிரான் வந்து
நரருருவாய் ஞாலமெலாங் காணத் — தரணிதனிற்

பொன்மாட வீதியினுட் போர்தகத்தின் மேல்வாலுஞ்
சென்மாந் திரியத்திற் செய்தவத்தான் — முன்மேவு

புல்வினத்தை நீங்கியிறை பொற்று டொழுவிரும்ப
நல்வினத்திற் றேழியர்பா னன்கணைந்து - சொல்வீ

ரிவரா ரெனவியப்ப வெம்மையும்வந் திங்கே
யவர்கா ணடிமையுகந் தாள்வார் — கவாரதே

தம்பே ரழகுல்கிற் றுங்காட்ட வேண்டியபோ
தெம்போ லெழுந்தருள்வ ரித்தனைகாண் - ஒரம்பேரீ

கைதொழா யென்றவரைக் கைதொழா யென்றுரைத்
செய்தவா செய்தவா செய்தற்றுண் - மைதீர் [தாள்

திருவுருவங் கண்டாலென் செந்தாமரையும்
பருவமலா தன்றலாப் பண்ணுன் - மருவிவருந்

தன்னயர்பு தன்னுலே தையலுந் தற்பயுக்கு
மன்னையர்பா லேசென் றனுகினுள் - பின்றேத

பேதும்பை.

லாகும் பெதும்பை யறியப் படாத்தவமும்
பாகொன்று கல்விப் பயனதுவுஞ் — சோகமறக்

கற்றோ ருரைக்குங் கசடறு நுண் கேள்வியும்
பற்றேது மில்லாப் பரனருளு - முற்றுவரு

பாக்கியமுஞ் சேர்ந்து பயந்த பரிணமை
மூக்கி யறியு மொளிமதிய - நோக்கு

முளைந்த னிடையே யொருகாற் கொருகால்
வளர்ந்து வருவதொரு வல்லி - விளம்பு

பலகலைப்பா லாய பயன்கருதி யல்லாக்
கலகலப்ப தெல்லாங் கழிக்குங் - குலவன்னங்

கண்டதெல்லாங் கானலினீ ராகக் கடைப்பிடித்தங்
குண்டதெலா முண்டிலவா யேயொழிந்து தண்டறவே

செய்தவையுஞ் செய்திலவா கச்சிதைந்து தீங்கறவே
யெய்தவையு மெய்தாத வாயிழந்து - மைதவழுங்

கார்செறித்த மின்னுங் கனவுங் கருதரிய
நீரெழுத்து மென்ன நிலையதுதா - னோரிடத்தி

னில்லாத வாழ்க்கை நிலைபெற லென்னேயென்
றல்லான தும்பகலு மாய்குவா - னில்லா

வுருபியா வொன்றினையு முள்ள படியே
நிருபியா நின்ற நிறத்தாள் - பெரியோர்கட்

கான்வையே செய்ய வடியிடுவா ளங்கவர்முன்
போன வழியதற்பின் போகுவா - டாரொருவர்

நிந்தியா நல்லு நெறிநடப்பா ணீவுதலை
முந்தியா நின்ற முகத்தினாள் - சந்த

மறைநா றியமதுர வாயாள் குரம்பைக்
குறைநாடு நல்வினிய கூற்று - ணெறிகாணுப்

பாலணதுவாய் காலமே பன்னுபவ
மாலமெனவிழிக்கு மங்கணு - ளோலக்

கடியா விடினன்றிக் காயத்தி வர்ழ்க்கை
முடியாவென் றோதி முடிப்பாள் - படியொழிய

வானகமு மீண்டு வரத்தவிரா தாகினது
லூனகமே யாமென் றுணர்குவர்ண் - ஞானமலாக்

கன்மபா வங்கள் கருச்சிறையுட் கட்டியிடுந்
தன்மபா வங்களெனத் தான்குலைவா - ணன்மைமிக

நின்று நிலையென்று நிலையாய நின்மலனை
யன்றி யிலதென் றறைகுவா - ளொன்றுதனை

யோதி னவனையல தோதா வுபநிடந்தான்
நீதின் மொழியாளைச் சேர்ந்திருந்து-பேணதமையால்

வந்த பிறவி மயக்கமற மானுடனா
யிந்த வுலகத் தெழுந்தருளி — யெந்தை

யுரைக்குந் திருவார்த்தை யொன்று மொழியாத்
திரைக்கொண்ட தீப்பிறப்பு வாரிக் - கரைசேர்

புணையாகச் சென்னி பொறித்தருளும் பொன்னா
ரிணையா ரடிப்போ திரண்டுந் - துணையாக

நிற்குணனை யாமேத்த நின்மலன்று னீக்கியருண்
முக்குணங்க ளாய வொருமூன்று - நற்குணனைச்

சந்தித்து நோக்கத் தரியா தழிவுபடு
மந்தக்கரண மவைநான்கு — மிந்த

வுடலா னதிலிறைவன் றொன்றுமு னம்மை
யடல்செய் புலனெறிக ளைந்துங் - கடலான

காம முதலாறுங் கண்ணாளன் மண்ணிடையே
யேம முறவிங் கெழுந்தருளி - நாமொழியும்

பண்டைப் பிறப்பேழும் பாடிப் படியேழுந்
தொண்டுற்றுக் காணாத் துணர்க்கழல்கள்-கொண்டாடு

மெல்லையினி லென்னையுமாட் கொண்டபிரா னெவ்வி
[னையுங்
கொல்லுமதமாமேல் கொண்டுவர —. மெல்லியலுங்

கூந்தல் சரியக் குதித்தோடிக் கோமான்முன்
காந்தள் பழித்த கரங்குவித்தா - ளேந்தரிய

வஞ்ச மகலவரு மானுடனுர் தம்முடைய
கஞ்ச மலர்மேனி காண்பளவி - னெஞ்சமுட

னங்கமெலா நீங்கிவனே யாமென்று நாடினு
ளங்கணவன் மேல்வைத்தற் காதரித்தாள்-பங்கயையு

மாயமெலாம் பார்த்தவரை யஞ்சினு ளாகியிந்த [னில்
மாயமெலா மென்மனத்தே மாற்றென்றுள் — காயமெ

வேறுயி ருனிதற்கு வேறுயின வயலாத்
தேருமை யென்னென்று செப்பினுள் - வேறுகத்

தன்னையும் பார்த்தருளத் தானும் பெரிதுவந்தாள்
பின்னையும் மச்சம் பெரிதுற்று - ளுன்னையலால்

வேண்டாத மேலோ ருடனே வினைதீர
வாண்டாலோ வென்பாள்போ லாயினுள் - மீண்டுந்

தொழுதாள் பலவென் றுறவிப்பே ராசை
முழுதாளுண் முலைக் கெழுந்தாள் - பழமறைகண்

# ம ங் ள க.

மாசற வோதி வழியே படிந்துறவித்
தேசுக ளெல்லாந் திகழ்மங்கை - யீச

னுவப்பாலே கோடற் கொருவிளக்கு நல்ல
தவத்தோ ரியாவர்க்குஞ் சார்பு - சிவத்தாரும்

பத்திக்கு வித்தரிய பாவனைக்கு மேவுதுணை
முத்திக்கு மூல முழுதுமாஞ் — சித்திக்கு

நல்லோர் தெளிந்தநெறி ஞாலத் தியற்கையினை
யெல்லா மொழிக்கு மியல்புடையா - டொல்லை

சுருதிப் பொருள்விளங்கத் தோன்றினா ளான்ற
யிருதிக்குங் கண்ணாம் விளக்குக் — கருதியே

கற்றோர் பெறவருந்துங் காமங் கலரான
மற்றோர்க்கு நஞ்சாய் வளர்மருந்து - சிற்றின்பந்

தன்னில் விளையவுறுந் தாரணிக்குப் பேரின்பக்
கன்னல் விளையுங் கரும்பென்று — மன்னவே

சென்றடை யாதி திருவேதந் தேய்த்து
நன்றுடை யாரி னலனுடையா - ளொன்றினையும்

வேண்டுந் திறன்மறந்து வேண்டாதாள் வேண்டுங்
மீண்டும் பிறவாமை வேண்டுவா — ளீண்டத் [கான்

துடிக்கு மனத்தாலாந் துயர்ப்பிறவி யெல்லா
முடிக்க வினைதான் முடித்தாள் — படிக்கணங்கே

யன்ன நடையா ளனைத்துலகும் வந்துறினுந்
தன்ன னடையிற் றளராதா — ளின்றுசெய்

பொய்தாய வெய்ய புலனைத் தலைவளைத்து
வெய்தாய செய்யும் வினைவழியா — டூய்தாய

வாய்மை மணநாறும் வாயாண் மறவியினுந்
தீமை விரவாத சீர்மொழியா — டூய்மைமிகும்

வானிலத்தோர்க் கெட்டா மறையின் முடிவென்னு
மேனிலத்தை யேறி மிகவுள்ளந் — தானலர்த்து

மன்பாய தோழியருந் தானு மருபரனார்
பொன்பாவும் பாதம் புகழ்ந்தேத்தி — முன்பாய

பந்தத்தை யெல்லா மெறிந்தடித்துப் பார்வையினுற்
புந்திக்க ணெங்கும் புரையறவைத் — தந்தாக்தே

கீழே யெனைத்தன்னை நாடக் கிடையாமற்
றூழேது மெங்குஞ் சுழன்றுடி — வாழியென

மாறுகின்ற பேருததி மாமறைகள் ளாயிரமுங்
கூறுகின்ற தெய்வக் குழாத்தொலியும் — வேறறியாத்

தொண்டர் துதியொலியுந் தோத்திரஞ்செய் தே
வண்டரொலியு மதிர்ந்தியம்ப-வெண்டிசையே [ழ

ழோசை யறுசுவை யைம்பூத நான்கூழி
யாசினிகழ் காலமூன் றாகியே - மா

வீருருவா யொன்றாகி யெல்லாமா யல்லாதா
ஞேருருவா யிந்த வுலகத்திற் - சீரு

மாதவத்தி னானே மனுடரைப்போ லேஞான
போதகத்தின் மீதே புகுந்தருளி - யே

மருமறைகள் கண்டறியா வம்போ ருகத்தா
ளிருமருங்குங் கண்டடியா ரேத்த - வருமா

தன்செவியின் வந்தணுகா முன்னமே தானுமவன்
பொன்செய் கழலிணையிற் போய்வணங்கி முன்செ

சீரார் திருமேனி தன்னருமை சிந்தையகத்
தோராதே பார்க்கவொருப்பட்டா - ணோரா

பாராதே பார்த்தான் பரமன் றிருமேனி
நேராகக் காணா நினைவழிந்தாள் - பே

வுணரா வுறங்கா துணராதே யென்னைப்
புணரா யெனவும் புகன்றாள் - மணவாள

சீராரு ஞானத் திருநயனத் தாலொருகாற்
பாராணோ வென்று பலநினைந்தா - ளோராரும்

போதகமே யான்வருந்தப் போகாநின் றாயிதுதா
னாதகுமோ வென்றென் றயர்வுற்றா - ளோதரிய

# மடந்தை.

மெய்யின்பந் தன்னின் விருப்ப மெனுமடந்தை
பொய்யின்ப மெல்லாம் புறக்கணித்த - துய்ய

துறவிக்கு நல்ல துணைத்தோகை யெண்ணில்
பிறவிக் கொருமருந்து போல் - நிறைவுதரு

ஞானோ தயக்கொழுந்து நாமெனதா நின்றுமழலு
மூனோடும் வண்ண முரவிக்கும் - வானோனை

யோவுத லின்றி யொருகா லொழிவறவே
கூவுமொரு கோகிலப் பிள்ளை - மேவரிய

நல்லொழுக்கந் தன்னை நடைபயிற்று நல்லன்னம்
புல்லொழுக்கில் லாநெறியிற் போய்ப்படரும்- வல்லிக்

கொடியையம் புலத்தோடாக் கோமளமா னென்று
மடிமகிழ்வு தீர்சாந்தி மானின் - குடிவிளக்கத்

தோன்றிய கொம்பறத்தின் சூளா மணியிறைபா
லூன்றிய வன்பி னுயிர்க்காவி - தோன்
யிறுவதா கின்ற விருணீக்க வந்த
மறுவிலர் நன்மா மதியம் - பிறவி
வற்றை யிளங்கன் றலறுங் குரற்கேட்ட
கற்று வெனவே கலைகடெரிக் - தற்றபொ
ளெங்கேனும் யாவ ரிருந்துரைப்பக் கேட்டிடினு
மங்கே செவிசென் றடைகுவாள் . - சங்கே
மான நலன்குலன்கொண் டாடா ளளப்பரிய
ஞான நலன்குலனு நாட்டுவா - ஞானமில
வந்தண ரென்போ ரறவோ ரெனுமுறையைச்
சிந்தையி னென்றுந் தெளிகுவா - ளந்தைகழ
பூண விரையுமலர்க் கையாள் புரையறவே
காண வலம்வரு கண்ணினள் - பேணி
பிணக்கஞ் செயாவழியே பேணுவாள் பேணு
வணக்கஞ் செயாநெறியே வாராள் - கணக்கில்ல
வேதனை யுன்னி வெருவி விளங்கொளியா
நாதனைநின் றேத்துகின்ற நாவினள் - சாதனங்
ளான வொருநான்கு மாபரண மாயுடையா
ளீன மிருமூன்றி னீடழித்தா - டாளுழிய
வல்லாப் பொருளாயா ளாயுந் தனையாய
வொல்லாம லுள்ள முடைந்துகுவா - னல்விரு

நாலங்க யோகமெனு நல்லுயிர்போற் றோழியர்தம்
பாலங் கிருந்துமிகப் பாவித்து - மேலங்
கவநீங்கு மெல்லையினி னாமுதே யென்றன்
பவநீங்க நன்னெஞ்சே பாராய் - தவிராதே
மண்டலத்தி னில்லா மலனே பொழியுமுடற் [டிக்
கொண்டனுக்கும் யாரொன்றுங் கூறேன்காண்- மண்
கெடுக்கும்வா யாங்கிளியுங் கேட்டார்வாய்க் கேட்டு
வடிக்கையால் வாய்திறக்க மாட்டேன் - செடிச்சேரு
நாற்றமென வோராதே நன்றிதிலே கொண்டாடி [ன்
மாற்ற மனங்கடந்தான் மாமலர்த்தாள்- போற்றிச்செ
றண்டமா ருந்தே னருந்தா ததனாலே [ளைப்பக்
துண்டமாம் வண்டிற்குஞ் சொல்லேன்காண் - கண்டு
கண்ணுய தோழியர்க்குங் கண்ணன் கழல்குறுக
வொண்ணுமை யாலே யுரையேன்காண் - புண்ணி
னெறியும் படைபோ லியம்புவார் சொல்லே
யறியுஞ் செவிச்செவிலிக் காற்றே - னிறையு
நிலையா னதையுற்று நில்லாப் பொருளைச்
சிலையா மெனப்பெரிதுந் தேறிப் - புலையாய
தன்னை மிகமதித்துத் தானழியச் சிந்திக்கும்
பின்னக் கரணப் பெருஞ்சுற்றத் - தின்னலே
பட்டே னிதுகால நின்சீர் பரவாதே
கெட்டே னினியான் கெடாதபடி - திட்டி

காவல் லவன்றந்த தொன்றிளை நீ கொண்டு
வரவல்லை யேயென்று வாழ்த்திப் - பரவெ
வந்தா னருட்சொருபா னந்தனென்ன மாமறையாஞ்
சிந்தா குலந்தீர் திருச்சின்னம் — வந்து
சென்று தொழுதா டிருமேனி தான்காண
வொன்று மறியாட னுள்ளத்தே - யின்றி
செய்யா னெனையுந் திருக்கடைக்கண் செய்யானை
லுய்யாதென் னுவி யெனவுரையா - மெய்
யுளவாய நின்று ளுடன்கூட்ட நல்ல
வளவாகு மென்றென் றழிந்தாள் - வ

---

## அரிவை.

மயித்திரி யாமரிவை மாயா விருளைச்
செயிர்த்திட வந்துதித்த தேசு - நயத்தின்
சுத்தான தோருறவித் தாரணிமே லேகிடைக்கிற்
புத்தே ளுலகிற்குப் பொலிவென்ற — வித்தென
யோவாத் தீ கற்றோ ருவந்து நுகரவுறுஞ்
சாவாது மூவாத் தனிமருந்து - பே
தெவிட்டாது தித்திக்குந் தேறநீச் செற்றந்
தவிர்த்தார்க்கு நல்லதொரு சார்பு - வுவப்பிறெ
தாதவர்க்க மாநெறியிற் சற்குரவன் றன்னடிக்கே
மாதவத்தி னற்சேர மன்னுமலர் - பே

குறுகுந் தொறுமுள்ளத் துள்ளே குளிர்ந்து
சிறிதும் பிரியாத் தெறுந்தி - நிறனிறந்த
செவ்வி தருஞானக் கதிரொத் திசையுஞ்சென்
றெவ்வுலகு மெக்கால முமெரித்து - மெய்விளக்கு
மாதித் தனைக்கண் டலர்ந்தெழுமம் போருகநாட்
போதித் தனையும் புறஞ்சோரக் - கோதற்ற
வின்சொற் கரும்பினிமை யெல்லாந் தருமின்ப
நன்சொற் கடற்பிறந்த நல்லமிர்த - முன்சேர்ந்து
கண்ட பொழுதினெடுங் காலத் துறவாகக்
கொண்டு கலந்து குணமனைத்துந் - தண்டறவே
நாடிநடு வாடாம னட்டதற்பி னூழிகையும்
வீடியிலை யாதவொரு மேன்மையா - ஞேடி
னொருப்பாய நெஞ்சினையு நீராகப்பேசி
யிருப்பா ளிருசெவிமீ தேற்று - நெருப்பெனவே
சொன்னோரை யும்புகழ்ந்து சொல்லுவா ளொருநாளு
மின்னுசெய் தாரு மிடும்பையுற - மன்னு
மினிதாய செய்யு மியல்புடையா ளோர்கால்
முனியா மதிநன் முகத்தா - டனையா
ரிகழ்ந்திடினுங் கேளா விருப்பா ளுளதே
புகழ்ந்திடினு மெய்யே பொருதா - ளகழ்ந்திடினு
மன்றே மறக்கு மணியிழையாள் செய்நன்றி
கொன்றலுந் தான்மறவி கூடாதா - ணன்றுய

சீலங் குணனொழுக்கஞ் சீர்வாய்மை செய்தவஞ்
ஞாலம் பரவ நடந்திடுவான் — மால்பு
வித்தரித்து நான்முகத்தி னுலெடுத்த வேதமே
சித்திரப்பொன் மண்டபத்தைச் சேர்பளிற்-
(ரம்

வானீர்மண் டீகா லதனுல் வகுத்தமைத்த
ஊனர் பொறியா லொருபாவை — தாமே
றெச்செயலுந் தான்செய்ய வல்லதுபோ லீதிய
விச்சையினை நோக்கி மிகமெய்ச்சி - வை
திரிக்கின் றவனைத் தெரியாளா யென்னை
யிருக்கின்ற வாறென் றியம்ப - விரிக்
வாரணத்தி னந்தமெனுந் தோழி யனைத்தினுக்கு
காரணத்தர் தாமாட்டுக் காண்கைகாண், கோர
(லெ

மூப்புட் பிணிமுடலை மோகாதி சேர்குரம்பை
கோப்பு பலகொள்ளுங் கூத்தாட்டு - தீர்ப்ப
தாமே திருக்கோலங் காட்டித்தா டந்தென்னப்
பூமே லெமையும் பொருட்படுத்தி - யாமே
வந்திடுமே வானவருங் காணுத மாமலர்த்தா
டந்திடுமே யென்றுள்ளந் தான்கலங்கிச் — சிந்தை
மாகுலத்தி னன்மயக்கு மக்கா லமளிமிசை
மாகலுழ்ச்சி தீரவொரு மானுடனு - யேக

மோனமா கின்ற மொழியாண் முயங்களவி
னீனமா மாயை யெழுப்புதலுந் - தானுமெழா
வென்னுயி ருளறியே னென்னுமே யத்துயரஞ்
சொன்னான் முடிவிற் றொலையாது - பின்னையவன்
சீரடியார் பாதத் திருமருந்துஞ் சேர்ந்திலளேற்
பாருடனே வீழ்ந்தழிந்து பாராகு - நேரா
வருளே திருமேனி யாகு மெனக்கேட்ட
தெருளே துணையாகத் தேறி - வெருளார்ந்தே
தேடுமா மூவர்க்குந் தேர்வரிய வோர்மேனி
கூடுமேற் கூடென்று கூடலினை - நீடுந் [த்தி
தொழுதிழைக்கு மெல்லையினிற் றோத்திரஞ்செய்தே
பழுதாற்றி யார்த்தெழுந் திட்டாடு - முழுமதஞ்சேர்
பத்த ரொலிய திரும் பல்லியத்தின் முந்திவா
நித்த னெழுந்தருளு நீதியினை - யொத்து
மெழுதா வலம்புரிக ளெம்மருங்கு மார்த்த
பொழுதா மகிழ்வுரைக்கப் போகா - தொழுதோடி
வந்தாள் பெருமான் வருமா மதகரிமுன்
கொந்தா ரணிவளைக்கை கூப்பிக்கொண் - டந்தோவிக்
கோத்தார் கடலுங் குவலயமு மால்விசும்பும்
பூத்தா னெழுந்தருளும் போதகமே - மாத்திரையுந்
தேறாப் பெருங்கவலைச் செந்தீ யறப்பொழியு
மாறாப் பெருங்கருணை மாமுகிலே - யாறாத்

துடிக்கு மனன்வலீயுஞ் சூழலெல்லாம் புக்கு
மடிக்கு மதவா ரணமே — நடிக்கிெ
வேடங்கள் கூட பிடித்தகன்று வேறுரையாற்
றேடும் பரிகராச் செற்றெறிந்து - பாடகவ
பத்தருளக் கூடத்துப் பாசமவர் நேசமா
மெய்த்தறியிற் கட்டுண்ணும் வேழமே - தத
மயலா கியசமய மாறையுநி வந்த
வியலாலே யீடழித்து விட்டேன் — மயல்
ருருபகத்தாற் செய்யு முறுப்பினீ பார்த்த
நிருபகத்தார் நேராக நீத்தே - னுரு
சமையாத பேராசைத் தாயையுநீ தந்த
வமைவாலே யானு மமைந்தேன் - கவை
ரழலா மதிகோப மாறி வருகின்ற
நிழலாலே யானுறி நின்றே - னுழ
விதம்பலவா குப்பிறப்பு மேவுங்கருணை
மதம்பொழிய யானடைய மாய்த்தேன்- பதம்பணி
தங்கணி லேயுறையுந் தத்துவனே யெப்பொழுது
மெங்கணி லேகொண் டெழுந்தருளி — யிங்கெ
னுடைய வுடைமை யுடலுயிரு முற்று
மடைய வுனதென் றலர்துஉய் — மடவ
னேத்து முறைகளெலா மீசன் றிருச்செவியிற்
சேர்த்துத் திருவுள்ளஞ் செய்தருளிப் பார்த்திவடா

முன்கிடைத்த தென்ன தவமறியே மூர்த்திபவன் [ன்
றன்கடைக்கணெல்லாஞ் சாற்றினான் - பின்கொடிநி
ருவித்தா ளெல்லாந்தா னுணா திசயித்தாள்
பூவித்தாள் கண்ணீர் பொழிவுற்றாள் — மேலென்
விளம்பு மளவோ வியந்த படி மெய்யே
யுளம்புகுந்தா னென்றாரு ளுற்றாள் — விளம்பரிய

# தெரிவை

வெத்தனையோ கால மிறந்துவரு மென்னையுவந்
தித்த னவனுண்ட வற்புதமும் — நித்தனவன்
றன்பெருமை யோராதே யென்னைத் தனக்குரிய
வன்பரிலே கூட்டு மதிசயமும் — பின்போர்
களங்க முறுதவகை காரணனோர் சொல்லால்
விளங்க வியம்பும் வியப்பு - முளம்புகுந்து
பன்னரிய தேனைப் பருகப் பருகவரு
மின்னமுதென வொண்ணு விரதமும் — மெந்நாளுந்
தொல்லைமறை தேர்ந்த சொருபானந் தன்றந்த
வெல்லை யிலாதபே ரின்பமுஞ் — சொல்லரிய
நல்வித் தகனுரை நாளும் புதிதாகப்
புல்லிப் புணரவரும் போகமும் — மல்கு
மலக்கண் கெடுத்த வடியிணையை நாளுங்
கலக்கும்போ துள்ளக் களிப்பும் — புலைத்தக்க

நாயான் வென்னை நயந்தபரிசு நினைந்
தோயாம லுள்ள முருகுதலுந் - த
சிவனடியின் றிப்பிறிது தோராமே நாயேற்
கவனரு ளால்வந்த வன்பும் - த
தெமையா ளுடையார்க்கே யெப்பணியுஞ் செய்ய
வமையா தெழுமா தரமுஞ் - சக
வொருவடிவ மாக்கி யுலகெலா மூய்யப்
பெருவடிவந் தானுடைய பெம்மான் - றருவெ
பத்தியா குந்தெரிவை பாதாதி கேசமுறத்
தித்தியா நிற்பதொரு தீங்கரும்பு - மூத்
குருவிதுவே யென்ன வுயர்தவத்தோ ரென்றும்
பருக வினிதாகும் பாகு - பரனடி
வாடப்ப டாதமலர் மாமுனிவ ரெஞ்ஞான்றும்
பாடப் படுந்தெய்வப் பாமாலை - தே
கலைதடுமா றத்தன்னைக் காத்ததனைப் பார்த்துத்
தலைதடுமா றுகிவருந் தையல் - புலை
களவுபடா வுள்ளக் கரையழியப் பொங்கு
மளவுபடா வானந்த வெள்ள - முளமே
பாவிக்க வொண்ணாத பாவனை சீர்பரவா
ராவிக்கு நஞ்சாகு மாரமிர்து - (
ருளாரிய தேவ ரொருங்கிய காலத்துந்
தளராது நின்ற தனத்தா - டெளிவுத

பொன்செய்த தாள்கள் புகலுங்காற் றன்னுள்ள
மென்செய்ய வென்றறிய வில்லாதா — டன்செய்ய
கண்ணாலுங் கண்ணா ளனையொழியக் காணாதா [வன்
னெண்ணாலுஞ் சிந்தையில்வே றெண்ணாதா — ளண்ணால
பேரொழிய வேறொன்றும் பேசாதாள் பெம்மான்றன்
சீரொழியக் கேளாச் செவியினாள் — பாரொழிய
வானகத்தை யேபெறினு மற்றவன்பொற் றாளொழியத்
தானிறக்கஞ் செய்யாத் தலையினாள் — ஞானத்
தழுந்தா வகையாண்ட வர்க்காம் பணியே
தொழும்பாகிச் செய்யத் தொழுவாள் — முழுந்துசீர்
மெய்யடியார் சேர்ந்திருப்ப மேனி யினிதிருந்து
துய்ய சொருபன் றுணையடியாஞ் — செய்ய
மருவார் மலர்சூடி வாதவூர் வள்ள
றிருவா சகமாகுந் தேறல் — பருகா
வுருகா வுயரா வயரா வுணரா
விருபா தமுநா விசையா — பெருகா
வுவவா வுடையா னுடையானென் றோதா
மிகவா தரமே விளையா — வகமே
கனியா வெனையாள் கருணா கரனே
யெளியா யரியாயென் றேத்தா — வெளியே
யெழிலார் நிருபா திகனேயோ வென்றென்
றழலார் மெழுகா வழியா — விழியா

வொழியா வுள்மா யுடம்பெல்லாந் தானே
விழியா மிருதாரை மேன்மேற் - பொ
விழையா விதிர்விதிரா விம்மா வியவா
தழையா மொழியுந் தளரா - வளை
முறையோ வெனமொழியா முந்நீர்போ லேங்கா
சிறைமீ றியபுனல்போற் செல்லா - நிறைபே
தேறு திகையா சிறிதுநகை யாகலுழா
கூறு மிகமிகவுங் கொண்டாடா - மாறு
கூத்தாடா விப்பரிசே கூறரிய பஃறொழிலான்
மாத்தாடா வென்னை வலிந்தாளப் - பார்த்த
கோலமே கொண்டாடிக் கொண்டு புணர்வதொரு
காலமே யென்றுருகுங் காலத்து - மே
வும்பரார் தேட வுவந்தென்னை யாட்கொண்ட
தம்பிரான் வந்தமையைத் தாரைபல - செம்பொ
றிருவீதி யிலொலிப்பச் சிந்தனைக்கு முன்னே
வருவனென வோடோடி வந்து - திருமே
கண்ணு யிரங்கொண்டு கண்டாளோ கொண்டேத்
வெண்ணு யிரனாவோ வென்றறியே - னண்ணல
றன்செய்தி பார்த்தோ தனதுநிலை பார்த்தோவப்
பொன்செய்த வாறறியப் போகாதங் - கெ
வுருகியோ மேன்மே லுடையான்மேற் காதல்
பெருகியோ வின்பம் பிறங்கு - மருவி

கற்றைக் குழறொடுங்கிக் காலளவு நேராக
வெற்றவெறு நீராகி விட்டவே — பொற்றொடிதா
னென்செய்தா ளென்னா ளென்கேன் சிலசொல்லின்
வன்சொல்லே யச்செவ்வி வாராது — முன்செய்த
மன்ன னெழுந்தருளி வந்த வதிமதுரக்
கன்ன லயிலுங் களியானை - முன்னேதன்
னாமை யொன்று மொழியாதன் னாவிழுத
னேராகி முன்னை நிறனழிந்து — சோரா
விழுந்து கிடந்த விளங்கொடியை மெய்யின்
முழுந்து மடிபவர்கண் முன்னிச் — செழுங்கமலப்
பாதோ தகந்தெளித்துப் பற்றிப் பரன்பாதப்
போதோடு சென்னி பொருந்துவித்து — வாதாகி
மாறுஞ் சமய மயக்கங்க ளாகிவரு
மாறுங் குறுகா வகையகற்றி - வேறுந்தா
னோதுங் கலையகற்றி யோரா வுலகத்திற்
பேதங்க ளாகிவரும் பித்தகற்றித் - தீதகலத்
தொண்ட ரடிப்பொடியே பூசிமிகத் தோத்திரமே
கொண்டு கழித்தாள் குறைகால - முண்டர்

## பேரிளம்பெண்.

மமைவு நிலையாமை யவாவறுத்த லாற்றல்
சமைவு நிறைவறிவு சார்வு — கமையினுடன்

வாய்மை யினிமைதவ மாறு வளியுவகைத்
தூய்மை பெருமை துணிவுடைமை - தீமையில்
வன்பு கருணை யருள்பே ரறமுடம்பா
யின்பமிகு மெய்யுணர்வே யீங்குயிராய்த்—துன்பமி(
பாச மகலப் பானமைத்த சாந்தியெனும்
பேச வரியவெழிற் பேரிளம்பெண் - ணேசமி(
முள்ளத் தமிர்த முகந்து நுகர்பவர்க்குத்
தெள்ளத் தெளிவுதருந் தேற - லுள்ளத்[
துயாத காமாதி யாகு மறுபட்டி
மேயாமற் காக்கு மிகுவேலி - தூயசீ
நல்லோ ருளத்தடங்கு ஞானோ ததியுலக
மெல்லா முபசமன மானவிடன் — சொல்லரிய
வெம்மானை யன்றிப் பிறிதொன்றுங் காணாதே
சும்மா விருக்குந் தொழிலுடையாள் - பொய்ம்மாயப்
பந்தமொடு வீடு மற்றும் பகரவருந்
தொந்தங்க ளில்லாத சோதியாள் - வந்திறைஞ்சும்
வானுட ரேத்து மரசுறினு மண்டமுல்சே
ரூனு கியநிரய முற்றிடினுந் - தேனுருஞ்
செஞ்சாந்து கொண்டணிந்து செம்மலர்தூஉய்த் தொ
நஞ்சாந் துயர நலிந்திடினு - மெஞ்சாத [யினு
செல்வ மிகவே சிறப்பினுந் தீதாய
நல்குரவே வந்து நயப்பினும் - பல்கியே

யென்று மிளமை கழியா திருப்பினும்
பொன்று முயிரின்றே போயிடினு - மென்றும்
பெரிதாக வேபுகழ்ந்து பேசிடினும் வீசு
மெரிபோல வின்னு செயினு - மொருபோதுஞ்
சிந்தையில் வேண்டல் செறுத லிவையன்றி
வந்தவையே கண்டு மகிழ்ந்திருப்பா - ளொந்திடவே
வெய்தாய செய்பவர்க்கு வெய்துயிர்த்து வெய்யநர
கெய்தாது வேண்டி யிரங்குவள் - வெய்தா
விடும்பை வருங்கா லிடையா தமைந்த
கடன்கழிந்த தென்றே கழிப்பாள் - விடன்போ
விறவு விழைப்பவரை யீன்றவரைத் தானே
றுறவு பகையென் றுணராள் - சிறிதுணரிற்
செற்றுடம்பை யீந்தார் செறிவுற்றார் தீமைதரப்
பெற்றுடம்பை யீந்தார் பிறரென்பாண் - மற்றுற்ற
வெத்தன்மை யோர்க்கு மெழிலார் பளிங்கேபோ
லத்தன்மை யாகு மணியிழையாள் - சுத்த
குணநா றியமொழியாள் கோதிலா ஞான
மணநா றியமதுர வாயா - டணியார்தே
கைமாறு வேண்டாவிக் காசினிக்கு வான்புனலே
பெய்மாரி போலீயும் பேரருளாள் - பொய்மேவு
மூனடைத்த வில்வாழ்க்கை யோர்வும் படிக்குலகிற்
றூனடந்து காட்டுஞ் சரிதையா - ளோரோர்

வினவும் பொருளொன்றில் வேறறவே யெல்லா
மெனவென்ன வல்ல வெழிலாண் - முன்
சீரார் சடகோபன் றித்தித்த சொல்லொழிய
வோரா பரண முவவாதாள் - ே
வன்பா யுதனை யனவரத மாராதே
தன்பாற் புணருந் தன்முடையா - - ளி
வழங்கும் பெருங்கண்ணன் வந்தருளா முன்னே
முழங்கும் பெருங்கொண்டன் முந்தத் - த
கலையை விடவெறியா கற்பனைகள் சீறு
தலையை நிலமிசையே சாயா - பல
மையழியக் கண்மல்கா வாழ்த்தா வருகாதன்
மெய்யழியப் பொங்கா மிகவிம்மா - பெ
யொருபா வனைசெய்யா வோடிச்சென் றண்ணல்
வருபா வனைகண்டு வாழா - பெரு
ஞவி தளரா வகமகிழா வவ்விடத்தோ
ரோவியம்போ லாகா வுயிர்ப்பெய்தா - கோ
கழறு கலுழா களியாகண் செல்லா
வழறு வுயிரா வுணரா - (
வருமாற்ற முந்தளரா வையகத்தோ ரெல்லா
முருமாற் றெனச்சிலர்தா ஞேதா - பெரு
யெவ்வுயிர்க்கு நீயெம்மா ஞெனின் றென்னெஞ்
வெவ்வுயிர்ப்பை நீமாற்ற வேண்டாவோ தெய்வ

தீயா லழிவித்த திண்பொற் சிலையின்றிம்
மாயா புரமெரிக்க மாட்டாதோ - வாயாவென்
னேழு பிறப்பு மெறிய மறிவாழி
யூழு மிறமெறிய வொண்ணாதோ - வாழித்தேர்ப்
பார்த்தன் வினையகலப் பண்டுன் பவளவாய்ச்
சேர்த்தசங்க மென்வினைக்குச் சேராதோ - நேர்த்தசுரர்
தாமாய நீயெடுத்த தண்டா யுதம்விடயத்
தேமாக்கு நெஞ்சை யிடியாதோ - காபாதி
நாணாளு மீராமே ஞானவா ளானிவற்றின்
வாணாளை யின்றீர வாராதோ - பேணிநினைக்
கொண்டாடுந் தொண்டர்கடங் கூட்டந் துடன்கூடித்
திண்டாட்ட நமொருநாட் டீரேனோ - பண்டியானை
மூலமே யென்றழையா முன்னமே வந்தருளுங்
கோலமே யென்பணியுங் கொள்ளாயோ - வேலநீ
தானாகப் பார்த்துந் தவிரா தெனையொறுக்கு
மூனு கியநோ யொழியாதோ - யானைக்
கூட்டியமா மாயக் குரம்பையினி லென்னைக்கூத்
தாட்டியநா ளின்ன மமையாதோ - கேட்டருளாய்
வையந் தனிலென்னை மாற்றினான் மற்றுலகு
செய்யுந் திறனுனக்குத் தீருமோ - மெய்யிலெனைக்
கூவி யருளாத வென்னேநின் கோலவருள்
பாவி யளவும் பழுதாமோ - தேவே

சொருபானந் தச்சுடரே தூயவனே வெய்ய
வருபாசந் தீர்க்கு மருந்தே — குரு
தாதாவே சங்கரனே மாலே சராசரத்திற்
காதார மேயறிவே யற்புதனே — ந
யென்று பலபலதா னேத்தினு ளிப்பரிசே
துன்று வளைகலைநாண் சோர்வெய்தி —
பலதைய லார்தம் பரிசழிய விந்த
வுலகுய்ய வந்தா னுலா.

---

நேரிசை வெண்பா.

பழுதிலா வன்பர் பணிந்தெழுந்தார்க் காட
வெழுதிடா மாமறையின் றேத்தத்-தொழுதினை
தொண்ட ருளம்புகுந்து சோரா மலாருயிரை
யுண்டருளப் போந்தா னுலா.

நாமாது பாமாலை சாத்தினு னன்கமலை
யாமாது பூமாரி யாக்கினண் — மாமலர்
பூண்டாள் குலநிலமான் போக்குநாள் வந்தெம்
மாண்டா னுலாப்போந்த வன்று.

உலா-முற்றிற்று-ஆக-நகூள.

பதின்மூன்றாவது

# சிலேடையுலா.

தத்துவவாக்கியம்.

குழகன்.

ஓங்கு விசும்பு முறுகாலு மொண்டீயும்
வாங்கு திரைக்கடலும் வையகமு — நீங்காத
சத்தாதி யிற்பிறக்கச் சாரும் புலனைந்தும்
வித்தார மாக விளைவிளக்கச் — சித்த
விகாரத் துதிக்க வியன்புலன்வெவ் வேறும்
விகாரமுஞ் சித்தம் விளக்கத் — தகாது
தெரியாத மாயையினிற் சித்தந்திகழக்
கரியாய சீவன்கட் டோன்றி — வரமாயை
காலத்தின் வந்து கரிபிறக்கக் காலத்தை
மூலப் பகுதி முளைப்பிக்க — மூல
முணையுணர்ந்த முற்றின் முதன்முடிபாய்த் தானே
தனையுணர்ந்த போதத்தே சாராத் — தனையுணர்புந்
தன்க ணுதிப்பத் தனக்குதயக் கேடின்றி
முன்கணிற் றோன்ற முழுதின்றி — யென்கண்ணிற்
றோன்றிய தோன்றறன் சோதித் திருமேனி
யான்ற முனிவர்களு மண்டர்களு — மூன்றாய
மூர்த்திகளுங் கண்டு முடிவணங்க முன்மூர்த்தஞ்
சாத்திக் கயிலாசனத்திருந்தோ — னேர்த்துணரச்

சொல்லர்ன் மறைப்பொருடான்றோன்றுமன் மா
னொல்லாரு மெங்கட் கியம்பென்னக் — கல்ல
கீழிருந்து யோக சரிதை கிரியைகளிற்
றாழுகின்ற நெஞ்சினர்க்குத் தானருளிக் — கேபூ
ஞானத்தை நால்வர்க் கருளி நலனுண்
மோனத் திருந்த குருமூர்த்தி — வ
திரண்டிவ் வுலகுந் திகைப்ப நகைப்பப்
புரண்டும் பெரும்பித்தர் போலே — யபி
கரங்குவியக் கம்பிக்கக் கண்சொரியக் கண்ட
மரங்களு நின்றிரங்க வாய்விட் — டிர
பெருங்கருணை நோக்கிப் பிறந்திறந்திக் காலம்
வருந்தருவை யோரிமைப்பின் மாய்த்த — டரம்
வல்லபத்தை நோக்கிமிகும் வானவர்க்கு மெய்த
தல்லபத்தை நோக்கித் தொழுதிறைஞ்சிக் —
மொருவா சகத்தை யுருக்கிநீ ராகத்
திருவா சகந்தந்த தேனைக் — குரு
பெருந்துறையி னன்று பிடித்தாள வெண்ணிக்
குருந்துறை நல்கியசெங் கொண்டல் — திருந்திய
செம்பொன்செய் காழிச் சிறுவன் றனைஞான
சம்பந்த னுக்குந் தனிவள்ள — னம்பி
புத்தியு முத்தியுஞ் சேரப் புணர்விக்க
வெத்தி யருட்டுறையி னேற்றுவான் — கைத்தல

வள்ளத் தமிர்துபோல் வாகீச ருள்ளத்தே
தெள்ளத் தெளிந்தூறித் தித்திப்பான் — வெள்ளத்தே
யுள்ள புவன மொழியாம லுண்டருளிப்
பள்ளிகொள் கின்ற பரந்தாமன் — றெள்ளி

யறனை துணையென் றவைவரினும் பார்த்தற்
குறமேவித் தன்பெருமை யுன்னான் — மறமேவுந்
தேரா ழினைப்போகச் செய்வான்போற் றீயபவப்
போரா ழியைப்போகப் பேசுவான் — சீரார்

முழுதுணர்ந்த தெய்வ முனிக்கணங்கள் போற்றும்
வழுதி வளநாடன் மாறன் — பழுதிலா
வெண்ணார் மறைப்பொருளை யெல்லாருந் தாமறியப்
பண்ணார் தமிழாற் பரிந்தெடுத்துக் — கண்ணீர்

திரைக்கொண்டு நெஞ்சுடைப்பத் தித்திக்கும் வார்த்
யுரைக்குந் திருநா வுடையான் — வரைப்பரிய [தை

சூழ்ந்தகன் றாழ்ந்துயர்ந்த சோதி யெனத்துதித்து
வாழ்ந்திருக்க வைத்த மணிவண்ணன் — சூழ்ந்தொழுங்
[காய்த்

தீராத சித்தமெல்லாந் தீர்ந்தற்று மீண்டிங்கு
வாராத னுமுக்தி மார்க்கமென — நேராகச்

சாதிக்க வென்று தரும்வேடங் கொண்டு
போதித் திருநிழல்சேர் புண்ணியன் — தீதி

லசோக நெறியை யறிவிப்பா னாக
வசோக நிழலமர்ந்த வண்ண — னிசாசரர்சே
தென்றிசை தானே சிவலோக மாய்விளங்க
நன்றிசை புத்தேளிர் நாடொலா — மொன்
மரணம் பிறவியுற மாசிலா வந்தக்
காணங் கடந்த கழல்க — டரணியிே
கையகத்தி னெல்லிக் கனியென்னத் தான்கருணை
செய்யத் திருவுள்ளஞ் செய்தருளி — மெய்ெ
பிறந்தவர்கள் போலே பிறந்தான் பிறழா
வறம்பொரு ளின்பம்வீ டாகுஞ் — சிறந்தபொ
னெல்லாம் வளர வளர்ந்தருளி யெம்மருங்கும்
பல்லாண் டிசைப்பப் பழமறைக — ணெ
புகழ்மாது திக்கெட்டும் போக விசையை
நிகழ்மாது வந்து நிலவ — வகமகிழ்ந்,
பூவின் மகளும் புவிமகளும் பூங்கலைசேர்
நாவின் மகளு நயந்தினிது — சேவிப்ப
சாந்தி முதலாந் தவமாதர் தாம்பெற்ற [
பூந்திருவை யென்னைப் பொருட்படுத்துக்— காந்தும
போகும் படியளித்த பொன்னைப் புலன்கடந்தோர்
யோகம் பிரியாத வொண்ணுதலைச் — சோ
மொழிக்கின்ற தாயை யொழியாதென் னுள்ளே
விழிக்கின்ற ஞான விளக்கை — வழுத்து

சுருதி மிசைவாழுந் தோகையை நாயேன்
மிருதியி னின்றகலா மின்னைக் - கருதித்
தொழுதடியே னேத்துஞ் சொருபானந் தன்றேண்
முழுதும் பெறுவதற்கு முன்னே - பழுதி
லருந்தவஞ் செய்த வறிவுடை யாளைப்
பொருந்தாவென் பொல்லா மனங்கண் டிருந்துவைத்
தாதரித் தென்னை யடியா ருடனாண்ட
பேதையை யென்றும் பிரியாத - மாதவத்தோ
ரோராத வன்பா லடியா ரடிபோற்றச்
சீராக வீற்றிருந்த செவ்விக்க - ணோராத
வஞ்ஞான னென்னு மவனு லடர்ப்புண்ட
விஞ்ஞாலத் தோர்க ளிடரறிய - மெய்ஞ்ஞானச்
சோதி மணிவாயிற் றாங்கு மணியொலிபோய்
நாதன் செவிப்புலத்து நாடுதலுங் - காதளவுஞ்
செல்லுந் திருக்கண் சிவவா திருப்புருவ
வில்லுஞ் சிறிது விரையாது - நல்லமலர்ச்
செவ்வி முகம்பொழுது செய்யாது சிற்சிறிது
கொவ்வை யிதழ்முறுவல் கொண்டதா - லவ்வளவி
லிக்கார் சிலையு மிகல்செய்யு மாதவனுஞ்
சக்ரா யுதமுந் தரைப்படுத்தி - மிக்க
மகரக் கொடியறுத்து மன்மதனார் நாமம்
பகரப் படாவண்ணம் பண்ணிச் - சகமண்டயத்

தங்கோன் வளனை தழைக்கத் தனிஞானச்
செங்கோ னடத்திச் செயத்தம்ப - மெங்
நாட்டி மிகுஞான நாட்டஞ் சிவந்துபோர்
வேட்ட நிருபகனும் வேந்தனும் - வா
வாகத் தெழுங்கோப வாரழலை யந்நிலையே
போகத் துறந்த பொறைக்கடலுந் - சே
மாசை யெனுமந்த வாழ்கடலைத் தூர்த்திறைவ
னோசை யுலகெங்கு முண்டாக்கித் - தே
மந்தோ வெனமுனிவ ராதரிக்க நின்றதிறற்
சந்தோட னென்னுந் தலைவனுந் - (
மதமாற் சரிய முதலான மாயா
விதமிம் பலவகையும் வென்ற -
மியம நியமாதி யென்றுலகி னெண்ணுஞ்
சயமுடைய தார்வீரர் தாமு - ந
நிற்குணன் றன்னை நினையா வகைசெய்யு
முக்குணந் தன்னை முனிந்தோட்டித் - திக்கனை
தேனக்க வாகை புனைந்து சிறப்பெய்தி
யூனக் குரம்பை யொழிப்பிக்கு -
வடிவார் சுடர்வாள் வலங்கொண்ட செய்ய
வடியாரும் பாதத் தணைந்து - மு
வின்பனை தேனை யிறைவனை யிங்ஙன்வரு
மன்பனை யன்பின் விளைபாரமுதே - முன்ப

விண்சிறந்த தேவர்க்கு மேலாய் விளங்கொளியே
பண்சிறந்த வேதப் பரம்பொருளே - கண்சிறந்த
தேவாதி தேவே திருவுலாச் செய்தருளிக்
காவா யெனவுரைத்துக் காதலிப்பத் - தாவிலா
மெய்க்க ணருந்தவர்கண் மெய்ந் றணியவேண்
மைக்கண்மட வார்மீது வந்தணிய - மிக்க
வணியா லணியா வழகுடையா னன்பாக்
கணியார் களப மணிந்து - பணியவரும்
பொற்றொடியா ரல்குல் பொருந்துங் கலைபோகக்
கற்றறிவார் நெஞ்சிற் கலைபோக - நற்றவர்த
முண்ணிலவு ஞான வொளிவிரவ வொப்பரிய
வொண்ணிலவே போலு முடைசாத்தி - விண்ணவலை
கைகழல மாதரார் காதலடி யவர்கண்
மெய்கழல வீரக் கழல்சாத்தி - மைகலந்து
நீண்ட விழியார் நிறையழிந்து பொன்பூண
மாண்ட விமையோர் மயல்பூண - வாண்ட
வருளா பரண வழகெறிப்ப வேறுந்
திருவா பரணங்கள் சேர்த்தி - மருவுமவர்க்
கங்கழுநீர் மாலை யருள வளிமுரலுஞ்
செங்கழுநீர் மாலை சிலசாத்தி - யெங்கண்மே
லத்தேவர் தேடு மடியேற வானந்தப்
பித்தேற மாயப் பிறப்பேற - வித்தலத்து

மேதகு வானவர் விச்சா தரரேறப்
போதக மேறிப் புறப்பட்டு —
பறையு முருந்தன் பணிலமும் போதோ
ளறையு மறைநான் குமரன்மே = விறைவ
வீணையு மற்றுள விண்ணோ ரியம்பலவுந்
தாணயந்து போற்றத் தவஞ்செய்து - நீணி
மன்னர் முரச முதலாக மாகடல்போன்
முன்னர் முடிய முழங்கிவர - விண்ண
தெய்வ மதிக்குடையுந் தேவரிடுகுடையும்
வையக மன்னர் மணிக்குடையு - ஐ
தடுத்து மலர்ப்பதத்தே தாழ்வித்து முந்தி
கொடுக்க வெடுத்த கொடியு - மெ
விடைசேர் கொடிமுதலா விண்ணோர் கொடியும்
படிவேந்தர் பல்கொடியும் பைம்பூண் - மடவா
வல்லபத்தை மாற்று மகர நெடுங்கொடியு
மல்லனவு மோங்கி யழகாரத் - தொல்
லேந்த வெழிலார் பதியாகி யிப்புவியிற்
போந்த தெனலாகும் பொங்கொளிசேர் — சே
யணியார் கொடிநுடங்கு மம்பொற் சிகர
மணிமாட வீதி வரலு — மணிமலர்க்
சேருந் தவத்தோர் சிரமுந் தெரிவையர்சேமன்
மாரன் சிலையும் வளைந்ததா — மே

வச்சங்க ணீற்றார்க ளச்சங் கழற்றினார்
ணைச்சங்க மாதர் சழற்றினா — ரெச்ச
விடையார் வடிவழகோ வெல்லா வழகு
முடையா னிவனென் றுரைப்பார் — வடிவுடைய
னாதலா லந்த வனங்கவே ளென்றிவனை
யோதலா காவென் றுரைத்திடுவார் — போதப்
பிரம னேயென்பார் பித்தேற்ற வந்த
பரமனே யென்று பகர்வார் - பரமனே
யென்றும் பிறந்தாலு மெம்போல வீன்றாளா
லொன்றும் பிறவா துனக்கென்பா - ரின்றிவனைக்
கண்டாலுங் காணா திருந்தாலும் யாமென்ப
துண்டோ நமக்கென் றுரைசெய்வார் — கண்டே
யுருகியா ராமே யுயிரெல்லாம் வாரிப்
பருகினா னென்பார் பதைப்பார் — தெரியுங்கா
லாவி முழுது மளிப்பா னழிப்பானித்
தேவனே காணென்று செப்புவா - ரோவியமே
நேரென்ன நேரே நெடுங்க ணிமையாமல்
வீரன் பதத்தே விழிவைப்பார் - நீராய்க்
கரையாநின் றேமென்பார் கண்ணாநின் கண்ணிற்
கிரையோ வெமதுயிர்க ளென்பார் — பரவி
வருமாத ரிப்பரிசே மாலுழந்து செல்லச்
செருமா மதன்வெகுண்டு சென்றா - னொருமடமா

ஞேதா முனிவர்க் குவம மொருமூன்றி
னாதி யினிதா மறிவரும்பு - வே
பகரு முறைபயிலும் பண்டிதர்போற் றுயர்
புகலு முறைபயிலும் பூவை - வை
வயலொன் றறியா தவர்போ லுலகத்
தியல்பொன் றறியா வியல்பாண் - மயலின்
மாண்ட துறவினர்போன் மன்மதன்கை மாமலர்க
டண்ட மிகவஞ்சுஞ் சீரடியாள் - வேண்டுந
செல்லு மளவுந் தெரியா தடலுறையுந்
தொல்லை வினைபோற் றுணைமுலையா - ணல்லன்
வீசற்கா ளாகார்போ லொன்றொன்றும் பற்றத்தே
பாசத்தாற் கட்டப் படுங்குழலாள் - பேசுங்க
காம மடையார் கருத்தேபோற் கள்ளமொனு
நாம மடையா நயனத்தா - - ஞெ
மயல்காட் டுடல்பிறந்து மாய்ந்து வருகின்ற
வியல்காட்டு கின்ற வெயிற்று - ளயனீக்
தீது நலன்கடந்தோர் போலச் செழுஞ்சாந்தும்
பூதியு மொன்றுகப் பூசுவாள் - போதமிலா
பேதை யருச்சனைபோற் பீடுகெழு மாமலர்கொண்
டாதேரிச பார்வைக் கணிகுவாள் - யாரு
கடவு ளறிவதனைக் காணுமே கண்ணின்
மடலூர மறைசெய்கை மான - வுடனிருந்த

கண்கண் டிடாமற் கரந்தாளாய் கைமலர்கொண் [ட்
டொண்கண் புதைத்தங்கொளித்திடுவா-ளொண்காந்த்
சற்பமெனக் சாணலாற் றற்பரங்கா ணுதுசகம் [தர்
பொற்பமையக் காண்பவரே போல்குவாள்- கற்பிதத்
தாமறித ருனறித லர்கின்ற தன்மையாற்
றாய்மறையே யொக்கின்ற சொல்லிரு - ள்ர்மதனுக்
காசைப்ப டாதே யழுங்கி யருள்செய்யு
மீசற் பணிவுற் றிரப்போர்போற் - பர்சத்தான்
மம்ம ருழந்து மதியழைக்க வாராமென்
றம்மனேநீ தாவென் றழுங்குவாண்- மெய்ம்மைபோல்
விண்ணும் வளியு மொளியும் விரிகதிரு
மண்ணு மதியு மறிகடலும் - - பண்ணி
யழித்து விளையாடு மண்ணல்போற் சிற்றி
லிழைத்து விளையாடு மெல்லே - வழுத்த
மதவா ரணங்கண் மதவா ர்ணத்தின்
மதவா ரணம்போல வந்த - விதமான

வண்டத்தோ னப்புறத்தோ னலால முண்டிருண்ட
கண்டத்தோ னன்முகத்தோன் கார்நிறத்தோன்-ரு
[ண்டுற்ற
விண்ணோர் நிற்ப வினையேனை யாண்டருளுங்
கண்ணுளன் றன்பவனி கைதொழுத - வொண்ணுத

ருயரை நோக்கியிவர் தாமா ரெனவியம்ப
நாயனார் காணாரா நான்முகனு - மாயவனு
பண்டை மறையும் பரவுங் கடவுள்கா
ணண்ட மம்மத்த தளித்தழித்துக் - சொன்
விளையாடும் வித்தகன்காண் வேதனையில் யானின்
றளையாமல் வந்த வருள்கா - ணுளவா
காட்டுங் கருணைக் கடல்காண் கலந்தன்பர்
நாட்டந் தரவந்த நாதன்கா - ணாட்
மவனிமுத லாறாறுக் கப்புறமாய் நின்ற
சிவனிவன்காண் டேவர்க்குந் தேவா - மிவனை

பெண்ணமிர்தே கைதொழா யென்றிரப்பப் பெண்ண
மிர்தும், கண்ணெதிரே கண்டவனைக் கைதொழுது
[வண்ண

மிழவாடன் பேதைமையி னேதுங் குறையா
ளழுவா ளவனருள்கண் டல்ல - வ'ழுதாளு
தன்னை யவர்க்களிக்கத் தானல்ல தத்துவன்றான்
பின்னை யவன்பாற் பெறவல்ல - பொன்னணியு
மாலையும் வேண்டியதே யாதலான் மற்றவளைச்
சால நகைத்தகன்றான் றம்பிரான் - மேலோ
ருருகின்பம் போல வொருநாட் கொருநாட்
பெருகின்பத் தாளோர் பெதும்பை - யருமா

விரித்த பொருட்கு விவேகம்போல் வேணூல்
விரித்த பொருட்கு விவேக — முரித்தாக
முந்தைமேற் காணிபெறின் மூர்க்கர் சிறிதொழில்போ
லிந்த வுலக மிடரெய்தச் — சிந்தை
யுறுநாண் சிறிதா லுருவிலான் கைவிற்
சிறுநா ணெறியச் சிறப்பா — விறைவன்மேற்
றன்னன்பு மேன்மேற் றழைக்கத் தழைக்கவிறை
யின்னன்பு மேன்மே லெழுதல்போன் — மன்னுங்
கரும்புருவ வில்வளைப்பக் காம னுதலிற்
கரும்புருவ வில்வளைப்பக் கற்பாள் — குரம்பை
கடிய நினைந்தவர்போற் காமவேள் காதன்
முடிய நினைந் தோதி முடிப்பாள் — படியோர்
மனனே யியல்பு மருவித்தான் சேர்ந்த
வினனே யியல்பா மியல்பா — ளணவேனிற்
கோமான் மகரக் குழைகூடி நாடோறுங்
காமாக மங்காட்டுங் கண்ணிணை — ளாமா
றறியாது தாங்குபவர்க் கல்லல் விளைப்பார்போற்
குறியாது தோன்றுங் குயத்தாள் — வெறிமலர்ப்பூங்
கண்ணார் பரவக் கனகமணிப் பந்தர்க்கீழ்ப்
பெண்ணா ரமிர்தம் பெறற்கரிய — கண்ணாளன்
றாரணிநீர் தீக்கால்விண் டானன்றி வேறின்றி
யோருணர்வாய் நின்ற வொளியொன்றுஞ் — சேரப்

பிடித்தென்னை யாண்ட பெரியோ னருளா
லிடித்த வினைக்குன் றிரண்டு - தடுத்தே
நாட வரிய நளினமலர்த் தாளிணையா
லோட வுதைத்த குணமூன்றுங் - தேடு
கேலாது நின்ற விருபத்தி ரண்டொழிய
மேலாகி நின்ற வெறுநான்கு - மேல்
பாய வுலகம் படைப்புமுதல் பரமா
காயத் தொழில்க ளவையைந்து - மே
கூறுபடு மாறுறிற் கூடாமை நாயேனை
யாறும் வகைசெய்த வவ்வாறும் - வே
வண்ண லடியை யடையா ரடைவரென
வெண்ணு மெழுமை யெழுபிறப்பு - மெண்
கழலா வினைகழலக் காசினிக்கண் வந்த
கழல்பாடிப் பாடிக் களித்துக் - கழ
மாலு மரனு மலரோனு மாமறைக
ளாலும் பரவரிய நாயனார் - ஞால
யென்னை யடிமை யுவந்தருளி யென்னிலே
தன்னை யளித்தருளுந் தம்பிரான் - பொன்
திருநாடுங் கன்னித் திருநாடும் வாழக்
குருநாத னாங்கோலங் கொண்டு - வருநா
யேர்தக மேற் கொண்டுவரப் பொங்கொளிசேர் சி
களுஞ் சாதகரும் வாரேருந் தாரேரு - பே

மறையோரு மாதவரு மால்கொண்ட வாறு
துறையோரும் போற்றித் துதிப்ப — விறையோன்
வரும்பவனி கண்டு மலர்சே ரளகச்
சுரும்பினமும் வண்டுந் தொடரக் — கரும்பனைய
சொல்லா ரடிவணங்கத் தூய்நகையுந் தேர்மறுகிற்
செல்லா வணங்காச் சிவனிருந்தோ — னல்ல
மலர்நோக்க நோக்க வருபானு நோக்க
நிலநோக்கு வாள்போல நின்று — சிலநோக்கிச்
சொல்ல வதரந் துடியாத் துணைவியரா
முல்லை நகையார் முகநோக்க — மெல்லவொரு
காதல் கலந்தமையுங் கண்ணிணைகள் பண்டையிலவே
றுதலையுங் காணு தமர்செய்ய — வீதொன்று
பெற்றோ மெனமதனன் பேரின்ப மெய்தியிரு [ருத்தி
பொற்றோளும் பார்த்துடனே போயினான் — மற்றொ

---

## மங்கை

மங்கை யிறைவன் வடிவுபோன் மாமுனிவர்க்
கெங்குந் திகழு மெழிலினாள் — சங்கை
துணிக்கு மொளிக்கொளியாஞ் சோதிபோற் சோதி
யணிக்கு மணியா மணங்கு — கணிக்கின்ற

கந்தமுற் றைந்து முளைதாய்க் கருமையாய்
நந்துஞா னத்தியல்பு நாடரிதாய்ச் -
வகிலா லயமாகி யந்தா ரணிசேர்
நிகிலா வியுமயக்கி நீண்டு - புகல்
விஞ்ஞால மெல்லாம் பெறுகின்ற வின்னியல்பா
லஞ்ஞானம் போலு மணிக்குழலா - ளெஞ்ஞா
சீரார் குணனில் சிறியோர்போற் றுள்வளைந்து
போராடா நிற்கும் புருவத்தா - பே
புலவ ரருளிலரைப் போற்று முறைபோ
லிலிவையே காட்டு மிதழா - னலன்ட
நித்தியா நிற்குஞ் சிவனடிசேர் பத்திபோன்
முத்தியா தென்னு முறுவலாள் -
வுணர்வோர் மதிபோன் றொளிர்முகத்தா னல்ல
புணர்வேபோ னேரும் புதியா - டனிவிலர்
காதலைவாய் நின்றகயற் கண்ணாள் கலர்போலக்
கூதளவாய் நின்ற குழைமுலையாள் -
லொருக்குங் கலைபுந்த முச்சிமேற் கொண்டு
பொறுந்தூந் தபோதனரே போல - விறக்கெ
திங்கு வினையிலோர் செந்தனத்திற் கென்றுமிக
வேங்கி வருந்து மிடையினாள் - னீங்
பேதலுவுண் டவ்வலைவண் டாதலா னிட்டிறப்பி
னீதியெனலா நிதம்பத்தாள் - போதம்

பல்லவத்தை வென்று படிமந்த விர்த்தறிஞர்
வல்லபத்தை மாற்றி மருவாரைச் - செல்லுறு
வையம் புகுத்தி யடைந்தோரை நெஞ்சுருக்கி
வையம் பணிக்கு மலரடியா — னையம்பான்
மைம்மலருஞ் சிந்தையர்கொன் மைக்கண் மடந்தையர
சோ, டம்மனைகொண் டங்குவிளை யாடுவாண்— மெய்ம்
[மைதா
ஞென்றோ பலவோ வுருவோ வருவோமற்
றன்றோ பொருண்முழுது மாருமோ - வென்று
முளதோ விலதோ வொளியோ விருளோ
வெளிதோ கரிதோ விளங்க - வெளிதோவென்
றோதி மறையு மரனுந் திருமாலும்
போதி னுறைகின்ற புத்தேளும் - மோதும்
பெருமா னுலகிற் பிறந்தவர்கள் போலே
யொருமா னுடவேட முற்றிங் — கருளால்
வழங்கிய வின்ப வளநாடு முன்னு
முழங்கிய நாத முரசுஞ் - செழுங்கழுநீர்த்
தாருந் தருமக் கொடியுந் தரணியெனு
மூரு முடையா னுலப்பிலாப் - பேருங்
கருணைமுகில் சேர்மலையுங் காதன்மிகு மன்ப
ரருவியெனக் கண்சொரிந்த வாறு — மருவிவரும்

போதகமு ஞானப் புகர்வாளும் பொற்றொடியாள்
மேதகவே பாடி வியந்தாடும் - போதி

விருபடியு மிரத்தினப் படியு மிடையில்
வருபொழுது வச்சி ரப்படியும் - பருதித்தே

ரேறிற் றரளப் படியு மிவையணைத்து
மாறின் மரகதமு நீலமும் - வேறாப

வடிவுள தாகி வருபவ ளாகப்
படிபல சார்த்தும் பகடு - கடமுதவ

வந்து சொரியு மதசலதிக் கெண்ணவரு
மெந்த வுததிகளு மென்போதுஞ் - சிந்தி

கதிக்கும் பதினா லுலகுங் களியாற்
றுதிக்கை வழங்கிவிடுந் தூளி - பொதிக்கு

விழியால் வடவையோ விண்முதலா வேது
மழியாத வெல்லா மழியு - மழியா

வுயரா வகலா வுளவெல்லை யெல்லா
மயிரா பதத்தி னளவே - பெயரா

வடக்கெல்லை தெற்கெல்லை வான்குணக்கி னெல்லைக்
குடக்கெல்லை போதுமே கூடந் - தடக்கை

கவள மகிலாண்டங் காரோ வுருவம்
பவளமோ பச்சையோ பொன்னோ - தவளமோ

வெக்கோல மென்றயர்வ தல்லா லிமையவரு
மக்கோலந் தன்னை யறிவரோ - சக்கிர

கிரிகிம் புரியக் கிரிசேர் கிரிகள்
சொரியுங் கடத்தைச்சூழ் தும்பி - பொருபகலே

ஞாலவட்டஞ் சூழிரவி நானூறு கோடியுகத்
தாலவட்டஞ் சூழாத் தனியானை - மேல்கொண்டு

காத்தும் படைத்துங் கரந்தும் விளையாடுங்
கூத்த னிமையோர் குழாம்வணங்கி — யேத்தி

வருமா றுணர்த்தும் வலம்புரியின் முன்னி
யருமா மறையொலிவந் தார்ப்பப் - பெருமான்சீர்

பாடினு ரெய்தும் பயனிதுவோ வென்றுநினைந்
தோடினாள் கண்டா னுடையானைக் — கூடித்

தொழுதாடன் னுள்ளுளே தூய்மறைகள் காணு
வெழுதாத கோலமே யென்றாள் - பழுதாகுங்

காணாத கண்ணென்றாள் கைவளையு மேகலையும்
பூணுனும் போகவிறை போகுதலும் - வாணயனஞ்

சிந்திய நித்திலமுஞ் செந்தனத்தின் மேலிறைவன்
றந்த தமணியமுந் தானணிந்தாள் - கந்த

மலர்தொடுத்து மாலை யளித்தான் மதவே
ளலர்தொடுத்து மாத ரழிந்தார் : நலஞ்சேர்

# மடந்தை

மடந்தை யொருத்தி வடிவார் மதியைக்
கடந்து கமலத்தைக் காதித் – தடங்கடனாய்
பூவுஞ் சிலையும் புலப்படலாற் பொற்பமைந்த
தேவென்றாள் போலுந் திருமுகத்தாள் - பாவஞ்சேர்
வாமிகண் மாலை மருவி மயல்சுமந்து
மாமதம் பட்டு மணங்கமழும் – வீமரு
கள்ளுண்டு ஞான மயங்கிக் கருத்தழியக்
கொள்ளுந் திறங்கொள்ளுங் கூந்தலாள் – ளுள்ளா
திருக்கு மறையை யியல்பிலார் மாட்டு
விரிக்கு மவர்போல் வெளிதாய் - விருப்பிலா
பண்டையோர் நெஞ்சிற் கருகிப் பரன்பாத
புண்டரிகம் போன்று பொலிவெய்தி - யண்ட
னளிபோ லகன்றவன தாரருள்போற் றூர்போற்
களிமேவிக் காரணமாய் நின்ற - வொளிபோன்று
நேயமி லாதவஞ்சர் நெஞ்சத் தவஞ்செய்யு
மாயமென வஞ்ச வினைமருவிப் - போயெங்கு
மாடு மனத்தை யறுக்க வருண்மறக்கக்
கூடு மவரிற் கொடிதாகி – நீடுபுலன்
மாறு முனிவர் மனம்போன் மகரத்தைச்
சீறி யரியாற் சிறந்திலங்கி - வேறுந்தாள்
காவி நிறத்தாற் கமலத் துறைதலா
லாவி முழுது மழித்தலாற் - சேவின்மிசை

பண்ணு மந்த வலரோனு மாதருள்சேர்
கண்ணும் போலுங் கயற்கண்ணு - ளெண்ணும்
வளமையின் மிக்கார்போன் மதனைந்தும் போக்க
விளமையின்மிக்கான வெழிலா - லுளமொன்றின்
மாலுற்று மீள் வறியாத மம்மரே
போலுந் துடிக்கும் புருவத்தாள் - சாலத்
தமைவென் றவர்போலச் சாந்தங் கெழுமி
யமைவென் றணிசிறந்த தோளா - ளெழுதொன்று
செப்பெனவே மாதவர்கள் சேர்தலாற் றேசிகனே
யொப்பென வோங்கு மொளிமுலையாண் - மெய்ப் [பொருள்போ
லையஞ் செறிந்தே யமர்வஞ்சி யையகற்றிப்
பொய்யென் றிளையோர் புகலுற - வையம்
மடங்கப் பயக்க வசைந்தும்பர் விஞ்ச
நுடங்கி நுடங்கு நுசுப்பா - ளடங்கிய
யோகீச ருள்ள முடைத்தலா லுண்மைதிகழ்
வாகீசர் வாக்கனைய வார்த்தையா - ளாகத்
துரையழிய மன்னு முணர்வழிய வைய
மரபழிய வானந்த வாரி - கரையழிய
வன்புமீ தூரு மவர்பா லிறையவன்போ
லின்பமே செய்யு மியல்புடையாண் - முன்பரவை
மன்னுவா னன்னமுமாய் வான்வர்க்கு மாமறையைப்
பன்னுவா னெனப் பசுங்கிளிக்கு - முன்னைமறை

சொல்லப் படாத சுடரென்னீர் சிந்தையுஞ்
செல்லப் படாத சிவமென்னீர் - ந

வருளே திருமேனி யென்னீ ரமலப்
பொருளே யிவனென்று போற்றீர் - மருணீங்

தென்சேந்தை யென்னீர் திருவார் செழுந்தரணி
மன்சேர்ந்து வந்திருந்த வாழ்வென்னீர் - பொன்சே

பூங்கோயி லென்னீரப் பொய்யற்ற மெய்யடியார்
பாங்கோடு மேத்தும் பரிசென்னீர் - பூங்கடு

மாலையு மந்த வரைமார்பு மென்னீரக்
காலை யெழுந்த கதிரிரவி - போ

யிருக்கும் படியேயென் றேத்தீரென் னெஞ்சை
யுருக்கும் படியேயென் றோதீர் - திருக்கடைக்க

வைத்தவா றென்னீரென் மாமலை வேரோடுங்
கைத்தவா றென்னீரக் கண்ணென்னீர் - சித்தந்

னெங்கே யொளித்ததுவோ வென்னீ ரெனையாண்
டங்கே ருகட்பொற் பதமென்னீ - ரங்கை

கனியே யெனத்தன்னைக் காட்டினா னென்னீ
ரினியோனே யென்றென் றியம்பீர் - துனிப

பவநோய் மருந்தென்னீர் பார்வாழவந்த
சிவனே யவனென்று செப்பீர் - சுவையாரு

கன்னலே பாலே கனியே தெளிதேனே
யன்னையே யன்பேயென் னாருயிரே - யென்னீரெ

துண்ணீர் பெருக வுரோமஞ் சிலிர்த்துரைத்துக்
கண்ணீர் பெருக்கெடுக்குங் காலத்து - விண்ணோரும்
பாரோருஞ் சூழ்ந்து பரவப் பறவைமிசைக்
காரோத வண்ணனுங் கார்மயின்மேற் - கூரிலைவேற்
சேயு மவர்பயந்த சேவின் மிசையோனும்
பாயு மயிரா பதத்தின்மே - லாயிரக்கண்
ணிந்திரனுந் தேர்மே லினனும் விமானத்துச்
சந்திரனு மன்னமேற் றாதாவும் - வந்தடிகள்
போற்ற மறைபோற்றப் போதகத்தின் மேல்வடிவாய்
மாற்ற மனங்கடந்த வள்ளலார் - தோற்றுதலும்
செங்கதிர் கண்ட செழுந்தா மரைமலரு
மங்கு முகில்கண்ட மாமயிலு - மங்கல்
கெடுமளவி றுங்கவொரு கேள்கண்டோர் நெஞ்சும்
படுமளவி னீர்காண் பயிரு - மிடுமுவக
மெல்லா மொருபடி மான்புற் றெழுந்தபடி
சொல்லாட வொண்ணாத சோதிபாற் - செல்லா
விழுந்தாடன் னெஞ்சாலே வேட்டபரிசே
செழுந்தா ரணியகலஞ் சேர்வுற் - றழுந்தத்
தழுவிக்கொ ளாநிற்குந் தம்பிரா னென்னுந்
தொழும்வித் தகமெல்லாஞ் சொல்லு - மழுநெக்குத்
தன்னிலையை நோக்குந் தனிநா யகனுடைய
வந்நிலையே நோக்கு மருணோக்கு - முன்னர்

நிறையு மடநாணு நெஞ்சு நிறனு
மிறைவன் கழலிணைக்கே யீந்தாள் - மறையர்

## அரிவை.

தெரிய வரிய சிவனடிபோற் றேவர்க்
கரிய வமுதா மரிவை - வரைமடந்ன
யண்ட ரிறைஞ்சு மடிபோல நல்லதிருப்
புண்டரிகத் தைமருட்டும் பொன்னடியா - ளுண்டா
வண்ணந் திகழு மதியோர் முனமறையோ
ரெண்ணும் பொருள்போ லிடையினு - டிண்ணமு
வோது மறைப்பொருள்போ லொன்றிரண் டென்
நீதி யுறிய நெறியின்றி - நாதன் [ருக
புகழ்வுபோற் செப்பிற் பொலிந்திகழ்வு போல
வகிலமைந் தார மருவு - நகிலி
ளோத மகல வெனையாண் டவனடியே
யாதி மறைப்பொருளை யாங்களிக்கு - நீதிபே
லஞ்சன முண்டங் கயலழித்து ஞாலமெலாந்
அஞ்சல் விழித்துமிகுந் தொல்காவி - யெஞ்
வருகமல பாற்றி மானங் கடந்து
வெருவ வொருவேலை வேறு - வெருவி
சிவந்தங் கொளியாய்த் தெளிவாய்க் கரிதாய்க்
கவர்ந்து சகமொளிக்குங் கண்ணாள் - பவஞ்சே

தீங்கரும்பை நீக்குநெடியோர்போற் காமவேள்
பூங்கரும்பை மாற்றும் புருவத்தா - ளோங்கு
குலநான் குலவிக் குருளையாய்க் கோதி
னலனுர்ந்து நாவி பரித்துப் — பலபணியும்
பூண்டு திருவை நயந்து புகையகத்து
நீண்டு குறுநெறிசேர் நீதியா — லாண்டவனே
யென்றொருகா லோதா திடரே யுறுகின்ற
வொன்றறியா ரோக்கின்ற வோதியா — னன்றாக
வந்த மறைப்பொருளை யந்தச் சடகோபன்
செந்தமிழே யொக்கின்ற செவ்வியா — டந்தப்
பவளத் திரளாருகாற் பைம்பொற்பீடத்திற்
றவளத் தரளப்பூந் தாமந் — திவளுமணிப்
பந்தர்க்கீ ழன்னத்தைப் பாராட்டிக் கொண்டிருந்து
கந்தர்ப்ப னூற்பட்ட கண்கலக்கஞ் - சிந்தித்து
மோன மடைந்து மொழியா மொழியாலே
நானவனென் றோதுகின்ற நாமத்தாண் — ஞானமுற
வான வுருவிருபத் தோரா யிரத்தறுநா
றான மறவுரைப்ப துன்னையே — யாளுமுன்
பேரோ தினரும் பெறுதற் கரிதாய
சீரார் பரம்பொருளைச் சேர்வரே - நேரேயென்
னங்கையிலே நீயிருக்க வாரமிர்தை யானடையச்
சங்கையிலேன் முன்னர்த் தவப்பயனே - தங்கும்

பெரும்பாவி யேன்மனனும் பித்தேறி யந்த
வரும்பாவி பின்போன தன்றே - விரும்பி
மீட்டிங்கு வாரா ரெனமுன்னே வெவ்வினையேன்
கேட்டும் விடுத்துங் கெடுத்தேனே - நாட்ட
பொருந்திலேன் பூவணைமேல் புத்தேளிர் தங்கண்
மருந்தினோ டின்புற்று வாழேன் - பெருந்தகைமை
பெற்றவர்கண் டஞ்சாமை பேசுவர்கள் பேறிலா
மற்றவர்க்குங் கண்டஞ்ச வாராதோ - முற்றொளி
யெஞ்சாம லெங்கு முளனு கினுமிறைவன்
றஞ்சா தவர்கண்ணிற் றோன்றுமோ - நெஞ்சன்ப
தீராத காதலுடன் சென்ற மனந்திரிந்து
வாராமை கண்ட மதியிலே - னோரா
யீசன்பா லுன்னைவிடற் கெண்ணுகே னெய்துவனோ
வாசைப்பா டற்று ரறிவரோ - நேசத்
தோதா ரணங்க ளுயிர்க்கெல்லா நின்னையே
யாதார மென்ப தறுதியே - வேதாவை
தாங்கும் பெரும்புகழாய் தத்துவன்பாற் சென்றரு
ளீங்கென் றுயர்களையா யென்றிரப்பத் - தீங்கெவையு
காயும் பெருமான் கமலத் தயன்பெருமா
னாயன் பெருமா னரன்பெருமான் - று
மறையின் பெருமான் வளந்தோ ருளத்தே
யுறையும் பெருமா னுடம்பாஞ் - சிறையைவிட

பேசும் பெருமான் பெறநினையில் வானவருங்
கூசும் பெருமான் கொடிமறுகி - னேசமுடன்
முத்திக் குழந்த முனிவர்களு முன்னமே
சித்தித் தகமகிழுஞ் சித்தர்களு - மெத்திக்கும்
பாதார விந்தம் பரவ வரும்பவனி
வேதாகமங்கள் வியந்தொலிப்பக் - காத
லுரைக்கவா வோதிமம்விட் டுண்ணீர்மை யெல்லாங்
கரைக்கின்ற வானந்தக் கண்ணீர் - திரைக்கொண்டு
வீச மணிமாட வீதியெலாம் வெள்ளமிடத்
தேசன் றிருமுன்பு சென்றிறைஞ்சி - நேசர்
பெருமானடியவரைப் பித்தேற்று கின்ற
மருவாரு மாலையு மார்புந் - திருவான
கண்ணிலே யுள்ள கருணையுங் கண்காண
மண்ணிலே வந்த மலரடியுங் - கண்ணிற்
கினிய வடிவு மிருதோளு மென்று
முனிய வறியா முகனுங் - கனிவாயுந்
துய்ய நகையுஞ் சுரக்குஞ் சுராரலுஞ்
செய்ய முடியாத சேவகமுந் - தையலா
ணோக்கி ணோக்கு நுணங்கிடையை வேணோக்கு
நோக்க வரியானை நோக்குமோ - பூக்கொண்டு
சிந்திப் பரவினண் மேலொழியச் செஞ்சரம்வேள்
சிந்திப் பரியான்மேற் சிந்துமே - சிந்தி

மடவரலை வெய்ய மதனனோய் செய்ய
விடனமிர்து செய்தான் விடுமே - தடமார்பி
சாத்தியதார் நல்கினன் தாமரையா டாணிற்க
வேத்திய நாமாது மேமாப்ப - மூர்க்
யருளினன் யான்பெற்ற தார்பெற்ற ரென்று
சுரிகுழன்மேற் சூடினு டோகை - செருமார
செல்லல் செயநினையான் செய்யா னருள்பெற்ற
வல்லியென நோக்கி மருங்ககன்ற = ளை

# தெரிவை.

தெரிவை யொருத்தி சிலைமதற்கு நேரே
யுருவங் கொடுக்கு முருவந் - தெரியி
மருவா ச்சமறுத்த வாதவூர்வள்ள
திருவா சகம்போலுந் தேற - லுரு
பழுதற்ற வந்தப் பரம்பொருளே போல
வெழுதப் படாத வியல்பாண் - முழு
மணியுடையுஞ் சூழ்ந்தகன்ற வல்குற் பரப்பு
நுணுகிய வந்த நுசுப்பு - மணிநிறக்
பாரப் பயோதரமும் பைம்பொற் பணிமணியு
மாரமுஞ் சோதி யணிமுகனும் - வார்குழ
நீரம் பரமு நிலனு மதனும்பர்ச்
சாரம் பரமுந் தரிக்கின்ற - சீர

பயோதரமு மெங்குந்தன் பல்கதிர்கள் வீசும்
வியாபகனும் வெய்யவனு மேலாய் - நியாயமுறுந்
தாரகையுஞ் சோதிசேர் சந்திர மண்டலமுங்
கூரிருளுந் தாமான கொள்கையாள் - பேரொளிசேர்
புண்டரிகத் தோனிந்தப் பூதலத்தே யெவ்வுலகுங்
கண்ட தெனத்திகழுங் காட்சியாள் - பண்டு
முழவிய சங்கை முனிதலா லெந்தை
கழலிணையே போலுங் களத்தா - ளழிவிலாப்
பண்டை நிலையடையப் பட்டோர்போற் கோபமுந்
தொண்டையு மாறுந் துவர்வாயா - ளண்டராற்
பேண வரியான் பெருமைபோற் றன்னளவு
காண வரியதடங் கண்ணினாள் - பூணு
முறையி னணிந்தளிசேர் மொய்மலர்ப்பூங் காவி
னிறைவி யெனவந்த வெல்லை - நறைகமழு
மிந்து நுதலா ரியம மதுவேந்தி
வந்து தொழுதிறைஞ்சி வாழ்த்தெடுப்ப - வெந்தை
கருணை முதலாகக் காதன் முளைத்துப்
பரிணமித்துப் பத்திப் பணைத்துப் - பெருகவே
யுண்ணீ ரரும்பி யொளிமலர்க்கை மொட்டிப்பக்
கண்ணீர் பெருகுங் கமலத்து - நண்ணு
நளின மலர்தந்த நாடரிய வின்பத்
தெளிநறவை நெஞ்சாரத் தேக்கிக் - களிசிறந்த

வேறு.

மதுரவாரி யாய்ஞான மயமதாகி வாடாத
மலரதாகி நாடாத மணமதாகி யாறுத
சதுமுகாதி வானோர்கள் சகலவேத கீதாதி
தருமநெறி யான்மீது தடவொணாத தாளாளே. (௨)

தொழுதெழா விழாவாறு சுழலுமாற றுமாயைத்
துயரிறவ்வி டாதாறு சொரியவாய்வி டாநாளு
மழுதபாலர் சிறும லமிர்தவாரி யாயூறி
யருள்பயோத ரீயாகி யமிர்தபான மீவாளே. (௩)

கதியிலாத நாயான கடையனேனை வாகூடு
சுழலெனவெ னூடேறு கருணைவாரி யோர்கோல
மதியிலாமை யான்ஞான வடிவைவேறு கூறுக
வகைசெய்தேறு மாறுக மலைவதோடு காதாளே. (௪)

மருவுமாக மான்மேவி வருகுணாதி நேராக
மனனின்மாறி மீளாத மனனமாதி வேரோடு
மொருவமாறி மேனூடு முணர்வுநானு நேராகி
யொழியஞான மேயாக வொருசொலோதும் வாயாளே.

விகடநாம ரூபாதி விததியோரொ ரோர்கோடி
விரியுமாக மீதோடி விரிவொணாத மேலான
மகுடநாடி லோர்கோடி மலருதாள்க ளோர்கோடி
மனனுணர்வு மேவாத வடிவமான மாயாளே. (௫)

வெருவராம னூடோறும் வினையின்மூழ்கி வுளாரும்
விழியினோர்கள் பாலோடி விளைவதோர்வு ருதேனே.

யருவராம ஞயேனு ளமராரானு மாரானு
மறிவொணாத தோர்கோல மருளுகாதல் கூர்வாளே. ()
அவனிநீரி னன்மாள வனலின்மாள நீர்காலி
னனலுமாள வாகாய மதனின்மாள வூடாடு
புவனன்வான மேலான பரமதேசி லேயான
படியின்மாள மாளாதபழையபாழின் வாழ்வாளே. ()
ஒருவிகார மோர்காலு முறநிலாமல் யாதானு
முளதுமாசி லாமேனி யெர்ழியவேறொ ராதார
நிருபியான வோர்போது நிருபியாத வோர்போது
நிகழ்வுறும லோர்போத் நிலையதாக நேர்வாளே. (௯)

வேறு.

அனுபவந்தனி னறிவதன்றியொ ரளவைகொண்டறிவுறு வதோ, தனுபவந்தனை யொழியவின்றிய தகமைநின்றதொர் தனிமையே. (௰)

உருவமென்பது மருவமென்பது முணர்வுகொண்டுணர வொண்ணுமோ, வருவமிங்கொரு வடிவுகொண்டது விதுவெனும்பொரு டன்னையே. (௰௧(

வேறு.

பொருதுதிரிபல சமயமதிவழி புரிவதருகலை புகல்வதோ, கருதுபொருடொறு மருவியவையவை கழலநிலவிய கன்னியே. (௰௨)

தக்கமதிகொடு தர்க்கசமயிகள் சத்தமறிவதொர் தத்

வமோ, சித்தமயலது கெட்டவவர்தெரி சிக்கவுரியதொர்
சித்தையே. (௰௩)

வேறு

மருவுறு ததற்குரைக்கும் வடிவுமில்லை யென்னவோ
கருவுறும லாளவந்த கருணைமேனி கண்டுமே (௰௪)
தொல்லையாகி நின்றதுய்ய துணைமலர்ப்ப தங்களுக்
கெல்லையான தில்லையோவென் னுச்சிமீ திருக்கவே. ()
விளம்புமெய் பொருட்குமேல் மிகுத்தநீண் முடிப்பரப்,
புளம்புகுந் திருக்கவெல்லை யுன்னவில்லையென்னவோ (௰௬)
அடையமாதி ரம்படைத்த வப்புறம் புடைப்பதோ
ருடையுமில்லை யென்னவோவென் னுள்ளடங்க லுற்றுமே
அன்னையாகி யத்தனுகி யஞ்சலஞ்ச லென்றுமந்
தென்னையாளு கோலநீர்மை யென்னதா வியம்பவே. (௧௭)

வேறு.

மாசுணமோ மறைத்தலையோ மயானமோ வாக்கிறந்த
தேசுணர்ந்த மெய்யடியார் சிந்தையோ திருந்தமளி. ()
சாத்தும்பூ மாலையினுந் தமையுணர்ந்த மெய்யடியா
ரேத்தும்பா மாலையிலே யெப்போதுந் திருவுளமே. ()
பாதாதி கேசாந்த முவந்தணியும் பணியருளே
ஞாதாதி யாமூன்று முவந்தயினு நல்லயிர்தே. (௨௰)

வேறு.

வேதமவ டிருவாயி லோது கீதம்
மேவறுநினை விலர்காணு மேனி மேனி

பூதமவ டிருவாசல் காவ லாகும்
போதமவ டிருமேனி காவ ருனே. (௨௨)
யோகினிகள் கருணைதி யான மாதர்
யோகமரு நிலமாசின் ஞான யோகங்
கோகனக னறியாத கோயில் கோயில்
கூறரிய பெருவாழ்வை யாவர் கூற. (௨௩)

வேறு.

கலையே றுவணங் கனியன் னமெனக்
கற்பித் திடவோ சொற்பித் ததுவா
மலையே றுவணங் கினியன் புறவந்
தருள்போ தகமே யவள்வா கனமே (௨௪)
பஞ்சா யுதமே திரிசூ லமழுப்
படையே யெனவோ பகைவெம் பிறவிக்
கஞ்சா முனெழுந் தருளா வெறியு
மன்பே திருவா யுதமா வதுவே. (௨௫) ஆ ௱௨௬.]

---

வேறு— உட்பரிவாரம்.

அரனே யறிவே செறிவே யழகே
யருளே வடிவா கவமைந் தவருஞ்
சரனே யெனவந் தடையும் மடியார்
தங்கோ லமெலா மிங்கோ துதுமே. (௧)

வேறு.

பரம யோகமுற பேதமறு போதமுடனே

பரம யோகமுறு வாரிறைவி பயிரவர்களே. (௨)
புணரு மைத்ரிமுத லானபொரு ளுள்ளபரிசே
யுணருமார்க்கம்வரு மாதவர்கள் யோகினிகளே. (௩)

வேறு.

நித்திரை சாகரத மற்றதொரு நீர்மையினரே
நிட்டை யாதுமில் தானதொரு நீதியினரே
முத்திரை ஞானமெனு முத்திரையல தேதுமிலரே
முத்தி நாயகர்க ளானபவ மோசகர்களே. (௪)
பெத்த முத்தியில தானதொரு சாதகர்களே
பித்து நற்கழலொ டானதொரு பாவகர்களே
பத்தி சித்தியென நாடிவரு தாபதர்களே
பத்த ரெய்ப்பிலருள் கோலமிகு பைரவர்களே. (௫)

வேறு.

உரையிறந் துணர்விறந் திடனுணர்ந் திடுவரே
யுணவுமங் கையில்வரும் பலியுகந் திடுவரே
திரையிறந் தளவிறந் தளபரங் கடலுளே
செறிதரும் வடிவருந் திருவகம் படியரே. (௬)
அழுதன்மா றுதலிலா விழியர்பா லருள்வரே
யவர்களா கழுமெலாம் விழியதா மொழிவரே
யெழுதன்மா றுதலிலா விரவியா முருவரே
யிகலுமார் வழுமிலா திலகுபை ரவர்களே. (௭)
அவனிவ னடையவோ ரணுவதா நெடியரே
யணுவுமே ருகிரியா யறவுநே ரியர்களே

புவனிவா னடையவோர் பவனிபோ துவர்களே
புகலுகோ மளவியா மலைபுரா தனர்களே. (௮)
அலைபொரு மலொருகா றலையிடா தமைவரே
யருள்பொரு மணுருகா வருவிபாய் நயனரே
கலைபொரு மலொருகோ வணவராய் விடுவரே
கவலைதீர் பவிகொணீள் கரகபா லிகர்களே. (௯)
சகலலோ கமுமெடா வயிறும்வா யுடையரே
சதிரெலா மழியமா றருவதா ளுடையரே
புகலுலோ கமுமலோ கமுமெலாம் விழியரே
புகலுமா றரியதாள் புணருநை ரவர்களே. (௰)
உருகுவா சகமெலா முடையசா கினிகளே
யுயிரெலாம் விழியினு லயில்வர்யோ கினிகளே
பருகியா ரமிர்தையா டுவர்கண்மோ கினிகளே
பகருமா றரியநா யகிபதா கினிகளே. (௰௧)

வேறு.

தமர்பிற ரற்றார் சமயமு மற்றார்
சகவியல் பற்றார் தமையொழி வற்று
ரமர்விட மற்று நறிவயர் வற்று
ரறமற மற்று ரவளடி யாரே. (௰௨)
இருவினை விட்டா ரிருமையும் விட்டா
ரிலகந டப்பா ருலகுக டப்பா
ரருவினை நிற்பா ரமரவி ருப்பார்
ரறிவுரு வற்று ரவளடி யாரே. (௰௩)

பொருளை விரிப்பார் புகழுதி றத்தார்
புளகித முற்றார் புரளுத லுற்று
ரருளைவி யப்பா ரலறியு ரைப்பா
ரதிசய மிக்கா ரவளடி யாரே. (௪௪)
தெளியுமு ளத்தார் சிலவர்தெ ளிப்பார்
சிலவர்க ளிப்பார் சிலவர்தி கைப்பா
ரளியுமு ளத்தோ டழுதுசி ரிப்பா
ரவர்கள் செயற்பா டறியவொ ணாதே. (௪௫) ஆ ௱௩௰௪

---

வேறு-லீலை.

ஆதி மூலமொரு கோலமுமி லாதவடிவி
வகில லோகமும நிந்தடையும் வண்ணமழகார்
சோதி மூவடிவு கொண்டருளி யந்தமறைமுன்
சொன்ன தன்மைதெரி யும்பரிசு சொன்னதுணிவும். (க)
கயிலை மாமலையின் மேலினிதி ருந்தருளியக்
கமல யோனிமுத லெக்கடவு ளர்க்குமருளான்
மயிலை யேறிவரு மைந்தனுட னந்திமுதலா
மற்றும் வந்தடைப வர்க்குமருள் செய்தவகையும். (உ)
ஆல நீழலி னிருந்தருளி யன்றுசுரரோ
டசுரர் நெஞ்சினள விற்கள வறைந்தறிவுசேர்
நாலு பேரறிய நாலுமறை சொன்னபரிசே
ஞான மானநய னந்தணந யந்தநலனும். (௩)

இசைய வையமொரு பார்தமு டிப்பவர்கள்போ
லிப்பி றப்புமுடி யும்பரிசி யம்புமியல்பும்
விசைய னையமுறு நெஞ்சினை யறிந்தருளியே
விசுவ ரூபவியல் காட்டிவெருள் வித்தவிரகும். (௪)

ஆயர் தம்மனையி னோர்வடிவு கொண்டுபதிறா
றாயி ரந்திரும டந்தையரு டன்புணரினுந்
தூயபிர மச்சரிய மத்தில்வழு வாமலொழுகுஞ்
சுத்த ஞானசரி தத்தியல்பு சொன்னதுணிவும். (௫)

வாத வூரனையொ ழிந்தவர்கள் பொன்னடியிலே
மன்ன னென்னுடலை மாற்றுகென வாற்றவிலனா
யோத வூறுமயிர் தஞ்செவிக ளார்வுறமுகந்
துண்டி யையகமு முய்யும்வகை செய்தவுறவும். (௬)

தன்ப ராபரம தானதிரு மேனிநிலையிற்
சலன மின்றியொரு தன்மையினி னின்றருளியே
யன்ப ரானவர்க ணெஞ்சினி லுவந்தவடிவா
யங்கு வந்தவர்க ளுய்யும்வகை செய்தவருளும். (௭)

வேறு.

உலகமயக் குறுவுண்ண முகந்தோறு முகந்தோறு
முதிப்பனென்றென்
றிலகியமெய்த் திருவார்த்தை யாவர்க்கு மேறும்வகை
யிக்காலத்தே. (௮)

பெருமான்வந் தவதரித்துப் பீடுடைய தாணியுளோர்
பிழைக்கும்வண்ணஞ்

சொரூபானந் தச்சுடரின் றுணைமலர்த்தா டரும்பரிசு
சொல்விச்சொல்வி. (௯)

அண்டரெலா மலமாக்க வருட்சொரூபா னந்தன்றன்
னடியார்வாழப்
புண்டரிக மலர்ப்பாதம் பொறித்தருளுந் திருக்கருணை
போற்றிபோற்றி. (௰)

கூசாதே யாமுமெலாங் கொண்டாடும் படியிந்தக்
குவலயத்தே
வாசாமகோசரனோர் வடிவாகி வந்தவருள்
வாழ்த்திவாழ்த்தி. (௰௧)

வேறு.

கரைத்தல்தீர வந்துதித்த கருணைமேனி காதலோ
டுரைத்து வாழு மிவ்விஞேத மிடைவிடாம லுடையரே ( )
சாதலாதல் வாழ்தலாதல் தரையதாதல் சயனமாதல்
காதலாதல் காய்தலாதல் கருதுரூர்கள் கணமுமே. (௰௩)
வந்தவிச் சகத்துதித்து வந்தவாறு மாறுமா
றிந்தவிச்சை பாருமென் றிருந்துவிச்சை காட்டியே. (௰௪)

ஆ. ஈரு௰௫.

---

வேறு—பேய்முறைப்பாடு.

அண்டமுண்ட கண்டர்நிற்க வடையவுண்ண வாதரங்
கொண்டபேய்க ளகலவந்து குறைகணின்று கூறுமே.
உலகிலே சனித்துநின் றுழைத்துநீர் பிழைப்பிலா

வலகையாமி னெனவகுத்த தென்கொலெம்மை யம்மையே.

வேறு.

வாசகத்தா லாவியைநின் றுருக்கு ஞான
மதயானை வாதவூர் வள்ள லோடு
மாசகற்றி யாயிரம்பேர்க் கிச னார்நல்
லமிர்தளித்தா ரெமக்கிரங்கி யருளா ரிந்நாள். (௩)

தலைப்பான்மை மிகப்பெரிய காழி ஞான
சம்பந்தர் தாம்பிள்ளைத் தனத்தி னாலே
முலைப்பாலைப் பகிராதே தாமே யுண்டு
முத்தமிழும் பாடியற முதிய ரானார். (௪)

திருநாவிற் கரசர்மிகத் தெள்ளத் தேறித்
தெளிந்தூறித் திக்குமருட் டேறன் முன்ன
மொருநாளிற் பெற்றெம்மை யொழியப் போயுண்
டொளியுருவா னார்யாங்க ளலைந்தே போனேம். (௫)

அடுத்தனவே செய்துதிரிந் தற்ற நம்பி
யாரூரிற் கிறைவர்திரு வருளி னாலே
தடுத்தவரை யாட்கொண்டா ரமிர்த முண்ணத்
தாமளித்தா ரெம்மளவுந் தாயே காணேம் (௬)

சாந்தியினை நேராக வுடைய நல்ல
சடகோபர் பராவமிர்தைத் தாமே யுண்டு
தீந்தமிழென் றொருகோடி வேத மாகச்
செய்யதிரு வாய்மொழிந்தார் தேர மாட்டேம் (௭)

போக்கர் முதலாக முன்னந் தாந்தாஞ்

செய்பாக்கியத்தாளித் தியக்கந் தீர்ந்தார்
நீபார்க்கப் பட்டவரே கண்டா யெங்க
ணிர்ப்பாக்கி யத்தையினி நீங்கப் பாராய் (அ)

வேறு.

முத்திவரும் படியன்றி முற்றுடலம் விடுமளவுங்
கத்திவரும் படியாகக் கற்பித்தா யெங்களையே. (௬)
ஆராத வூனுண்டுன் னடியகலும் வகையெமக்குத்
தூராத குழிதூர்க்கை தொழிலாகச் செய்தனையே (௭)
பாகாய மொழியாயிப் படுதுயர மொருக்காலும்
போகாத வுடலம்வெறும் பொய்யாலே செய்தனையே.
உங்கட்குத் தருமிதுவென் றுள்ளபடி யுணையுணரா
வெங்கட்கு வடிவுவெறு மிடும்பையினா லெடுத்தனையே.
ஆ ௬௫௫.

---

வேறு—குறி

இப்பரிசே பலவியம்பி யிலகுமொரு பேயினையுன்
மெய்ப்பரிசே விளைந்தகுறி விண்ணப்பஞ் செய்கெனவே (க)
அடியறிகின் றிலனடியே னறிவதொரு குறியல்ல
குடிபறியும் படிவந்து தோன்றியதோர் குறியுண்டே (உ)
பூண்கின்ற வுடலாதி யாமிந்தப் புவனத்திற்
காண்கின்ற பொருளெல்லாங் கனவாகக் கண்டனனே. (௩)

வேறு.

உடலையொன்றிய வுயிர்விடும்பொழு துணர்வ தன்றியிலை
நடலை கொண்டட னழுவல் கண்டுள நடுந டுங்கிடுமே. (௪)
அழியுமென்றம ருலகிலின்பமி தமையு மென்றிடுமே
கழியுமென்றம ருலகமென்பது கருது கின்றிலமே. (௫)
சமத மங்களை முதல்வ ருஞ்சில தலைமை வந்திடுமே
மமதை கொண்டிது நமதெ னும்பெரு மயன்ம டங்கி
டுமே. (௬)
அழிவ றும்பொருள் பொருளெ னும்படி யறுதி வந்திடு
மே, யொழிவ றும்பொரு ளுணர வென்றிடு முணர்வு வந்
துறுமே. (௭)
தெருளு றுங்கலை பலவு ணர்ந்தொரு சிறித லம்பிறவா
வருளு றுங்குரு பரனி ருந்திட் மறிய வென்றெழுமே.(௮)
அழுத கண்களு மருவு நெஞ்சமு மலரு மன்புமிடா
தெழுத ரும்படி மொழித விங்கினி தினுசெ யுங்குறியே.(௯)
அளியுநெஞ்சுடை யடிய ரிங்கிவை யழகி தென்றனரே
தெளிவை யின்றிய வலகை யுஞ்சில திகைமலங்கினவே(௰)
அழகி தென்றிடு மதுகொ டுஞ்சில வழகி தென்றனவே
பழகி வந்ததொர் பரிச யங்கொடு பலப யந்தனவே. (௰௧)

ஆ-ளஎ௬,

---

விசேஷம்.

வெருவ ருந்திற னுரைசெய் தங்கடி விழவு றும்பொழுதே

குருப ரன்பொரு களன் றிங்கொரு குணலேவந்ததுவே. (௧)
கடுக வந்திடு மலைகைவெம்பவ கருவ றும்படிநீ
படுக ளன்புக வினைவி னைந்தமை பகரு கென்றனுமே.

வேறு.

செயிரற மிக்க தியங்குமு டற்றுயர் சிறிதுத ணித்தெமதா,
ருயிரை யளித்தம ருரையு மெனச்சில வுதடுதுடித்த
னவே. (௩)
அறுதி படத்தெளி வளவு தரித்திடு மடையவெ ளுமுதுபே
யுறுதி படத்தெளி வாலம ருற்றதை யுரையுமெ மக்கெ
னவே. (௪)

வேறு.

ஐயப்பா டோகெடுவீ ரஞ்ஞனழிந் தமையின்னம்
வையத்தே வந்ததுநான் மறைதேடும் பொருள் காணும்
பசியும்போ முங்கள்பெரும் பாவமும்போ மிப்பத்துத்,
திசையும்போய் முடிந்தபடு களத்திலொரு தினைத்துணை
யில். (௫)
பல்லாயி ரத்தாண்டு பலகோடி யண்டத்தா
ரெல்லாரு முண்டாலு மித்தனையுங் குறையாதே. (௭)
பொருண்ட மாலுண்டென் படைப்பவனே, டாறுண்டெ
ளருண்டெ ளொழிந்தெனருகாது பெருகாது ()

வேறு.

ஒழிந்த போன காணுமஞ்ஞனும்மென்றுரைக்கவே
மொழிந்தவாயை யோடிவந்து முத்தமுண்டு நிற்குமே.

கொலையுள்ள பரிசுசொன்ன சுருதியைக்கொ டாடுமே
யிலையென்ற பேயின்வாயி னெரியைவையு மென்னு
மே. (௰)

மாயைநாம மஞ்ஞனும மாளுமாறு வந்துநந்
நாயனு ரழித்தவாறு நவிலுமென்ன நவிலுமே. (௰க)

வேறு.

வாயொரு கோடிகொண்டு மலரோ னுதித்த
முதலாக விற்றைவரையா
வாயிர கோடிகோடி மறையோதி யோதி
முடியாது காணுமளவே (௰௨)

ஞானமலாதபாத முரையாடி ஞான
முரையாடு காலையரனர்
மோனமலாதுகூற முடியாமல் யாது
மொழியாரி தியாவர் மொழிவார். (௰௩)

வாயுரை யாடுமெல்லை யலநீய ஞரொன்
மனனேபு குந்தமொழியிப்
பேயுரை யாடுகின்றதெனநீர் கொளாது
பேரிதாக வுன்னுமிதுவே. (௰௪) ஆ_ாகூ௫.

அஞ்ஞன்சரிதை.

நாயக னுளுகோல வருண்மேவு நீரு
நலனோடு கேண்மி னெடுநா

னாயக னுமெவன்மாயா புரிமேவி நாளு
மரசாளு மஞ்ஞ னளவே. (௧)

வேறு

மாயாபு ரத்துள்ள வலிகூறு மளவோ
மாதாபி தாமாது லன்றார மகவென்
றியாவ ருஞ்சுற்றம் வீழ்வோர்க ளோநற்
காதார மேபோல வமிழ்விக்கு மகமே. (௨)

இன்னுனி யானின்ன னிவனென்று பார்த்தா
யியானென்ன தென்கின்ற பதனஞ்செய் திகன்
றன்னு மிதுபோக விடுமாறு முடியாச்
சங்கற்ப மாமென்பர் சலியாத மதியோர். (௩)

ஓராத வாமூடி யுணர்வென் குடார
முள்ளூ டறுத்தற்கு மொன்ணுமை வியாரும்
பாசாத பொல்லா வொழுக் காழிழுக்கே
படைவீடு சூழப் படுங்காடு தானே. (௪)

அலகற்ற விபரீதம் விளைவிக்க வுரியா
ரளவற்ற பலவீர ரவர்சுற்ற முடனே
யுலகத்தை முழுதாளு முணர்வற்ற கெடுவா
னுருவத்தை யிருள்வேறொ டுவமிக்க வரிதே. (௫)

வேறு.

கருதுமொரு பொருளையொரு கண்மளவி லடையவிகல்
கடவுமவன் விடயரதமே
வருதிசைகள் முழுதுமொரு நொடியளவில் வலிசுழல
வருகமன மனதுரகமே. (௬)

பரிஞ்ஞிசெ யருமறைகள் பகருமல ரடியிணைகள் பரவ
நினை விலர்களெனவோ
வரஞெடரி யயனெனினு மிலதகில மடையவெறு
மஞ்ஞுல பதியாணையே. (௭)

வேறு.

அந்தக் ஞஞ் செய்நன்றிக் காகாப் பழிநல் வழியளவி
னிந்திர ஞகும் பிறரொருவ ரேதங் காணு மிடத்திலே.
மெய்யென் றிருப்ப துடம்பினையும் விளங்கிழை யார்தம்
வார்த்தையுமே, பொய்யென் றிருப்ப தீசனையும் புரையற்
ரோர்கள் புகல்வதுமே. (௯)

வேறு.

நஞ்சியு ணர்க்கினவ் ஞூம ஞகுமே
வஞ்சியு ணர்க்கின்வன் வாய்கோடி யாகுமே (௰)
எவ்வத் தேற்பவர்க் கியக்கை யில்லனே
கெள்வத் தேடி ஞெருகோடி ஷகையனே. (௰௧)

இளமை யும்பிடும் பைக்கிட னாகிய
வளமை யும்பெரி தென்றே மதிக்குமே. (௰௨)

சாயை போலுஞ் சகட்டுருள் போலுமா
மாய வாழ்க்கை நிலையாய் மதிக்குமே. (௰௩)

மின்ற னெல்லை விதியற்ற யாக்கைகொண்
டென்று மிங்கிருப் பார்போ னிருக்குமே. (௰௪)

அறஞ் சுருக்கு மவலம் பெருக்குமே
புறன் பெருக்கும் புகழுஞ் சுருக்குமே. (௰௫)

நிரயத் தோடு நெடுவான் முகட்டொடுந்
துரையத் தோடுந் தனிபூச லாடுமே. (௰௬)

வேறு.

ஓதலு முணர்த்தலு முணவு சூட்டியே
சாதலும் பிறத்தலுந் தவிர்க்க வல்லவே. (௰௭)

இந்த மன்னனுக் கென்றும்ப வங்கொள
வந்த துன்மதி மந்திரி யாகுமே. (௰௮)

அற்ப மில்லை யருந்தவ மாதரார்
கற்பு மில்லை கழிந்தா ரொழுக்கமே; (௰௯)

ஆக மேவடி வாகிய மைந்துள
மூக னீதி முடியார் மொழியவே. (௨௰)

முன்றனை யற்றனை மூவுல கத்தினு
மிறைய வர்க்கறி விப்பாரு மில்லையே. (உ

உண்மை யின்றி யுலகத்து ளோர்படுந்
தன்மை தம்பிரான் றானே யறியுமே. (உ

அவப்பிர காச வவலம் பெருத்தமை
சிவப்பிர காசன் றிருவுளஞ் சென்றதே. ஆ உ

அஞ்ஞன் சரிதை.

வேறு.

திருவவதாரம்.

வன்பே யனையான்மேல் வரமெய்ப் பரனுக்குத்
தன்பே ரருண்முற்றுந் தானோர் வடிவாயே. (க

ஆரா வமிர்தின்சே வடியைப் பிரியாவச்
சீரா ரடியாருந் திருமே னிகள்கொண்டே. (உ

குருநா யகனார்தங் கோலங் கூறப்பண்
டருநான் மறைகாணு தறிவா ரினியாரே. (ங)

பிறவிப் பகைவெல்வார் பிறிதற் றொருதாளு
வறிவுற் றவரென்றே யறையுங் கழலிட்டே. (ச)

வேறு.

ஞான மேதிரு வாபர ணங்களு
ஞான மேதிரு மாலையுஞ் சாந்தமு

ஞான மேதிரு வானவக் கோலமு
ஞான மேபருண் மேனியு ஞானமே. (௫)

ஞான மேயுடை யாடையுங் கூரிய
ஞான மேயுடை வாளுந லன்புனை
ஞான மேவரு மூர்த்தியும் யாவையு
ஞான மேபிற வுஞ்சில நல்கியே. (௬)

வேறு.

கமல நான்முக ஞர்தங் கருத்தையுங்
கடந்து லோகமடங்கக் கவிப்பதோர்
விமல மாகி விரிந்தொடுங் காமலே
விளங்கு தண்கொற்ற வெண்குடை காப்பவே. (௭)

பூவி லேறியும் போதக மேறியும்
புள்ளி லேறியும் போர்மயி லேறியுஞ்
சேவி லேறியுந் தேரினி னேறியுஞ்
செய்ய பொன்னடி சேரச் சேவிக்கவே. (௮)

வேறு.

உம்ப ரானவர்க் கரிய தானுவிவ்
வுணர்வி லானையொன் றுக வுன்னியே
தம்பி ரானருட் கருணை யாலையன்
றானும் வந்தனன் றரணி தன்னிலே. (௯)

வம்ம ரங்குழந் தமரர் தேடவிம்
மண்ணின் வந்ததா ளிணைவ ழுத்தியே
யெம்ம ருங்குநின் றடியர் போற்றவே
யெம்பி ரானிருந் தருளு மெல்லையே. ௬௱௨௰௩

---

வேறு-கர்மாதிபடைச்செருக்கு.

புணர்வினை யுருந்தலென்றும் போற்றுத லன்றிவேறோ
ருணர்வறு மரசன் றன்பா லொற்றரு மோடிச்சென்றே (௧)

மதித்தல்வின் னவர்க்கு மொண்ணு மறைப்பொருள் மணி
தனுவக், துதித்தன னென்னும் வார்த்தை யுண்டென
வுரைத்த போதே, (௨)

இனிதினல் வாழு மென்னை யீசனென் றொருவன் வெல்ல
மனிதனுப் வந்தா னென்னும் வார்த்தையும் வார்த்தையா

வேறு. [மே, (௩)

நன்றில்லை யெனுமீரு மொன்றுண்டு போலே
புரைத்திர்க ளெனுவொற்றர்தா
மின்றில்லை யென்னுதி ரேமிந்த வுலகத்தி
னியல்கூறி னேமென்னவே, (௪)

அரனில்லை சமயங்க ளவரேயு ரைப்பார்க
ளறையென்ன வவர்வந்தமெய்

யுளவில்லை யென்றொன்று மறியே முரைப்பா
ருரைப்பேசுதி ஞெமென்னவே. (௫)

சொன்னார்கள் சொன்னத்தை மெய்யென் றிருந்தார்கள்
சுற்றஞ்சி றைச்செய்கவே
யென்றுதன் முன்னேவர் பொருளாக விக்காவு
லெனமாா னிகல்கூறுமே. (௬)

மண்ணேரி னென்னையேவர் மலைவார்கண் முத்தேவர்
மாறுகி யானபடிபோய்
விண்ணேறி றொன்றொருவன் மலையேறி றொன்றொருவன்
வேலைக்கு ளானொருவனே. (௭)

வேறு.

பண்டொர் நான்மலர் பட்டின்றி மக்கறைக்
கண்டன் மேனிசெம் பாகங்க றுத்ததே. (௮)

வேலை ஞாலத்த வரென்னை மீறவோ
மாலின் மார்பின் வடுக்கண்டு வைத்துமே. (௯)

விதியு மென்றன் விதியினை வெல்லுமோ
மதிய ழிந்து மகட்கும யங்குமே. (௰)

வேறு.

மலரோனு மாலு மதிசூடி வானும்
வடிவோடு கூடிவரும் யாருமோர்

வேறு.

அணிச்சமஞ்சு மடிபிணை யார்மறப்ப ரறிவிஞன்
மணிச்சர்முன் பிருந்துதான் வடிக்கும்வார்த்தை வார்த்
தையே. (௫௬)

பாவமேவு கொலைபினோடு படுகனற்செய் கொடுவிழிக்
கோபனே யெழுந்தபோதிவ் வுலகுகின்று குலையுமே (௫௭)

வேறு.

குலைகுலைந் துளநினைந் திடுநினைந் திடுதொறுங்
குடர்கரிந் துலகடங் கலுநடுங் குதலுறத்
தலைகுலைந் துடைகுலைந் தறிஞரும் பெரியதந்
தலைமைகுன் றிடவெழுஞ் சலமெனுந் தழலதே. (௫...)

தெருடரப் பொருள்விரித் தருடரத் திரிகருந்
தெளிஞரைத் தெளிவறத் திசைமயக் குறவெழுங்
குருடெனச் செவிடெனக் கொலைசினக் கனலெழுங்
கொதிபொறுப் பவர்களைக் குவலயத் தவர்களே. (௫...)

வேறு

வருசெ ருச்செயா வகைய றத்தையே
வடநி ழற்கணே மதிபெ றச்சொனான்
ஒருச ரத்திலே யொருக ணத்திலே
யுழல்பு ரத்தைநீ றெழவொ ருக்குமே.

மறுக வுக்கிரத் தொழில ரக்கர்தம்
மனமும் வாரியு மதிளி லங்கையுந்
தெறுக னற்கொளச் சிலைவ ளைத்ததுந்
சிரமு திர்த்ததுஞ் சினமி குத்தலே.
கோப மிக்கபோ தெவர்க ளாறுவார்
குறுகு வோர்தமைக் கொடிய நோய்புகுஞ்
சாப மிட்டுமா தவர்க ளாயினார்
தலைமை மிக்கதங் தவமி ழப்பரே. (௨௨)

வேறு.

அடலோப னெழிவேலை [illegible]வார்க ளடையக்
கடலோடு மலைபோடு தடுமாறல் காணே. (௨௩)
பேரோத [illegible] பேராசை கூர்போ
தாரோடு முண்டோவெ ரண்பெண்ப தங்கே (௨௪)

வேறு.

ஆலஞ்சேர் மிடற்றானு மையத்திற் குழந்திலனே
மாலும்போய் மாவலிபான் மண்வேண்டி நின்றிலனே
உரையாத பொய்யுண்டோ வுலோபனை யுற்றக்கார்ற்
றரையாளும் பொருட்டன்றோ தருமனும்பொய் சாற்றி
னனே. (௨௫)

வேறு.

ஈசனொளி யோரிடத்து நிகழா வண்ண
மெவ்வுருவுந் தன்னுருவா மெங்குந் தானு

மாசையவ ஞேர்சேஞ பதியின் றேவிவ்
வஞ்ஞகுல பதிபெருமை யறிவார் யாரே. (உஎ)

புகர்வெண்டேர் புனலென்று புலன்க ளாரப்
போயலையத் திளைத்திளைத்துப் பொய்யே யார்ந்து
சகர்திண்டா டச்செய்யு மோக னஞ்ஞன்
றுணை சமன்வேறோர் தன்மை யின்றே. (உஅ)

வேறு.

மோகமுற வேமுனிவர் மூவர்முதற் றேவர்நரரியாவர்களு
மியானையுமெலா, மாகமது யானெனது தந்தைதமர் தார
மக வென்பது மொழிந்ததிலரே. (உகூ)

மோகமுற வேயெவரு மோகமத னவிடரின் மூழ்ந்துவர்மு
டிந்தவிடமும், சோகமுற வேதுய ரழுந்துவத லாலது தூரந்
துணர்வு கூரவிலரே. (௩0)

ஓசையி னிற்பெரியே ஞேதின்மி கப்பெரியே
னுங்களி னெண்மடியான் வம்சமெ னிற்பெரியே
னீசனெ னக்கெதிரோ வேவரெ னக்கெதிர்வே
றென்னும கங்காரத் தெவரெதி ரேறுவரே. (௩க)

என்னள வீசனும்வந் தேற்றெருழி யும்பலிசென்
றேற்றில னுகினயன் றோற்றமி லன்றிருமா
றன்னள வோரவியுஞ் சந்திர னிந்திரனுஞ்
சற்றவெ னப்பகரும் தம்படை நம்படையே. (௩உ)

வேறு.

கதத்தயானை யைத்தணிப்பர் களிமிருக் கெழுக்கமா
மதத்தையார் தணிக்கவல்லர் மன்னிலன்றி யின்னிலே.
எச்சரங்க ளுந்தமக் கெதிர்ந்தராசர் களோர்படு
மச்சரன்ற னாவிதன்னை வவ்வுதற்கு வல்லரோ. (௯௪)
தந்தவப்ப யன்பொசிக்தல் கண்டிருந்த தன்மையோ
வெந்தவப் பொருமைதன்னை வெல்லபாவர் வல்லரே (௯௫)
ஞானமாசில் தன்மவித்த காமராம னாவேயு
மீனமாக்கு நம்படைக்கொ ரெல்லையெல்லை யென்கவே
இங்கியாது மிவனுரைப்ப தின்பமெய்தி யிறைவனைச்
சங்கியாம லஞ்ஞசேனை காமனிற் றிருக்கவே. (௯௬)

காமாதிபடைச்செருக்கு முற்றிற்று

ஆக உருஅ,

வேறு

௧ ஞானவினோதன்படைச்செருக்கு

எவ்வுயிர்க்கு முயிராய விறைவன் பொற்றா
ளெய்தவிருந் தவஞ்செய்தோ ரிறைஞ்சிப் போற்றி
வெவ்வுயிர்க்க வருமஞ்ஞ வேந்தன் றன்னால்
விளைந்ததெலாம் விண்ணப்பஞ் செய்த போதே. (௧)
போராரு மஞ்ஞனவன் றன்னால் வையம்
புகுந்தபிழை கேட்டருளிப் போத மூர்த்தி

சீராரு மடியவரைத் திருக்கண் சாத்தத்
திருவடித்தா மரையவர்தஞ் சென்னி கொண்டே. (௨)

எம்பெருமான் றிருக்கடைக்கண் பட்டார்க் கன்றோ
வெளிதாகி யிருப்பதுதா னேற்ற மிக்க
வும்பருமா யாபுரத்திற் கஞ்சா நிற்ப
ரொழிந்தவரே யினியொழிப்பா ருலகத் துள்ளே (௩)

வேறு.

வருபாசக் கட்டறுத்து மாயாபுரமழித்து மயக்கந் தீர்வார்
சொருபானந் தாநினக்குத் தொழில்செய்வார் பிறராலுந்
தொலைக்க லாமோ. (௪)

கச்சொருவுங் கனதனத்தார் கலவியினும் புலவியினுங் கல
க்கந் தீர்வார், மெய்ச்சொருபா னந்தநிலை மெய்ப்படத்தாம்
பெற்றவரே வேறார்வல்லார் (௫)

வேறு.

என்று நின்றுரை செய்த வெல்லையி
னெந்தை ஞானவி னோதனைச்
சென்ற வன்றன தாவி யுண்டு
திரிந்தி டென்றருள் செய்யவே (௬)

தம்பி ரானிரு பதங்க ளுந்தனது
சென்னி கொண்டறிஞர் தம்பிரா

னெம்பி ரானேவிடை கொண்ட வன்படை
யெழுந்த வாறெவ ரியம்புவார். (எ)

வேறு.

கடலன் காமகோப லோபமாறுவ
கருணை நி ஷாதியாய்வி டாதுபாய்வன
கருவெனு நாமமாள வீதிபோவன
கலகம றுதவோசை மீளமீள்வன
வுடலொடு கோபமேனு மேனுமூள்வன
வுணர்வறி யாதவேட கூடமோதுப
வுலகிய லாரநாற வேயெபாறுதன
வொரிமத யானைகோடி கோடிகோடியே. (அ)

உறவொடு வேறிலாத வாசியூர்வன
வுலகிரு நாலுமாறு மேனுமாவன
வுடுபதி சூரியாதி காணொணாதன
வுயர்வது வேறுதான லாதிலாதன
துறவொடு சானுஞான வீரர்சூழ்வன
சுருதிகள் போனநீதி வீதிபோவன
துணிவுற வேறுபாடு சாடியோடுவ
சுடர்விடு ஞானவாழி கோடிகோடியே. (கூ)

சிதறவி டாமல்பாது டீர்பநாலுவ
செறிபவோ றுதஞான வாளிபாய்வன

திருகுதல் திருமாறு மாறுசேர்வன
    சிறுகொழி யாதுகாதி யோதும்வாதிகள்
சுதறிய கூர்மைவாய்கள் மூடவேறுவ
    குணமொரு காலிலாத தானநீர்மைய
குருபர னார்தமேவல் வீதிபோவன
    குதர்க்க ராசிகோடி கோடிகோடியே. (௰)

இனியன வானகூறும் வாயும் வாய்மையு
    மிறுதிய தானபோதும் வாழுபோதினு
மியல்வழு வாதஞான தீரபாவமு
    மிலகிய ஞானவாரு மோனவீரமு
மனியத ஆணவாதி வாதவாண்மையு
    மவரவர் சீலமோடு வாழுநீர்மையு
மனவுப டாமையேசு பாவமர்கையு
    மதிபய மானவீரர் கோடி கோடியே. (௧௧)

வேறு.

இந்தவுல கந்த ரஞ்செய் தெழுகட
லெண்டிசைக லங்கி நின்ற குலமலை
வந்துவிழு மன்று மொன்று மசைவிலர்
வந்தபடி கண்டிருந்து மகிழ்வரே. (௰௨)

சந்தன குங்கு மங்கள் புழுகதில்
தண்பனி தந்திசா திந்து மகிழ்விலர்

நொந்தன கொண்ட ரிந்து நுகரென
நொந்திலர் முந்தை யென்று நகுவரே. (௰௩)

நொந்தனர் கன்றி வந்து நலிபவர்
நுந்தன ரென்ற மைந்த கடன்ற
வந்தன வென்றி மேன்மை வரமகிழ்
வந்தன ரங்கி ரண்டு முடையரே. (௰௪)

வேறு.

செயலினை யற்றி ருக்கு முனிவர்கள்
செறிவினை யைக்கெ டுக்கும் வகையினின்
முயல்வினை யைக் கெடுப்ப ரறிவினின்
முனைவினை யைப்பொ சிப்ப ரடையவே. (௰௫)

வேறு.

எண்ணி லாதவியல் ஞான வீரர்தமை
யெண்ண லாகுமள வெங்ஙனே
கண்ணில் வேறுபட வின்மை யாரொருவர்
காணு மாறரியர் காணுமே. (௰௬)

கீழி லாதபடி கீழு மேலுமதின்
மேலி லாதபடி கெழுமியே
சூழி லாதபடி சூழு தானிலை
சொல்ல லாகுமள வல்லவே. (௰௭)

வேறு.

நிறைந்தபெரும் படைநோக்கி நீரழிக்கும் பரிசெமக்கிங்
கறைந்திடுமென் றருள்செய்ய வரியதிரு பகன்றெழுதே ()
தோரதா ரல்லரோ சேயிழையா ரெனத்திகைப்பா
ராராயு மறிவுடையார்க் கருவருப்பே யல்லவோ (௧௯)
மாலாய வவரன்றி மாசற்றார் மாணிழையார்
கோலாக லங்களையு மொன்றாகக் கொள்ளுவரோ. (௨௰)
நரம்பென்பு மூளைதசை நவைதருகோ ளாற்பொதிந்த
குரம்பைதனைக் கற்றோருங் கொண்டாட லென்கண்டோ

வேறு.

தசையறாத முகத்தைவெந்தழ சந்திரமண்டல மென்பரே
வசையறுமயிர் தன்னையுங்குழல் மங்குலென்று மதிப்பரே.

கற்கநாறி மணக்குங்கும களபவண்டறு மளவிலாத்
துற்கநாறுதல் கண்டிருந்துஞ் சுகந்தமென்று துதிப்பரே

பீளைசாரிய கண்களைச்சில பிணைகளென்று பிதற்றியே
சூளையாரையு மொன்றெனச்சில சொல்லுவாரவர் புல்லரே
மெய்ம்மையேகொடி யெனதுவேள்கொடி மீன்விடும்படை
மாதரார், தம்மையேயென தவர்தமைத்துணி செய்ததைநி
யச் சக்ரமே. (௨௫)
பாவைமாருடல் பைமறிப்பதோர் பார்வையிற்பொடி பட்ட
தும், பூவைமார்பொடி யாகவேபொடி யாகி வேறுயிர் போ
குமே. (௨௯)

இறைவன்முன்பு நிருபகன்றெழு திவைவிளம்பிய வெஃ
கவிற், பொறைவலஞ்செய்து தொழுதுறும்பகை பொடி
படும்படி புகலுமே. (உஎ)

வேறு.

மாசாய நாவுடையார் வாய்திறந்தா லவர்களுடன்
பேசாம லிருந்துவிடு மஃதன்றோ பெருந்தகைமை (உஅ)

வைதாரை வாழ்த்தினர்போன் மதித்தென்று மறக்கொடு
மை, செய்தாரை யறியாத செயலன்றோ செயலாதல்.

பொதுவதுவா நிறைந்தபரம் பொருளேபோல் யாவர்க்கு
மதுவதுவா யிருந்துவிடு மஃதன்றோ வவிரோதம். (௩0)

வேறு.

இகழாவதேது புகழேதுதேரி லிவையாவு மாவதுரையே
யசழ்வார்களியாவ ரருள்வீர்களியாவ ரநுபோக மாகுமவையே. (௩௧)

எரிபானகோப மெழுபோதிறைறி யினிதாய கூறியெதிரே
சிரிபாதிரார்கள் பெரியோர்கள்சீற நினைவார்கள் வேறு
இலரே. (௩௨)

வேறு.

முகுளிதம்பெருகு முகமொழிந்துவிட முறுவல்கொண்டு
முக மலர்வனே, வெகுளிதங்குமன வெறிகெடும்பரிசமிகவு
மங்கினிமை யினவனே. (௩௩)

மொழிதருங்கனலு மவியநின்றயிர்த மொழிபெறுந்தடனி
பொழிவனே, யழிதரும்படிபென் னுடலில்வந்தனவெ
ன லுபவங்களென வயில்வனே (௧௪)

வேறு.

மினையாவென் பொறைப்படைக்கு விருந்தாக்கி விடுகின்
றேன், பகைபாவங் கொடுமைகொலை படையுடைய கோப
னையே. (௧௫)

பொறைபெரிது மிவையோதப் புகழ்பெரிய சந்தோட, னி
றையுடையா னடியேத்தி நிறைவுடனின் றன்றவுறவே.

வேறு.

என்றும் பொருவரிய வின்பப் பொருளுடையார்
பொன்றும் பொருளும் பொருளாகப் போற்றுவரோ (௧௭)

வாளு ளொழிந்தாலும் வாய்விண்டு தாம்வேண்ட
நாளு தொழிவாரோ நன்றுய நாவுடையார். (௧௮)

வேறு-

உளம்படு பேராசை நோய்கூர மென்மே
லுழுன்றவர் வாழாத வாகாள லாமே
வளம்பட வாழ்வோமெ னுதார்கள யாரே
வருந்தினும் வாராது வாராது தானே. (௧௯)

புலன்றலை சேர்ண்டேறு பொன்போக மேன்மேற்
புணர்ந்திட வுண்டாகி வந்தாலு யாது

வலந்தலை கண்டாசை யொன்றோடு றுதே
யறிந்தவர் சந்தோடம் வந்தாறி ஞோ. (சய)

வேறு.

இல்லாத பொழுதின்ப மிஃதென்று பிறர்பாற்
செல்லாத செலவென்ப செலவாய செலவே. (சக)

படைத்தவ னிருந்திசை படைத்தபொரு ளெங்கே
யெடுத்தவன் விழிற்சுமை விழாமறு மிராதே. (சஉ)

ஆமாகும் வழியா னருந்திக்க ருடையத்
தாமாய்தல் பொருள்மாய்தல் தவிராது பிறிவே. (சங)

வாதாதி நுகர்கின்ற வயிறுள்ள தொருசா
ணோதாலி தமையாதி தென்னே! விதென்னே!. (சச)

ஏசாத பற்றின்மை யெனுமாயு தந்தா
லாசாப சாசோடு மடலோப னிறுமே. (சரு)

வேறு.

சந்தோட னிவையிவை சாற்றவே
யந்தோ வென்றருள் செய்யும னிலே. (சசு)

விவகார பராமுகன் மேவரும்
பவகாலன் பதம்பணிந் தோதுமே. (சஎ)

வேறு.

அத்தனொ டன்னைக் கன்புசெய் கின்றா
ரனவில் பிறப்புற் றவையவை தோறு

மெந்தனை தாயுந் தந்தையு முற்று
ரித்தனை யன்றோ யிவர்களு மிங்கே. (௪௮)

சால வுதிக்கும் புழுவுட றன்னிற்
றகவின் மலத்தோ டொழுகு முடம்பே
போல வுதிக்கும் புழுவினை யென்னே
புத்திர னென்றே புந்திசெய் வாரே. (௪௯)

வந்த வழிக்கண் வந்திலர் போகும்
வழியினும் வருவா ரிலரிடை வழியார்
தந்தை மகத்தாய் தம்மொடு வந்தார்
தாரமு முற்றார் தாமுமெ லாமே. (௫௰)

அமரு முடம்போ டழிதுயர் வந்தே
யலம்வரு போதங் கனுபவி யாமே
தமர்கள் பகிர்ந்தா ருளரென வுண்டோ
தம்முற வாவார் தாமல தின்றே. (௫௧)

வேறு.

ஒழிந்தன வேறற வொன்றுட றானு
மழிந்தது தம்முட னுற வாரே. (௫௨)

சுற்றமொ டுற்ற துவந்துவ மெல்லா
மற்றவர் தம்முட னற்றவர் தாமே. (௫௩)

வேறு.

கதறிய வாழியாறி யாடுதல் கருதினர் யாவர்தாமி யாவையு
முகறிய ருகபோது நாடொறு மொழுகவி டர்தவார வா
ரமே. (௫௪)

கழியநி லாதபோது சேறது கழுவியு மிலாபமேது யாவையு
மொழியநி லாதபோது மாசற வுதறுவொ ஞுறுபாச மூடு
மே. (ருரு)

வேறு.

உறவாடு பந்தங்க ளெல்லா முதிர்ப்பன்
றுறவாகும் வச்ராயு தத்திற் றுணித்தே. (ருசா)

வடிவற்ற கோன்மைந்தன் முன்னின்று மறைநா
முடிவற்ற பலகோடி மொழியாத முன்னே. (ருஎ)

தத்தக் தொழிற்கொன்று தாழ்வின்மை யின்னே
முத்தன் பெருஞ்சேனை யெல்லா மொழிந்தே. (ருஅ)

ஞானவிநோதன்படைச்செருக்குமுற்றிற்று ஆ-ரு-டா-யசா.

———( )———

வேறு—ஞானவேந்தன் படையெழுச்சி.

தஞ்சேனை கண்டன்பு தாமுற்றி வாறே
ஈஞ்சே யனன்மே னடக்கின்ற போதே. (க)

வேறு.

வித்தக வேதங்க ளேவாசி யாவே
மெய்த்திற னுய்நின்ற தோர்பாக னுவே
தத்துவ மாகின்ற தேரேறி னரே
தற்சொரு பானந்தர் தாள்சூடி னரே. (உ)

வாதக ரோடினு மாதரவோ டோர்கால்
வாசியி லாலாசி யேவாரி தானும்
போதமே போதக மாந்தேர்வு தேர்தாம்
போல்பவ ரேவீர ரேதோது மாறே. (௩)

வேறு.

தானதேதுமில தாகியாகவல தம்பிரானுடைய தானைமால் யானைதேர்புரவி யஞ்ஞமன்னனது மாயமாபுர மணைந்த தே. (௪)

புறம்புறுதபடி சூழுநம்படைஞர் போர்துகென்றருளு போதி லோ, ரறம்புகாதபடை வீடுசூழ்ந்து மடங்கவும்படைஞ ரானவே. (௫)

முகுந்தனன்றரனு மன்றுநாலுதிசை முகனுமன்றவர்த மூலமே,புகுந்ததென்றிகல் புறம்புகண்டவ ரடங்கவுள்புகுந்த போதிலே (௬)

வேறு.

மருவி யெங்குமுற நின்றபொரு ளின்றுபுவிமேல்
வடிவு கொண்டுவரு கின்றதென நின்றுமொழிவா
ரருவ மென்றுமொழி கின்றபொரு ளிங்குவருதற்
கடிமை யென்றுசிலர் நின்றுநகை கொண்டுவிடுவார். ( )

சமய மென்பனவு மொன்றுமில தென்றுமொழிவார்
தவமுடிந்தது முடிந்ததென நின்றுசமைவா

ரமைய் நந்துமுனி யென்றமைவு வந்துவிடுவா
ரறிவி லன்புரமு ழிந்ததினி யென்றப்ருவார் (௮)
குடிகெ டும்படிபு குந்ததுணர் வென்றுரைவார்
குலம டங்கலும டிந்ததென நின்றுருலைவார்
முடிவில் வந்துறுவ தொன்றென மொழிந்தகனியார்
மொழியு மின்றுதலை வந்ததென நின்றுமொழிவார் (௯)
பறைவ தென்கொல்பல விங்கவர்க ளின்றுகெடுவீர்
பவமெ றிந்துவரு கின்றபடி கண்டுமினுநீ
ரிறைவ னன்றென வியம்புவதெ னென்று மொழிவா
ரிருவர் தங்களி வியம்புவ தடங்கவினையே, () ஆ ௩௨௯

---

வேறு.

அஞ்ஞவேந்தன்படையெழுச்சி.

விடர்விளங்கு தானையஞ்ஞ வேந்தனுக்கு மாந்தர்போய்ச்
சுடர்விளங்கு ஞானசேனை சூழ்ந்ததென்று சொல்லவே. ()
மூவர்சேனை யென்கண்முன்பு நிற்கவில்லை மோய்ப்பினோ
டியாவர்சேனை யென்னைவெல்ல விங்குவந்த தென்னவே.
யாவர்சேனை யென்னயா மறிந்ததில்லை யெங்களுந்
தேவதேவ தேவனென்ற சின்னவோசை யென்னவே, (௩)

வேறு.

ஏகமுத லோனருவ ருகினமர் செய்யவவ
னென் கணெதிர் நிற்கவிலனை

தேகமுள வேலவனை மாரன்முதல் வீரர்படை
சிந்துவர்கள் சிந்திவிடவே. (௪)

வானவர்க டானவர்கண் மானவர்க ளானவரின்
யாவர்மறை கூறுபரிசே
ஞானபர மாய்மருண ராசன்முத லானவிரு
நால்வரையும் வென்றவவரே. (௫)

ஐந்துமுக விந்திரிய முன்னுமன புந்தியுயி
ரோங்கியவ கங்கார முமிங்
கியாதுமுள சங்கமெனு மேழணியி னென்றுவிடு
விக்கிலவ ளிங்கிறைவனே. (௬)

ஆண்டகைய னுகினனை யஞ்சுதலொ டொழித்துவரு
மவனையெதிர் கண்டளவிலியான்
மீண்டிடுவ னுகினனை யஞ்ஞவர சென்றழையல்
வேறுபெய ரிட்டழையுமே. (௭)

என்றுபல பாஷைகள் கொடுத்துமத னுதிபடை
யேவியிறை வன்கணெதிரே
நின்றுபொர நேரறிவி னெஞ்சினிசி கோடியிரு
ணின்றதென லாகுதிலையே. (௮) ஆ. ௧௭௧௭.

———O———

வேறு. தொந்தயுத்தம்.

வேதநிரன்ப டையுடன் வெஞ்சினப்

போத கினன்படைபொரப் போகவே. (௧)

துன்னிட் டீடகன போதகந் தோன்றலும்
வென்னிட் டீடகின வைம்புல வேழமே. (௨)

இரத மான ரதத்தெதிர் நின்றில
விரத மான விடய ரதங்களே. (௩)

புரணப் பாய்பரி தோன்றப் புரத்துள
காணப் பாய்பரி யாவுங்கரந்தவே. (௪)

அறிவன் பெருஞ்சேனை கண்காண வெதிரே
வஞ்ஞன்கொ டுஞ்சேனை யுஞ்சாம லெழவே
வெறிவெங் கதிர்ச்செல்வ ரெத்திக்கு மெழவே
யிரியாம லிருணிற்கி னிதுநிற்கு மெதிரே. (௫)

வேறு.

ஓடலின்றியெதிர் நின்றவீரர்தமை வீரங்கொருவ ரொழிவறச், சாடுகென்றருள வீரர்சொல்லுவர் வணங்கிவீரனிரு தாளின்மேல. (௬)

தும்பை.

அறிவிலன்படையு மளவினம்படையு மறியவின்றிவரு மறிவுறுங், குறியுறும்பரிசை யருளுகென்னவவர் குறியுறும் பரிசு கூறுமே. (௭)

வேறு.

விண்டிருந்தென்மெய் கண்டுளோர்தவ வேடமேவியென் கோடிமாதரைக், கொண்டிருந்தெனவர் செய்ததேதவங்

கொண்டகொண்டதே கோலமாகுமால். (௨)

ஆ. ௧௨௪௰௧.

வேறு.

நனவுநிலைபோல வறிவுமறிவார்க
ணவையுமறிவார்க ளலனுளோர்
கனவுநிலைபோல வெதுவுமறியாத
வதுவுமறியார்கள் கயவரே. (௧)

வேறு.

கற்றவரு மற்றவரு மொருவர் செய்யுங்
கடுமையினிற் கனுமும்வகை யொத்து மொவ்வார்
செற்றவர்மே லுறுஞ்செயிர்க்கு நோவர் நல்லார்
தீயுடன்மே லுறுஞ்செயிர்க்கு நோவர் தீயார். (௨)

உள்ளமழிந் துகுமன்பர்க் கன்றி யோரா
வுலகர்திறத் தினுமுண்டங் கொவ்வார் மாதர்
கள்ளவிழிக் கழிந்துகுவா ரறியா ரீசன்
கலந்தவிழிக் கழிந்துகுவார் கவலை யற்றோர். (௩)

அறிவினன் மிகுபவரு மறிவி லோரு
மாயுமா றொன்றுமில ரெரினு மொவ்வார்
பிறிவிலா மையிலறியார் பிறவி நீத்தார்
பேரிருளா லொன்றறியார் பிறந்து சாவார். (௪)

மகவருடப் பால்பபக்குங் கொங்கை நின்ப
மயக்கமயக் குறுங்கணவன் வருமிம் போது

மிகவுணர்ந்தோர்க் கும்பிறர்க்குஞ் சியல்கள் பார்க்கின்
வேற்றினும் பாவகந்தான் வேறு வேறு (௫)

அழுக்கிலவர் செயவேண்டுந் தவமு மில்லை
யழுக்குடையோர் செய்வதிலை யாத லாலே
பொழுக்குடைய நல்வினையு முயர்ந்தோர்க் கில்லை
யொழிந்தோர்க்கு மில்லெனினு மொவ்வா ரொவ்வார் (௬)

மேவிவிடு மருட்படைக்கு மருட்ப டைக்கும்
வேறறிய விவ்வாறு விளம்ப வீர
னேவிவிடு மளவதனி லஞ்ஞ சேனை
பிறந்தபடி யதனை யுமிங் கியம்பல் செய்வாம். (௭)

வேறு.

உருபக மகளிர் திறத்தினை புசாவொடு மறமொழிப்பொடு
நிருபகன் மதனை யழித்தன னிலவிய ரதியு மிறப்பவே. (௮)

பரவனு மிகனு மிரங்கலில் பாடுறு கொலையு மெரிந்தெழு
கோபனு மடைய நலம்பல கூறிய பொறையி னழிந்ததே ()
மோகனு முலகு மயக்குற மூடியமபனு மிகுந்தெழு, சோக
னு மகிழ்வு நசித்தனர் தூய்மதி கணவன் விழிக்கவே. (௧௰)

வேறு.

ஆனசந் தோட்டனில் லோபனு மாசையும் பேசுகள வர்தியு
மானசந் தாபனுந் தீனனு மானமுஞ் சோரவுயிர் மாயுமே.

வேறு.

அறனை யழித்தனன் மறந்தினைய ருசையினைநல்
வயிர்த சிறையு மழித்தன னடக்கனுமதத்
திறனை யழித்தன னுமேபட்டைசயி னபேட்டைசபொடிநற்
றேர்வி லேலெபரிய டம்பனுயிர் சிந்தியதுவே. (கஉ)

ஆங்க ரிப்பரிய சாந்தியி னழித்ததுயிர்கட்
கன்னை போலுறவி மோகமெழ வாருயிரையுந்
தீங்க ருத்தியிடி மச்சர மழிந்தபரவே
செய்யு மையமழி வுற்றது மிருந்தெவிவினை (கரு)

தற்க மோனமுற வேபொடி தமம்பொடியுறுஞ்
சத்து வத்தின்வரு சங்கமு மசங்கமுறநேர்
நிற்கு மோவொரு மருட்படை யருட்படையின்முன்
னிற்க வேதுமிணை னேதுகுட ரேதுநிலையே. ஆ. ௫௱௩

வேறு-அஞ்ஞன்மிவுவதை.

ஆவியை யொழியவெல்லா பழிந்தசப் பட்டவஞ்ஞப்
பாவியை யெந்தைபாதம் பணிகெனப் பகர்ந்தபோதே. (க)
அறிவில னெனும்பேரொன்று மழிவுற திருக்கஞானங்
கிறிவரும் படியென்றனை கிளர்ந்தெழு மென்னக்கேட்டே.

வேறு. ௨

இருடினிற் கிரகிமுன் னிற்குமோ பஞ்சதா ௨
னெரியின்முன் னிற்குமோ வெங்கனை யரவமுங்

கருடன்முன் னிற்குமோ ஞானமே வந்தாலுங்
கண்ணின்முன் னிற்குமோ வெண்ணுறுங் கன்மமே (௩)

அழியுமிக் காயமுங் கழியுமுன் னிளமையு
மன்புறுங் கிளைஞரு மின்புறும் போகமு
மொழியுமிச் செல்வமொன் றுகநீ யுன்னியோ
வுடையநா யகனைநெஞ் சுணர்வுறு தொழிவதே. (௪)

வேறு.

தேவர்களு முனிவர்களுஞ் செழுமறையும் பழையவொரு
மூவருமென் றிருந்தனையோ முழுமுதலென் றறிந்திலை
யோ. (௫)

இந்தவுல கத்தினிடர் கெடுப்பரிசிங் கெழுந்தருளி, வந்தவ
னென் றறிந்திலையோ மானிடனென் றிருந்தனையோ. (௬)

அதிரேக வழகுடையா னருளுடையான் றெருளுடையா
னெதிரேநின் றனையாவி யிப்பொழுதே யிழந்தனையே (௭)

வேறு.

நாய னாடி யார்க ணாவிக்கோறும்
பேய னும் பெருகச் சினஞ்செய்தே. (௮)

ஞான வேந்தன்வந் தென்னெதிர் நண்ணுற
லான வெல்லையிற் காணுமென் னுண்மையே. (௯)

என்ற வன்மொழி யெந்தைதி ருச்செவி
சென்ற வெல்லை சிரித்தருள் செய்யுமே. (௧௰)

உம்ப ரிம்ப ருவப்ப வொலிமிகுந்

தம்பெருந்தன்மை காட்டச்ச மைந்துமே. (௧௧)

வேறு.

பழுது படாமறை வானுளோர் பண்டையோர் மூவர்க ளின்றுகா, றழுது பெருவடி யஞ்ஞன்மே லாக விசைந்தன னண்ணலே. (௧௨)

வெருவரு நான்முக ஞதியாம் விண்ணவர் மண்ணவர் வேறுளோ, ரொருவர் பெருவடி யுணர்விலா னுச்சியின் மீது முதைத்ததே. (௧௩)

தென்றிசை யின்றுயர் தீர்த்ததாள் செய்தருள் ளும்படி தெரியுமோ, வின்றிசை கின்றன வல்லவோ வித்தலை மீதுமி ருக்கவே.

பெரியவர் தஞ்செயலாவதும் பிறரறிவாலறி வோமெனத், தெரியும தன்றது தெரிவதுஞ் செய்து முடிந்திடு திசை யிலே. ()

வேறு.

செறிதரும்பிறவி முறியவந்திறைவர் திருவிளங்குகழல ருளுநா, ளறிஞரென்றுமில ரவலரென்றுமில ரவர்சுதந்தர ம தடையவே. (௧௪)

பிறிவிலாதகுரு பரமனூர்தமருள் பெருகவேயுடைய திரு வினு, னறிவிலானுடனிவ் வகிலமாயையுயி ரடையநாறும் வகை யறைகுவாம். (௧௭)

வேறு.

சலிக்குமனத் தெழுச்சியறத் தவிர்த்திதம்விட் டகத்தே

சிலுத்தெழுமத்துடிப்புமறத்திரித்தடையக்கெடுத்தே (௧௮)
குறித்திடலற் றிடத்ததனைக் குறிப்பவரைக் கெடுத்தே
கறுத்தவிருட் டனைக்கதுவக் கரித்தனைவிட் டழித்தே. (௧௯)

குறித்தல்குறிப்பறுத்தலெனிக் குறிப்பழியக் குலைத்தே
மறித்தவிடத் ததிற்பரிசித் தகைத்தெனல்மற் றொழித்தே
தனிச்சுடரிச் சகத்தொளிரத் தனைக்கெடவக் கணத்தே
பனித்திவலைத் தடிப்பொழியப் பரச்சுடர்விட் டழித்தே

ஒருக்கிவிரித் ததிற்சுழல்வுற் றுழற்றுமிருட் டனைப்பே
ருருக்கனுதித் தலக்கணறுத் ததிற்பிரபையிட் டழித்தே.
செகத்தொழியத் திரித்தவிடத் தெளிர்ச்சிபறச் சிதைத்தே
விகற்பமறத் தனிச்சுடர்விட் டெரித்தயர்வைக் கெடுத்
தே. (௨௩)

கலுழ்ச்சிகளிப் பகத்தெளிவுட் கலக்கமிகுத் திகத்தே
செலுத்தல்திரித் தலற்றடையச் சிவச்சுடர்விட் டெறித்
[தே. (௨௪)

தனிற்பிறிதற் றிருக்குமருட் டனிச்சுடர்தற் பதத்தே
யினிப்பிறிதற் றிருக்கவிசைத் திடக்கணறுத் துவிட்டே,
சகப்புரணத் தடிப்படையச் சமித்திடலுற் றிடத்தே, சுகத்
தெளிவிற் சிவப்பிரபையிற் களிப்பதனைத் தொலை
த்தே. (௨௫)

வேறு.

காயாதிக ளேழு மாயாவிட யத்தே
கையற்றறி வின்கா ரணமாதிக ளேழும்
மாயாவிட யத்தே மாயச்சுக சற்சின்
மயபூரண மேதன் வடிவானது வந்தே. (உஎ)

கோதற் றமிர்தாகிக் கூறற்றுணர் வாகிக்
கூறற்கரி தாகிக் கோசப்புலன் மாறித்
தீதற்றவர் காணத் தேசொத்தினி தாகித்
தேசத்திசை மாறித் தேறித்தெளி வாயே. (உஅ)

வேறு.

எம்பிரானை வந்தெதிர்ந்த வஞ்ஞனிங் குருமலே
யும்பர்வானு ருதிரும லொன்றினைவ் வொளியொடே.
அல்லலான காமராச னுதியான சேனையு
மில்லவாகி ஞானரூப மாகியே யிலங்குமே. (கூ௦)

வேறு.

அறிவறி யாமைய ழிந்தனரே
யறிவறியாமை யழிந்தனரே.
பிறிவறி யாமைபி றழ்ந்தனரே
பிறிவறி யாமைபி றழ்ந்தனரே. (கூக)

காக்குழு ளத்தவ ராயினரே
காக்குழு ளத்தவ ராயினரே.

இருக்க முடிந்தவ ருட்பொருளே
யிருக்க முடிந்தவ ருட்பொருளே (௫௨)

வேறு

அழிந்தற மாயையி ருட்டெலா
மறிவுரு வாகநம் மண்ணலார்
மொழிந்தது மிங்கொரு வார்த்தையே
மூவுல கும்மொரு வார்த்தையே. (௫௫)

உழுந்துரு ளுந்துணைப் போதிலே
புணர்வுரு வாகநம் முச்சிமீ
தெழுந்தரு ளும்மிரு போதுமே
யேத்துவ தென்றுமெப் போதுமே. (௫௪) ஆ. ௫௯.

வெற்றிசாற்றல்.

அறிவிலா னுயிர்க் கிறுதி செய்தபி
னறிஞர் தம்பிரா னரிய தாளிணைப்
பிறிவி லாததம் படையை மீள்கெனப்
பெரிய சேனையுந் திரிய மீளுமே. (௧)

சாப மாகிவாழ் மாய மாபுரங்
கட்ட டங்கவே சுட்டல் கண்டுளோர்
தூய ஞானநற் சுடர்வி ளக்குமெய்ச்
சொரூப னர்ப்பதந் தொழுது ரைப்பரே. (௨)

வேறு.

அடியே முள்ளங் கறுப்பதுநல்
லம்போ ருகங்கள் சிவப்பதுமிப்
படியே வந்த பரனேநின்
பாதங் காட்டாப் பண்டன்றோ. (௬)

செய்யப் படுங்கன் மமுமுலகுஞ்
சிறியேம் வாழ்வுந் தீப்பிறப்பும்
பொய்யற் றிருப்ப தெம்பெருமான்
புவியிற்போதாப் போதன்றோ. (௭)

போக்கும் வரவும் பொன்றுடும்
புழுவார் நரகும் புசிப்பனவு
மாக்க மழிவுந் திருக்கடைக்கண்
ணணுகா திருக்கு மளவன்றோ. (௮)

சாவா கின்ற பெரும்பிணிக்குஞ்
சனிக்கும் பிணிக்குந் தடுயாற்ற
மாவா வென்றுன் றிருக்கரத்தா
லஞ்சே லென்னு மளவன்றோ. (௯)

முத்திக் கரசே! நீயெங்கு
முழுந்தி யிருப்ப விழுந்துழலும்
புத்திக் கிலேசந் தலைமிசைநின்
பொற்றாள் பொறியாப் போதன்றோ. (௰)

அந்தக் கரணம் புறக்கரண
மவத்தை பலவோ டகம்புறமார்ந்
தொந்தக் கலாதி யாவையுநின்
அணைத்தாள் சூடார் சொல்லன்றே. (௮)

சமயர் வெந்தச் சமயமுமெச்
சடங்குஞ் சவலைத் தனமுமெலா
மமையா ததுநின் றிருப்பவள
மலரா திருக்கு மளவன்றே. (௯)

வேறு.

எவ்வளவு மளவுபடா திருக்கை யுன்ற
னியல்பாகு மெங்களையெவ் வளவின் வைத்தா
யவ்வளவே யளவாகி யிருக்கை யெங்க
ளளவாகு நின்பெருமை யறிவா ரியாரே. (௰)

கடம்படுமிவ் வுடம்பானேங் காண மானேங்
கண்டிருக்குங் கரியானேங் காட்சி தீர்ந்த
திடம்படுபே ருணர்வானோ மெல்லா மானோந்
திருவிளையாட் டிருக்கின்ற செயலி தென்னே!. (௰௧)

அஞ்ஞான மென்னவுமங் கதனைப
வனேகபவ மென்னவுமவ் வயர்வு தீர்ந்த
மெய்ஞ்ஞான மென்னவுநின் றொருணீ தானே
விளையாட லேற்றுவித்த விரகி தென்னே!. (௰௨)

வேறு.

ஊழியாக பரவெளியா யோங்குசொரு பானந்தன்
வழியான செயலுறுதி வாழ்வன்றே வாழ்வாதல். (௳௩)

ஆ சாங.

---

திருமுடி சூட்டல்.

அடங்காமற் புலனுருக வடியிணையே வெளியான
திடங்காணக் கண்டிருக்குந் தெளிவன்றே தெளிவாதல்.
தோன்றும்வினை வழியொழியத் தோன்றாத பொருடோ
ன்றிச், சான்றதுவே தானுகுந் தற்சிவமாய் நிறைந்தது
வே. (௨)

வேறு.

எல்லையில்பவ வேலைவீர னெறிந்தவாண்மை யறிந்தெமர்,
சொல்லவில்லினி வல்லவாறடி தொழுகையென்றிவர் தொ
ழுவரே. (௩)

வீரஞானவி னோதனுண்மை விளம்புவார்கள் விளம்பவத்,
தீரனார்தமை யாளுநாயகர் செம்பொன்மெல்லடி சேர
வே. (௪)

வேறு.

ஞானசக்கிர மெங்குநீர் நடாத்துகென்று நல்கதர்
மானரத்ந முடிகவிப்ப வருளினனெம் மண்ணலே. (௫)

ஞானவானை தாள்கள்சூடி நாயன்மார்க டாமெலா
யானவான வதிசயங்கள் யாவர்கூற லாகுமே. (௬)

வேறு.

ஒழிவற்ற தன்சோதி யுருவத்தை நம்பா
உள்ளங்கை நெல்லிப்ப ழம்போல வுடையான்
மொழிவுற்ற விரகேயெ ணுநின்று மொழிவார்
முன்னோன் மலர்ப்பாத முடிமீது கொள்வார். (௭)

தன்செய்ய திருமேனி யேயன்றி வேறோர்
தானொன்றி லாவண்ண மெந்தம்பி ரானு
ரென்செய்த வாறேவி தென்னென்று மொழிவா
ரென்னே யிதென்னே யிதென்னே யிதென்பார். (௮)

பொருளேது மிவரன்றி வேறில்லை யென்பார்
போதங்கி ளர்செய்ய பொன்மேனி யென்பா
ரருளாகி யுருவந்த திருமேனி யென்பா
ரளவாவ தேயிந்த வருளென்று மொழிவார் (௯)

பொய்யோடு மெய்யேது மில்லாத பெருமான்
புவனிக்க ணெழுமைப்பு குந்தாள விதுவு
மையோமெ ரளவாவ தேயென்று மொழிவா
ரருளாவி தருளாவி தருளாவி தென்பார். (௰)

என்னாத பெருவாழ் வெமக்காய பெருமா
னெழுதப்ப டாமேனி யிதுகாண வெய்துந்

கன்ஞான இலையே நியமக்கென்று மொழிவார்
கண்ணல்ல கிர்ஞாத கண்ணென் றுரைப்பார். (௯௧)

ஏயாத வெமையாரு பெருமானை யென்னை
யிரும்போகம்முடல்கொண்டெவ் விடமெங்கு மெங்கும்
வாயாய்வ ழூத்தாதி ராகின்ற தென்பார்
மலர்ப்பாத மீதுள்ள மாலாகி வாழ்வார். (௯௨)

அருகே செலச்செல்லு வாரஞ்சி நிற்பா
ரஞ்சாது சென்றாலு மெஞ்சாது புல்லற்
கொருகோடி கையில்லை யேயென்று மொழிவா
ரொன்றானு மாராது காணென் றுரைப்பார். (௯௩)

வேறு.

அன்னையங் கவர்கள்செய லென்ன விங்கோன்
றறையுமள விலகண்டே யறியி னல்லா
லின்னேதங் குறைக்காலங் கழித்தா ரென்ன
லிக்கால மென்னையென வியம்ப லாற்றே. (௯௪)

செய்தருளும் படிக்கிதுவு மன்றே தீர்க்கை
தேசிகனுக் கொருபொருளோ திரித்தல் பின்னு
முய்தரவந் தருளுகழ லுவந்து வாழ்த்தி
யுடம்பெடுத்த பயன்சிலநா ளுறுதற் கன்றே. (௯௫)

முழுந்தியவன் பினர்மலர்த்தாண் முடிமேற் சூட
மூவர்களுந் தேவர்களு முழுதும் போற்ற
வெழுந்தருளி யிருந்தனனிங் கிறைவன் செய்த

வியப்பித்தவென் றிறைவிபதத் திறைஞ்ச லுற்றே. (௰௬)

எனக்கினிய சொருபானந் தனையெங் கோனை
வியத்திபவன் புகழினையே பியம்பா நின்ற
வனக்கினியென் செய்வேனென் றிறைவி யன்போ
டுச்சியைமோந் திடுந்தழுவு முவகை யுற்றே. (௰௭)

வேறு.

உடையசோ தியிலொர்மா சறவினு நிலனிலோ
ருருவமாய் வருமகா சொருபனு ருடையசி
னடையனு ருகியோ திடுதலே யுவமையா
யிதனைநீ பெறுகெனு விறைவிதா னருளியே. (௰௮)

திருமுடிசூட்டல்முற்றிற்று.

ஆ ௬௨௰௧.

---

களங்காட்டல்.

இலகுநா யகிதனு ரருளதாம் விழியினு
மிறைவனுர் செயவிதா மெனவினை யருளவே
யலகைபோ யடையவோ கினிகளா யருளினு
மநுதொழா வமர்செய்மா களமெலா மளவியே. (௧)

வேறு.

ஓராத மயலார்விட் டொழிந்த போதே
யுடனுதும் பிறவிதன்னை பொழிபாச் சுற்றம்

போராத துவந்துவங்கள் போதல் துக்கம்
பிணம்போகப் போமாபோற் காண்மின் காண்மின். (உ)

தொத்தறவே மனந்துஞ்சப் புலன்க ளைந்துந்
துஞ்சியவா நஞ்சுமிழ்வா யஞ்சுஞ் சேரக்
கத்தறவே யடிக்கழுத்தை யரிய மாய்ந்த
கறையனற்கட் செவியொத்தல் காண்மின் காண்மின் (ங)

மைப்படியு நறுங்குஞ்சி மாயை மாய
மாய்ந்தபடி யகிலமெரி மருவ வேரிற்
கப்புடனுங் கிளையுடனு மரநே ராகக்
கரிசறப்பட் டமையொத்தல் காண்மின் காண்மின். (ச)

அவிழாத பிணியாக்கை யுடைய வஞ்ஞ
னழிந்தபடி தான்சாவ வுலக மெல்லாங்
கவிழாதோ வென்னுமுரை யார்க்கு மேற்கக்
காமணிபோற் காட்டியவா காண்மின் காண்மின். [ரு]

நெய்விட்ட கருங்குழலார் தம்பால் வைத்த
நெஞ்சொழிந்தா ரைம்புலன்சே ரின்ப நேராக்
கைவிட்டா ரொழியாவா னந்த போகக்
காமுகராய் முடிந்தபடி காண்மின் காண்மின். (சா)

இணைப்பரிய பேரின்பந் தன்னின் மூழ்கி
இன்புறப்பட் டெவ்விடத்து மெக்கா லத்துங்
கணைப்பொழுது மின்பமிலா வுடம்ப ரின்பங்
கைவிடனீத் தமைகாட்டல் காண்மின் காண்மின் (எ)

செற்றவர்க டம்முடனுஞ் செறுதற் கென்றுஞ்
சிந்தைசெயுந் திறன்மறந்து சிறப்பே செய்யக்
கற்றவர்தம் முடனான பிறப்பை யெல்லாங்
கரிசறுத்த பெரியசினங் காண்மின் காண்மின். (௮)

வேறு.

பழிப்பாகி யொருகாலு மிதுகொண்டு கொளவுற்ற
பயனற்ற பொருள்விட்டெலா
மழித்தாலு மழியாத பொருள்பேணி யிவருற்ற
வாராமை காண்மின்களோ. (௯)

ஓராத மேபண்டு வடிவென்றி ருந்தார்க
ளுணர்வுற்று மொழிவுற்றதோ
நேராக விந்தங்கள் வடிவான திவர்நேதி
நேதித்தல் காண்மின்களோ. (௰) ஆக ௪௱௧.

களங்காட்டல் முற்றிற்று.

---

கூழடுவார்.

இந்தக்க ளன்பட்ட பாட்டிற்கு நேரொப்பி டத்தேடி டாதச
ஞர், சந்திக்க விதுபட்ட தொப்பப் பெருங்கூழ் சமைப்பா
ரை யழைமின்களே. (௧)

வேறு.

சாந்தியுள்வரு தாந்திவந்தடி தந்தார்திருவரு டன்றேட்ட
மாந்திநல்லறு மாலாய்க்கூழட வாரீர்கூழட வாரீரே. (௨)

வேறு.

பொறையே மிகவரு நிறைவி புகழ்புனை பொன்னி யருளினை யுன்னியக், குறையா நிறைவுறு திருவிகூழட வாரீர் கூழடவாரீரே. (௧௬)

மேலா ரொடுமிகு முறவி தீவினை மிகுவாரொடுவிடு துறவியம், மாலாரொடுவரு கருணைக்கூழட வாரீர்கூழட வாரீரே.

முடிவேதிதுவரு முதலேயிதனவொரு மொழியானளவிட முடியாத, வடிவேயடைவதோர் மதியேகூழட வாரீர்கூழட வாரீரே. (௧௭)

தன்போலெவரொடு மன்பேவிளைவதோர் தாயேயபவமெனு மாயாவிவ், வன்பேகெடவரு மன்பேகூழட வாரீர்கூழட வாரீரே. (௧௮)

பணியேசூடிய வணியேபாடிய பத்திகூடிய சித்திரர்க்,குணியேகோமள மொழியேகூழட வாரீர்கூழட வாரீரே. (சஙஅ)

வேறு.

ஒருமையென முன்வகுத்த சித்ரமாகிய
வுலகவுரு லையமைத்து லக்கையாகவிவ்
வுலகர்பழு வையொடித்தொ டித்துநீளெயி
றுதிர்செய்தரி சிபுடைத்தி டித்துமேலவர்
பெருமைமுடி யையடுப்பு வைத்துமேலுறு
பிணிசெய்யு டல்கடத்து லைச்செய்தாருயிர்
பெரியவிரு ளைநெரித்தெ ரிப்பதாய்வினைப்
பிதிர்செய்தமிர் தம்மினிச்ச மைக்கவாருமே (௧)

பாவையுல கமனைத்து முற்றெமாழுயிர்
படர்செயுட லெமெடுத்த ழித்துகோடியாடு
பகலொடிர வுபசித்தி னைத்திடாவகை
பவமெனிரு ளையறுத்து நித்தசோதிசெ
யரவமறை கள்சிரத்தி னிர்த்தமாடிய
வரியசொரு பனெனக்கு வைப்பெணுருயி
ரமலரடி யர்சிரத்தின் வைத்தடாமணி
யடிகள்பர வியுலக்கை குத்தவாருமே. (௨)

கூழடுவார் முற்றிற்று.

வேறு. சம்முலக்கை.

அருவரைய பிரஞ்சிரங்கொண் டருமறைக ளறியாத
சொருபரையாங் கண்டனமே சம்மேலோ சம்முலக்காய்.
மாயவடி வளவாகி மதியிலியா யுழல்வேற்குத்
தூயவடி சூட்டினர்காண் சம்மேலோ சம்முலக்காய். (௨)

பின்னமொழி வகைபுகுந்தென் பெருங்கருணைப் பெருமா
னார், சொன்னமொழி யொன்றேகாண் சம்மேலோ சம்மு
லக்காய். (௩)

நம்மாலே காண்கின்ற நாமும்போய் நாமாகிச்
சும்மாவே யிருந்தனங்காண் சம்மேலோ சம்முலக்காய். (௪)

வான்முடங்கு முலகுகளின் மன்றுசரா சரங்களெலாந்
தோன்றுமிடன் பிறிதுண்டோ சம்மேலோ சம்முலக்காய் ()

உலகாகி யுயிராகி யுணர்வாகி பொருபொருளை
*அலகாமை கண்டாமே சும்மேலோ சும்முலக்காய் (சு)

சாத்திரமென் செயநமக்குத் தக்கமய லறுத்தபிரான்
தோத்திரமே யமையுமது சும்மேலோ சும்முலக்காய். (எ)

வல்லவனை பரனருளை வாயார வாழ்த்தாதே
சொல்லுவது பிறிதுண்டோ சும்மேலோ சும்முலக்காய். (அ)

சத்தமா திகளுமெலாந் தற்சொருப மானபரி
சுத்தமாய் விட்டதுகாண் சும்மேலோ சும்முலக்காய். (கூ)

ஆ. சசகூ.

சும்முலக்கை முற்றிற்று.

கூழ்சமைப்பு.

மிடையுரு வினைகள்பறக்கள் மேவரு மறியார்பறக்கள்
அடையவு மிடித்திராகி னடங்கவு முலையுட்பெய்யீர். (௧)

இழைக்கும்வல் வினையெரித்திங் கென்பெலா முருக்கியுள்
ளங், குழைக்குமெய்ப் பத்திவந்து குறைவறக் குழைக்கச்
சொல்லீர். (௨)

செப்பாதே பலவுநின்று சிலுப்பற விருத்தியின்பந், தப்பா
மே பதத்தைப்பார்க்கச் சாந்தியை யிருத்திக்கொள்ளீர். (௩)

வேறு.

கனித னக்குநிகர் நெக்கு நெஞ்சுகள்
கரைந்து கன்னலொடு பாலு மொத் •

* அலங்காமை எனவும் பாடம்.

திணிதிணிப்படிச மைத்த போனக
மெடுத்து மெத்தென விருத்துமே. (ச)

சூழ்வார்ப்பு.

தன்மை யாரும்வகை மீளு மாளுடைய
தம்பி ரானரிய தாள்கடா
முன்மை யானுரிய வன்ப ரின்புறு
முளக்க லங்களை விளக்கியே. (ரு)

கடங்க ளோடுமுள மான மெய்ப்பரி
கலங்க ளோடு முளவாவிதா
னடங்க நீயமிர்து செய்கெ வென்னவரு
ளையை தானமிர்து செய்யுமே. (சு)

அணங்கு தன்றிரு வுளப்பிர சாதமது
வடைய வேநிறைய வயிறுவீ
றுணங்கு கின்றவுட லான பேய்களையு
முடைய நீரழையு முண்ணவே. (எ)

வேறு.

வெந்தவுடலம் விடும்பரிசு வீடுவினவி மிகப்பசித்து
வந்தபேய்க்கும் பசிதீர வாரீர்மெத்த வாரீரே. (அ)

நசித்தேனிந்தக் கணத்துள்ளே நசியாவண்ண நல்குமிகப்
பசித்தேனென்று பதைக்கின்ற பதைப்பைத்தணிக்க வா
ரீரே. (கூ)

துரியாதீதம் பதினலிற் றோன்றியெவர்க்குந் தோன்றுத

பெரியார்தம்மை யானென்னும் பிரமப் பேய்க்கும் வாரீரே.
ஒளிதங்கியமா மறையோதி யுள்ளபொருளை யுணராதே
பனிதஞ்சுமந்த கழுதையதாம் பனவப்பேய்க்கும் வாரீரே. ()
படித்துமறைகள் பொருட்படுத்திப் பயனினெட்டிப் பா
ராதே, வடித்தகிளிபோல் வருமாயா வாதப்பேய்க்கும்
வாரீரே. (௰௨)

வேதாகமங்கள் சொன்னபொருண் மெய்ம்மையறிவார் போன்
றிருந்து, பேதாபேதஞ் சாதிக்கும் பெரும்பேய்தனக்கும்
வாரீரே. (௰௩)

சுத்தப்பிரம மநாதிற்கத் தொள்ளைச்செவியி னுணர்வான
சத்தப்பிரம மென்றோதுஞ் சளப்பேய்தனக்கும் வாரீரே,
பணியப்படுவா ருள்ளிருக்கும் பரதேவதையைப் பாராதே
மணியைத்துலக்கிக் கிணுகிணென வரும்பேய்தனக்கும்
வாரீரே. (௰௫)

ஞானம்போலச் சிலசொல்லி நாட்டற்கரிய முத்தியினுந்
தானுஞ்சிவமும் பாசமுமென் னசைவப்பேய்க்கும் வாரீரே.
எட்டுக்கரும முட்டறச்செய் தெட்டுக்குணத்தோ டெழின்
முத்தி, வட்டத்திருக்கப் போமுத்தை வாய்ப்பேய்தனக்
கும் வாரீரே. (௰௭)

வெறுவாய்கொண்டு மென்றுமனவிகாரங்கொண்டு சிலபிதற்
றிப், பெறுவாரன்றி முத்திபெறும் பிடகப்பேய்க்கும்
வாரீரே. (௰௮)

மீட்டவி ரகினைப் பாடீரே
விளம்பிய தொன்றென்று பாடீரே
நாட்ட வருளினைப் பாடீரே
ஞானவி னோதனைப் பாடீரே. (௩)

என்னையொ ழித்தமை பாடீரே
யென்னாயி ருண்டமை பாடீரே
தன்னைய ளித்தமை பாடீரே
தத்துவ நாதனைப் பாடீரே (௪)

துன்னிநி றைந்தொழி யாதுநின்ற
சொரூபா னந்தச் சுடர்வையந்
தன்னி னடந்தமை பாடீரே
தானெனை யாண்டமை பாடீரே. (௫)

ஞானமு ஞேயமு ஞாதுருவு
நாடிட வொன்றின்றி நின்றதுநா
மான முழுநலம் பாடீரே
யல்லதில் லாதமை பாடீரே. (௬)

மதிரிவி யாவுழல் கின்றநமை
மாநுட னுபவ னுளவந்த
வதிசய மேகினைந் தாடீரே
யார்த்தெழுந் தார்த்தெழுந் தாடீரே. (௭)